# டால்டா வனஸ்பதி

# எல்லா சமையல்களுக்கும் மிகச்சிறந்தது

"நான் இப்பொழுது டால்டா உபயோகித்துச் சமைப்பதால் என் குடும்பத்தினர் ஒருபொழுதும் நல்லுணவைச் சாப்பிடத் தவறுவதில்லை"



சிறந்த

## தின்பண்டமான சேம்பு இலை வடை

**தயாரிக்க டால்டா செய்முறைக் குறிப்பைத் தவறவிடாதீர்கள்!**

½ கப் கடலைமாவு, சிட்டிகை பேகிங் பௌடர், மஞ்சள் பொடி, ருசிக்குத் தேவையான உப்பு இவைகளைக்கலந்து கெட்டியான தோசை மாவுப்பதத்திற்கு தயாரித்துக் கொள்ளவும். சேம்பு இலையில் மாவைப் பரத்தி துருவிய தேங்காயைத் தூவவும். இலையின் ஓரத்தை மடக்கி சுருட்டவும். பிரிந்துவிடாமலிருக்க [illegible]. ½ மணி நேரம் ஆவியில் வேகவும். பரிமாறுவதற்கு முன் துண்டுகளாக குறுக்கே வெட்டி குழிவு குறைந்த வாணலியில் இட்டு டால்டாவில் பொரிக்கவும்.

டால்டா சமையல் புத்தகம் தமிழ், வங்காளி, ஹிந்தி, ஆங்கிலம் என்ற பாஷைகளில் இப்பொழுது கிடைக்கிறது—300 செய்முறைக் குறிப்புகள்—விலை ரூ. 1/-. தபால் செலவு அணா 10 தனி. இன்றே எழுதுங்கள்:

தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்
தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1




# டால்டா

எல்லாச் சமையல்களுக்கும் உகந்த ஆதர்ச சமையல்-வஸ்து

10, 5, 2, 1, பவுண்டு டின்களில் கிடைக்கிறது

HVM. 201-50 TM

# கல்கி பொருளடக்கம்

மலர் 13 இதழ் 12 | 1953 அக்டோபர் 18 | விஜய ஐப்பசி 2



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

# 14 நாட்களில் மக்ளீன்ஸ் உதவியால் அதிக வெண்மையான பற்கள்




இப்பொழுது 14 தினங்களுக்குள் அதி வெண்மையான பற்களை நீங்களும் பெறலாம். இதை உறுதியாகக் கொள்ளுங்கள் — பிரதிதினமும் — தினசரி இருமுறை உங்கள் பற்களை நன்றாக மக்ளீன் செய்யுங்கள். ஆரம்பமுதலே, மக்ளீனிலுள்ள விசேஷ பொருள்கள், மிருதுவாகவும் அபாயமில்லாமலும், உங்கள் பற்களில் உள்ள அவலட்சணமான கறைகளை போக்கி, அவைகள் இயற்கையான ஒளி வீசச் செய்வதைக் காண்பீர். 14 நாட்களுக்குள் — அல்லது அதற்கும் குறைவாகவேகூட நீங்கள் பெருமைப்படக்கூடிய பற்களை அடைவீர்கள் — மக்ளீன் வெண்மையான பற்கள், ஆரோக்கியமான பற்கள்.

க்ளோரோபில் சேர்த்ததும் கிடைக்கும்.




## மக்ளீன்ஸ்

### பெராக்ஸைட் பற்பசை

### பற்களை அதிக வெண்மையாக்குகிறது.

MTY 32-TAM



மலர் 13 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 12

# சிறிய மனிதரின் பெரிய விஷமங்கள்!

உலகத்தில் உள்ள சிறந்த இலக்கியங்களில் ஒன்றான அராபியக் கதைகளில் அழியாத இடம் பெற்ற மாலுமி சிந்பாத் என்பவனைப் பற்றி அறியாதவர்கள் இருக்க முடியாது.

அந்த மாலுமி பிரயாணம் செய்து கொண்டிருந்த படகு நொறுங்கியதால், அவன் அருகில் இருந்த தீவை அடைந்தான்.

மேற்படி தீவுக்குள் அவன் சென்றபோது, அங்கு அவன் உடல் தளர்ந்து நடக்க முடியாமலும் பேச முடியாமலும் தவித்துக் கொண்டிருந்த ஒரு கிழவனைக் கண்டான்.

அவனது நிலையைக் கண்டு இரங்கிய சிந்பாத், அந்தக் கிழவனின் வேண்டுகோளுக்கு இணங்க அவனைத் தோளில் தூக்கிக் கொண்டான்; ஆற்றைக் கடந்து அவனை அக்கரை கொண்டுபோய்ச் சேர்த்தான்; தோளிலிருந்து கிழவனை இறக்கி விடுவதற்காகக் குனிந்தான்.

ஆனால், கிழவன் கீழே இறங்க மறுத்து, இரும்பு போன்ற தன் கால்களால் சிந்பாத்தின் கழுத்தை இறுக்கிக் கொண்டான். அவனைத் தான் ஏறிச் செல்லும் வாகனமாகக் கருதினான். சவுக்கால் அடிப்பதுபோல் தன் கால்களால் குத்தி, சிந்பாத்தைத் தன் இஷ்டப்படி பல இடங்களுக்கும் தூக்கிக் கொண்டு போகச் செய்தான். அவன் தோள்மீது உட்கார்ந்தபடியே மரங்களில் உள்ள பழங்களைப் பறித்துத் தின்று அட்டகாசம் செய்தான்.

அவ்வாறு நன்றிகெட்ட, கொடிய கிழட்டு ராட்சதனிடம் அகப்பட்டுக் கொண்ட சிந்பாத் கடைசியில் அவனுடைய இரும்புப் பிடியிலிருந்து உயிர் தப்பித் திரும்பி வருவது பெரும்பாடாகி விட்டது.

அதுபோலவே, யுத்தத்திலிருந்து கொரியாவைக் காப்பாற்றுவதற்காக அதன் உதவிக்குச் சென்ற ஐக்கிய நாடுகள் சபை அந்த நாட்டின் கிழட்டுத் தலைவரான ஸிங்மென் ரீயிடம் இப்போது அகப்பட்டுக் கொண்டு விழிக்கின்றது.

தென் கொரியா வாழ்வதா வீழ்வதா என்ற நெருக்கடி ஏற்பட்டபோது அதற்கு உதவி புரிவதற்காகப் பல தேசங்களிலிருந்தும் துருப்புகளை அனுப்பிய ஐக்கிய நாடுகள் சபையின் கழுத்தைச் ஸிங்மென் ரீ இறுக்கிப் பிடித்துக் கொண்டிருக்கிறார்.

அந்தச் சபையின் தீர்மானத்துக்கு இணங்கவே, இந்தியாவின் தலைமையில் ஸ்வீடன், ஸ்விட்ஜர்லாந்து, போலந்து, செக்கோஸ்லவேகியா முதலிய தேசப் பிரதிநிதிகள் அடங்கிய நடுநிலைமைக் கமிஷன் கொரியாவுக்குச் சென்றது.

தென் கொரியாவில் உள்ள யுத்தக் கைதிகள் விஷயமாக மேற்படி சபையில் நிறைவேறிய தீர்மானத்தை அனுசரித்தே ஆயிரக்கணக்கான இந்தியத் துருப்புகள் கொரியாவுக்குச் சென்றுள்ளன.

அந்தப் பெரும் பொறுப்பை ஏற்றுக் கொண்ட இந்தியாவுக்கு அதனால் எவ்வித லாபமும் இல்லை; கஷ்ட நஷ்டங்களே அதிகம்.

அப்படியிருந்தும், யுத்தம் நின்று சமாதானம் ஏற்பட வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடனேயே பாரத நாடு வெகு தொலைவில் உள்ள கொரியாவுக்குத் தன் இராணுவ வீரர்களை அனுப்ப இசைந்தது.

உலக சமாதானத்துக்குத் தன்னால் இயன்ற தொண்டைச் செய்ய வேண்டும்; கஷ்டமான பொறுப்பைத் தட்டிக் கழிக்காமல் சர்வதேச சபையின் தீர்மானத்துக்கு மதிப்புக் கொடுக்க வேண்டும் என்ற சீரிய எண்ணத்துடனேயே இந்தியா மேற்படி பொறுப்பை ஏற்றுக் கொண்டது.

இந்நிலைமையில், கொரியாவுக்குச் சென்றுள்ள இந்தியப் படைகளைத் தென் கொரியாத் தலைவர் ஸிங்மென் ரீ தன் விரோதிகளாகக் கருதுவது விந்தையாக இருக்கிறது. அவரது கூற்றுக்குத் தகுந்தவாறு அமெரிக்க அதிகாரிகளில் சிலர் தாளம் போடுவது அதைக் காட்டிலும் ஆச்சரியமாக இருக்கிறது.

தென்கொரியா மீது வடகொரியா படையெடுத்ததை இந்தியாவைக் காட்டிலும் வன்மையாகக் கண்டித்த நாடு வேறு எதுவும் இல்லை.

தென் கொரியாப் போரில் காயம் அடைந்தவர்களுக்கு இந்தியர்கள் அடங்கிய வைத்திய கோஷ்டியினர் மிகுந்த உதவி புரிந்துள்ளனர்.

பயங்கரமான கொரியாப் போரில் நிகழ்ந்து வந்த கரபலிகளைத் தடுத்து, சமாதானம் ஏற்படும்படி செய்வதற்கு இந்தியாவே அஸ்திவாரம் அமைத்தது என்று கூறலாம்.

அப்படியிருக்க, இந்தியா தங்களுக்கு விரோதி என்றும் கம்யூனிஸ்டுகளை ஆதரிப்பதாகவும் ஸிங்மென் ரீ கூற முற்பட்டிருப்பது அபாண்டமும் அறியாமையும் ஆகும்.

இந்தியத் துருப்புகளை ஸிங்மென் ரீ கண்டிப்பதையும், அவ்விஷயமாக அமெரிக்க சர்க்காரின் போக்கையும் "வாஷிங்டன் போஸ்டு," மாஞ்செஸ்டர் கார்டியன்" போன்ற பிரபல அமெரிக்க, பிரிட்டிஷ் பத்திரிகைகள் கூட வன்மையாகக் கண்டித்திருக்கின்றன.

தென் கொரியாவில் உள்ள யுத்தக் கைதிகளிடையே ஸிங்மென் ரீயின் ஏஜெண்டுகளும் அமெரிக்காவின் ஏஜெண்டுகளும் இருக்கிறார்கள்; அவர்கள் கைதிகளிடையே கலகத்தைத் தூண்டி, அமைதியைக் குலைத்து வருகிறார்கள் என்றெல்லாம் பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன.

தென் கொரியாவில் அமெரிக்க அதிகாரிகள் நடந்து கொள்ளும் விபரீதத்தை ஸ்வீடன்போன்ற நடுநிலைமை நாடுகளும் கண்டித்துள்ளன.

கொரியாப் போர் நின்று, நிரந்தரமான சமாதானம் ஏற்படுவதற்காக எல்லா நாடுகளும் ஏகோபித்து முயற்சிக்க வேண்டிய இச்சமயத்தில், அமெரிக்கப் பிரமுகர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாகப் பேசுவது விபரீதமாக இருக்கிறது. அவர்களின் கூற்று சமாதானத்தில் உண்மையான அக்கறை இருப்பவர்கள் பேசும் பேச்சாக இல்லை. சமாதானத்துக்கு உலைவைக்கும் விஷமிகளின் துவேஷப் பிரசாரமாகவே இருக்கிறது.

அதாவது தற்போது ஐ. நா. சபைக்கும் உலக சமாதானத்துக்கும், தென் கொரியாவும் அமெரிக்காவுமே முட்டுக்கட்டைகளாக இருந்து வருகின்றன என்று கூசாமல் கூறலாம்.

சிறிய மனிதரான ஸிங்மென் ரீயின் அட்டகாசங்களையும் அபாண்டமான புரட்டுகளையும் அமெரிக்காவும் ஐ. நா. சபையும் பகிரங்கமாகக் கண்டிக்க வேண்டும்; தென் கொரியா சர்க்காரின் வெட்கக்கேடான போக்கை மாற்றுவதற்கு உடனே முன் வரவேண்டும் என்று பண்டித ஜவாஹர்லால் நேரு வலியுறுத்தி யிருக்கிறார்.

உலக சமாதானப் பிரச்னை ஊசலாடிக் கொண்டிருக்கையில், பொறுப்பு வாய்ந்த சர்க்கார்கள் விஷமத்தனமான காரியங்களில் ஈடுபடுவதைக் காட்டிலும் அக்கிரமம் வேறு இருக்க முடியாது.

## அபாய வழி!



பாகிஸ்தான் பிரதம மந்திரி முகம்மது அலிக்கு நாலா பக்கங்களிலும் தொல்லைகள் அதிகமாகி வருகின்றன.

# இலங்கை இந்தியரும் புதிய பிரதமரும்

இலங்கைப் பிரதமர் ஸ்ரீ டட்லி சேனநாயகா தமது பதவியை ராஜிநாமா செய்வார், ராஜிநாமா செய்யத்தான் போகிறார், ராஜிநாமா செய்ய உறுதிகொண்டு விட்டார் என்றெல்லாம் சில தினங்களுக்கு முன் இலங்கையிலிருந்து செய்திகள் வந்த வண்ணமாக இருந்தன. அதன் காரணமாக இலங்கை அரசியலில் எதிர்பாராத நெருக்கடியான நிலைமையும் ஏற்பட்டது.

கடைசியில் பொது ஜனங்களின் கோரிக்கைக்கு இணங்க, தாம் பதவியை ராஜிநாமா செய்வதில்லை என்று தீர்மானித்திருப்பதாக ஸ்ரீ டட்லி சேனநாயகா நேரடியாக அறிவித்தபின்னர் தான் இலங்கை முழுவதும் ஏற்பட்டிருந்த பரபரப்பு ஒருவாறு அடங்கியது.

எனினும் தாம் அவ்வாறு அறிவித்த இரண்டொரு வாரத்துக்குள் ஸ்ரீ டட்லி சேனநாயகா இலங்கைப் பிரதமர் பதவியை ராஜிநாமா செய்து விடும்படி நேர்ந்ததை யாருமே எதிர் பார்த்திருக்க மாட்டார்கள்.

இலங்கைப் பிரதமராக இருந்த ஸ்ரீ டான் ஸ்டீபன் சேனநாயகா காலஞ் சென்ற பின், நாற்பத்திரண்டு வயதுள்ள அவரது புதல்வர் ஸ்ரீ டட்லி சேனநாயகா அப்பதவியை ஏற்றுக் கொண்டதற்குப் பொது மக்களின் பேர் அபிமானமே காரணம். இலங்கையின் சுதந்திரத்துக்காக அவரது தந்தை சிறை சென்று தியாகம் செய்தவர். எனவே அவரது புதல்வரான ஸ்ரீ டட்லி சேனநாயகாவும் அவரது கட்சியினரும் பிறகு நடந்த பொதுத் தேர்தலில் பெரும் வெற்றி பெற்றதைக் குறித்த ஆச்சரியப் படுவதற்கில்லை.

சென்ற பத்தொன்பது மாத காலமாக இலங்கைப் பிரதமர் பதவியிலிருந்த ஸ்ரீ சேனநாயகா இப்போது விடுத்துள்ள அறிக்கையில், அதிக அலுவல்கள் காரணமாகத் தமது உடல் நிலை கெட்டு விட்டதே ராஜிநாமாவுக்குக் காரணம் என்று விளக்கியுள்ளார்.

நேர்மையும் தெய்வ பக்தியும் உள்ள ஸ்ரீ டட்லி சேனநாயகா பதவியி லிருந்து விலக நேர்ந்தது வருந்தத் தக்கது. அவரது உடல்நிலை கூடிய விரைவில் சீர் அடையப் பிரார்த்திக்கிறோம்.

ஸ்ரீ டட்லி சேன நாயகாவின் ஸ்தானத்தில் சர் ஜான் கொத்தலாவலை புதிய பிரதமராகப் பதவி ஏற்றுக்கொண்டுள்ளார். சர் கொத்தலாவலை சென்ற இருபத்து மூன்று ஆண்டுகளாக இலங்கைச் சட்ட சபையில் அங்கம் வகித்து வருகிறார்; பதினெட்டு வருஷங்கள் மந்திரி பதவி வகித்துள்ளார். எனவே இன்றைக்கு இலங்கை அரசியலில் அவரைக் காட்டிலும் அனுபவம் வாய்ந்தவர் வேறு எவரும் இல்லை. குறிப்பாக இலங்கை இந்தியர் பிரச்னையைத் திருப்திகரமாகத் தீர்க்கும் விஷயத்தில் சர் ஜான் கொத்தலாவலையின் நீண்டகால அனுபவம் அவருக்கு உறுதுணையாக இருக்குமென நம்புகிறோம். பண்டித ஜவாஹர்லால் நேருவும் ஸ்ரீ டட்லி சேனநாயகாவும் சந்தித்துப் பேசியதன் பலனாக இலங்கைக்கும் இந்தியாவுக்கும் ஏற்பட்டுள்ள சுமுகமான உறவு, புதிய பிரதமர் சர் கொத்தலாவலையின் பதவி காலத்தில் இன்னும் பலம் அடையும் என்று எதிர் பார்க்கிறோம்.



சர் ஜான் கொத்தலாவலை

சென்ற சில காட்களாக இலங்கை இந்தியர்கள் விஷயத்தில் இலங்கை மந்திரிகளின் மனம் மாறி வருகிறது. அரிசிப் பஞ்சம் காரணமாக ஏற்பட்ட ஹர்த்தாலில் இந்தியர்கள் கலந்து கொண்டு இலங்கை சர்க்காரைத் திணற அடிக்காததே மந்திரிகளின் மனமாற்றத்துக்குக் காரணம். மேற்படி ஹர்த்தாலில் கலந்து கொண்டு காட்டைச் சீர்குலைக்காம லிருந்த இலங்கை இந்தியக் காங்கிரசுக்கு, அப்போது போக்கு வரத்து மந்திரியாக இருந்த சர் ஜான் கொத்தலாவலை நன்றி தெரிவித்ததை அதற்குள் யாரும் மறந்திருக்க முடியாது. இப்போது இலங்கைப் பிரதமராக வந்துள்ள சர் கொத்தலாவலை, பிரஜா உரிமைக்காகத் தர்ம நியாயமான முறையில் போராடி வரும் இந்தியர்களுக்கு நீதி வழங்குவதன் மூலம் தமது நன்றியைச் செயலில் காட்டுவாராக!

# கடற் படைக் காட்சி

சில தினங்களுக்கு முன் சென்னையை அடுத்துள்ள வங்காளக் குடாக் கடலில் திடீரென்று புயல் அடித்தது. கடலில் சென்று கொண்டிருந்த ஏராளமான செம்படவர்கள் கரை வந்து சேர முடியவில்லை. புயலினால் அவர்கள் வெகு தூரம் அடித்துச் செல்லப்பட்டனர். அதிர்ஷ்டவசமாக அச்சமயம் சென்னைத் துறைமுகத்தில் இந்தியக் கடற்படையைச் சேர்ந்த கப்பல்கள் நங்கூரம் போட்டிருந்தன. உடனே மேற்படி கப்பல்கள் புறப்பட்டுச் சென்று சுமார் மூந்நூறு செம்படவர்களைக் காப்பாற்றின. அந்தக் கப்பல்கள் இராவிடில் அத்தனை பேரும் உயிரிழக்கும்படி நேர்ந்திருக்கும். அப்போது அக்கப்பல்கள் செய்த பேருதவியை ராஜாஜி முதலிய தலைவர்கள் பாராட்டியது ஞாபகம் இருக்கலாம்.

இவ்வாறாக சமாதான காலத்திலும் சரி, யுத்த காலத்திலும் சரி, இந்தியக் கடற்படை எவ்வளவோ அரிய சாகசங்களைச் செய்திருக்கிறது.

ஒரு சமயம் இந்தியக் கடற்படை மத்திய தரைக் கடலில் ஒத்திகை நடத்திக் கொண்டிருந்தது. அப்போது கிரீஸில் ஏற்பட்ட பூகம்பம் காரணமாக ஜனங்கள் மகத்தான கஷ்டங்களுக்கு உள்ளாயினர். அவர்களுக்கு உடனே வைத்திய உதவி தேவையாக இருந்தது. அப்போது நமது கடற்படையே அந்நாட்டுக்கு வைத்தியப் படை செல்லுவதற்குப் பேருதவி புரிந்தது.

இவ்விதமாக எந்தத் திசையிலிருந்து அபயக் குரல் வந்தாலும், நமது கடற்படை அவ்விடத்துக்கு விரைந்து சென்று உதவி புரியத் தயங்கியதில்லை. கடற்படையின் அத்தகைய முக்கிய தர்மத்திலிருந்து நமது கடற்படை வழுவியதே இல்லை.

* * *

இந்தியக் கடற்படை உருவாகி இருபது வருஷங்களே ஆகின்றன. எனினும் இந்தியக் கடற்படையினர் உலகத்தில் உள்ள எந்தக் கடற்படைகளுக்கும் சளைத்தவர்கள் அல்ல என்பதை எத்தனையோ தடவைகளில் நிரூபித்திருக்கிறார்கள்.

சென்ற மகா யுத்தத்தின் போது இந்தியக் கடற்படை உருவாகி ஐந்து ஆண்டுகளே ஆகியிருந்தன. அப்படியிருந்தும் அந்தப் படை ஏழு கடல்களிலும் பெற்ற வெற்றிகளை, தளபதி அந்தோணி கிம்மின்ஸ் போன்ற பிரபல பிரிட்டிஷ் கடற்படைத் தளபதிகள் வெகுவாகப் புகழ்ந்து பாராட்டி யுள்ளனர்.

மத்தியதரைக் கடலிலும் இந்திய மகா சமுத்திரத்திலும் பகைப் படைகளை எதிர்த்து இந்தியக் கடற்படை பெற்ற வெற்றிகள் சரித்திரத்தில் இடம் பெற்றிருக்கின்றன. இத்தாலி, ஜெர்மனி, ஜப்பானியக் கடற்படைகள்கூட இந்தியக் கடற்படையினிடம் பல இடங்களில் தோல்வி யடையும்படி நேர்ந்தது.

இந்தியா உலகத்தில் உள்ள பிரம்மாண்டமான தேசங்களில் ஒன்று. அதன் கடற்கரை மூவாயிரத்து நூறு மைல் தூரம் இருக்கிறது. எனவே, இதையெல்லாம் உத்தேசிக்கும் போது இந்தியக் கடற்படை உருவத்தில் பெரியது என்று கூற முடியாது. அது இன்னும் எத்தனையோ மடங்கு பெருக வேண்டும். எனினும் அதன் பிரதாபமும் திறமையும் உலகத்தில் உள்ள மற்றக் கடற்படைகளுக்குக் குறைந்தது அல்ல என்பது சகலரும் ஒத்துக் கொண்ட விஷயம்.

இவ்வாறு இந்தியக் கடற்படை ஒரு சில வருஷங்களுக்குள் கீர்த்தி பெற்று விளங்குவதில் புதுமை எதுவும் இல்லை.

பல நூற்றாண்டுகளுக்கு முன் இந்தியக் கடற்படை அடைந்த வெற்றிகள் காரணமாக இந்திய சாம்ராஜ்யம் மலேயா, இந்தோ சீனா, இந்தோனேஷ்யா வரையில் பரந்து கிடந்தது. சந்திரகுப்த மௌரியன் காலத்தில் மந்திரியாக இருந்த சாணக்கியர் தமது அர்த்த சாஸ்திர நூலில் இந்தியக் கடற்படை அடைந்திருந்த மகோன்னத நிலையைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். சந்திர குப்தனின் ராஜ்யத்துக்கு விஜயம் செய்த கிரேக்கத் தூதரான மெகஸ்தனீஸும் இந்தியக் கடற் படையைப் பற்றிக் கூறியிருப்பது சரித்திரம் கண்ட உண்மை. மௌரிய சகாப்தத்திலேயே இந்தியாவில் ஏராளமாகக் கப்பல்கள் நிர்மாணிக்கப் பட்டன என்பதற்கு ஆதாரங்கள் இருக்கின்றன.

காலக்கிரமத்தில் இந்தியா பல துறைகளிலும் க்ஷீண தசையை அடைந்தது போல், கடற்படை பலத்திலும் அதன் பெருமை குன்றியது. அவ்வாறு இழந்த பெருமையையே இப்போது மறுபடியும் சுதந்திர இந்தியா பெற்று வருகிறது.

இந்தியக் கடற்படையின் வருஷாந்தரக் கொண்டாட்டம் சென்ற வாரம் பம்பாய்த் துறைமுகத்தில் விமரிசையாக நடைபெற்றது. இந்தியா ஜனாதிபதி பாபு ராஜேந்திரரும் பிரதம மந்திரி ஜவாஹர்லால்ஜியும் அதில் கலந்து கொண்டனர். பிரபல போர்க் கப்பலான "ஐ. என். எஸ். டில்லி" உள்பட இருபத்தாறு கப்பல்கள் அணிவகுத்து நின்று நமது அருமைத் தலைவர்களுக்குத் தங்கள் மரியாதையைச் செலுத்திக் கொண்டன.

நவீன உலகில் எந்த நாட்டுக்கும் கடற்படை இன்றியமையாத அம்சங்களில் ஒன்றாக இருக்கிறது. பரந்த கடற்கரை உள்ள இந்தியாவில் பகைவர்கள் பிரவேசிக்காமல் தடுப்பதற்கு மாத்திரமின்றி, இந்தியாவின் கப்பல் வர்த்தகம் அபிவிருத்தி அடைவதற்கும் இந்தியக் கடற்படை பேருதவி அளிக்க முடியும். சுதந்திர இந்தியா சுபிட்ச இந்தியாவாக விளங்குவது பெரிதும் இந்தியக் கடற்படையின் பெருமையைப் பொறுத்திருக்கிறது என்பது மிகையாகாது.

சுதந்திர இந்தியாவின் பாதுகாப்புக்கும், முன்னேற்றத்துக்கும், சுபிட்சத்துக்கும் இன்றியமையாத இந்தியக் கடற்படை, சுதந்திரம் பெற்ற சில ஆண்டுகளுக்குள் ஆச்சரியகரமாக அபிவிருத்தி அடைந்திருக்கிறது. அது எதிர்காலத்தில் மேன்மேலும் பெருகிப் பண்டையப் பெருமையை ஸ்தாபிக்கும் என எதிர்பார்க்கிறோம்.

## காந்தி மண்டபம் - மங்களத் துவக்க விழா

கிண்டியில் ராஜபவன் தோட்டத்தில் காந்தி மகாத்மாவின் ஞாபகார்த்தமாக நிர்மாணிக்கப் படப்போகும் பிரார்த்தனை மண்டபத்துக்கு அஸ்திவார நாட்டு விழா நாளது அக்டோபர் மாதம் 17-ந் தேதி சனிக்கிழமை விஜயதசமித் திருநாளில் காலை 7-30 மணிக்குத் துவக்கமாகி நடைபெறும்.

சென்னை கவர்னர் கனம் ஸ்ரீபிரகாசா அவர்கள் அஸ்திவாரம் நாட்டுவார்கள்.

முதன் மந்திரி ராஜாஜி முதலிய தலைவர்கள் விழாவில் கலந்து கொள்வார்கள்.

பொதுமக்கள் மேற்படி வைபவத்துக்குத் திரளாக விஜயம் செய்து விழாவைச் சிறப்பிக்கக் கோருகிறோம்.

அடையாறு - கிண்டி சாலையில், டாக்டர் அளகப்பச் செட்டியார் டெக்னலஜி கலாசாலைக்கு எதிரே யுள்ள வாசல் வழியாக ராஜபவன் தோட்டத்துக்குள் வருவது வசதியாக இருக்கும்.

மகாத்மா காந்தி ஞாபகார்த்தக் கமிட்டியார்.

# “தண்ணீர்ப் புகார்—அவசரம்”

இறைவன் அருளாலும் பெரியோர்களின் தவத்தினாலும் இவ்வாண்டில் ஏராளமாக மழை பெய்திருக்கிறது; இன்னும் பெய்யும் என்பதற்கு அறிகுறிகள் காண்கின்றன. மேட்டூர் தேக்கத்தில் 110 அடிக்கு மேலே தண்ணீர் நிறைந்து ததும்பிக் கொண்டிருக்கிறது. அப்படியிருந்தும் தஞ்சை ஜில்லாவில் இவ்வாண்டு இரண்டு தடவை வயல்களுக்குத் தண்ணீர் இல்லாமல் காய்ந்து போகும்படி நேரிட்டது. முதல் முறை புகார் செய்யப் பட்டிருந்தும் இரண்டாவது தடவை செப்டம்பரிலும் அவ்விதமே திரும்பவும் நேர்ந்தது. இரண்டாவது முறை நேர்ந்த தண்ணீர்த் தட்டைக் குறித்துச் சென்ற "கல்கி" இதழில் ஒரு கார்ட்டூன் படம் வெளியாகியிருந்தது. இந்த இதழில் அதைப் பற்றி ஒரு வட்ட மேஜைக் கடிதம் வெளியாகியிருக்கிறது.

என்ஜினியரிங் இலாகா உத்தியோகஸ்தர்கள் ஏன் இப்படிச் செய்கிறார்கள் என்பதை எண்ணிப் பார்த்தோம். ஏட்டுக் கல்வி மட்டும் கற்று என்ஜினியர்களாக வந்து விட்டதின் பலன்தான் என்று முடிவு செய்ய நேர்ந்தது. என்ஜினியர் வேலைக்கு வரும் ஒவ்வொருவரும் ஐந்து ஏக்கரா நிலத்தில் சொந்தமாக உழுது பயிரிட்டு அநுபவம் பெற்று வர வேண்டும் என்று ஏற்படுத்தியிருந்தால், விவசாயிகளின் கஷ்டங்கள் அவர்களுக்கு நன்றாகத் தெரிந்திருக்கும். நிற்க.

நம் இராஜ்யத்தின் புதிய சீப் என்ஜினியர் எழுதியுள்ள பின்வரும் கடிதத்தை மிக்க மகிழ்ச்சியுடன் வெளியிடுகிறோம்:— பி. டபிள்யூ. டி.

சேப்பாக்கம், சென்னை 11-10-53.

"கல்கி" 11-10-53 தேதி இதழில் மேட்டூர் அணைக்கட்டைப் பற்றி ஒரு கார்ட்டூன் வெளியாகியிருப்பதைக் கண்ணுற்றேன். ...... தஞ்சை ஜில்லாவுக்குத் தண்ணீர் விநியோகம் செய்வதன் சம்பந்தமான அலுவல்கள் தஞ்சை சர்க்கிள் சூபரின்டென்டிங் இஞ்ஜினீர், எக்ஸிகியூடிவ் இஞ்ஜினீர்கள் இவர்களால் கவனிக்கப்படுகின்றன. இவர்கள் யாவரும் தஞ்சாவூரிலேயே இருக்கிறார்கள். இவர்களை ரயத்துகள் சுலபமாகப் பார்த்துப் பேசலாம்.

கார்ட்டூனில் காணும் புகார்கள் சென்ற செப்டம்பர் மாத நிலைமையையே குறிப்பிடுகின்றன என்று நினைக்கிறேன். நான் அக்டோபர் மாதம் இரண்டாம் தேதிதான் உத்தியோகம் ஏற்றுக் கொண்டேன். நான் பதவி ஏற்ற பிறகு, தண்ணீர் விநியோக விஷயமாக ரயத்துகளுக்கு யாதொரு கஷ்டமும் ஏற்படாமல் இருப்பதற்கான சகல முறைகளையும் கைக் கொள்ளும்படி மேற்படி அதிகாரிகளுக்குக் கட்டளையிட்டிருக்கிறேன். ஆனால் தண்ணீர் இல்லாமல் கஷ்டப்படும் ரயத்துகள் தங்கள் கஷ்டங்களைத் தாமதமின்றி உடனே தஞ்சை சர்க்கிள் சூபரின்டென்டிங் இஞ்ஜினீயருக்கு அறிவித்து விட்டால் இஞ்ஜினீரிங் இலாகா தன் அலுவல்களைச் சரிவரச் செய்வதற்கு மிகவும் வசதியாக இருக்கும்.

ரயத்துகள் தங்களுடைய கோரிக்கையைக் குறிப்பிட்டு அனுப்பும் தபால் கார்டின் மீது "தண்ணீர்ப் புகார் — அவசரம்" என்று எழுதினால், உடனே தகுந்த நடவடிக்கை எடுக்கச் சாத்தியமாகும்.

அக்டோபர் முதல் தேதியிலிருந்து தஞ்சை ஜில்லாவில் உள்ள நதிகள் யாவற்றிலும் திட்டத்தைக் காட்டிலும் மிகவும் அதிகத் தண்ணீர் போகிறது என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

(ஒப்பம்) ஏ. ஆர். வெங்கடாச்சாரி
விசேஷப் பிரதம இஞ்ஜினீர்.

என்ஜினியரிங் இலாக்காவின் தலைமை அதிகாரியான சீப் என்ஜினியர் ஸ்ரீ ஏ. ஆர். வெங்கடாச்சாரியார் இவ்வளவு சிரத்தை எடுத்துப் புகாருக்குப் பதில் எழுதியிருப்பதைப் பெரிதும் பாராட்டுகிறோம். தஞ்சை ஜில்லா விவசாயிகள் மேற்படி கடிதத்தில் கண்ட முறைகளைக் கடைப் பிடிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம். இனிமேல் "சாமி வரம் கொடுத்தும் பூசாரி வரம் கொடுக்கவில்லை" என்ற நிலைமை தஞ்சை ஜில்லா விவசாயிகளுக்கு ஏற்படாது என்று உறுதியாக நம்புகிறோம்.

# அமரன் கருப்பையா

பாரத நாடு சுதந்திரம் பெற்று உய்வதற்காகத் திருப்பூர் குமரன் அன்று அடிபட்டு உயிர்த் தியாகம் செய்ததைத் தமிழ் மக்கள் என்றும் மறக்க மாட்டார்கள்.

இன்று மதுரைக் காங்கிரஸ் ஊழியன் கருப்பையா, சுதந்திரம் பெற்ற நம் அருமைச் செந்தமிழ் நாடு தீய துவேஷ சக்திகளினால் நாசமடையாமல் பாதுகாக்கும் பொருட்டுத் தமது இன்னுயிரை ஈந்து அமரன் கருப்பையா ஆகியிருக்கிறார்.

ஸ்ரீ கருப்பையாவின் மகா தியாகம் தீய துவேஷ சக்திகளைக் கிளப்பி விடுகிறவர்களின் மனத்தை மாற்றும் என்று எதிர்பார்க்கிறோம்.

இந்தியாவின் பிரதம மந்திரியும், இன்று உலகிலேயே இந்தியாவுக்கு ஒப்பற்ற பெருமையை அளித்திருப்பவரும், தியாகத்திலும் ஒழுக்கத்திலும் அறிவிலும் ஆற்றலிலும் சிறந்தவருமான பண்டித ஜவாஹர்லால் நேரு தமிழ் நாட்டுக்கு விஜயம் செய்த போது, அவரை லட்சோப லட்சம் தமிழர்கள் வரவேற்றுப் போற்றினார்கள்.

ஒரு சிலர் கருப்புக் கொடி பிடித்துத் தங்களுக்குத் தாங்களே இழிவைத் தேடிக் கொண்டார்கள்.

அத்துடன் நிற்காமல், பண்டித ஜவாஹர்லால் நேருவை வரவேற்க முன் வந்த காங்கிரஸ் ஊழியர்களைக் கத்தியினால் குத்திக் கொல்லவும் துணிந்து விட்டார்கள் என்றால், இவர்களைக் "காட்டு மிராண்டிகளைவிடக் கேவலமானவர்கள்" என்று பண்டித ஜவாஹர்லால் நேரு கூறியதை யார் ஆட்சேபிக்க முடியும்!

"இப்படிப்பட்ட அநாகரிகக் கூட்டத்தை ஒழித்துக் கட்டுவது இனி என்னுடைய முதன்மையான வேலை" என்று சாத்விகமே உருக்கொண்ட நம் முதன்மந்திரி ராஜாஜி கூறுவதிலேதான் வியப்பு என்ன இருக்கிறது!

அமரன் கருப்பையாவின் ஆன்மா உலகில் ஒப்பற்ற மகா தியாகிகள் இறந்த பின் வாழும் இடத்துக்குப் போய்ச் சேர்ந்து நிம்மதி அடைந்திருக்கும் என்று நம்புகிறோம்.

அமரன் கருப்பையாவின் குடும்பத்துக்கு உதவி செய்யப் பொது மக்கள் முன் வரவேண்டும் என்று மதுரை ஸ்ரீ ஏ. வைத்தியநாதய்யர் அவர்கள் விடுத்திருக்கும் வேண்டுகோளை மனப்பூர்வமாக வரவேற்று ஆதரிக்கிறோம்.

# பொன்னியின் செல்வன்

கல்கி

அத்தியாயம் 47

## நந்தினியின் மறைவு!

ஓடி வந்த குதிரைகளைப் பார்த்து வியந்தவர்களில் முதலில் சுய உணர்வு பெற்றவன் ரவிதாஸன்தான்.

"தேவி! இந்தப் போலி வைஷ்ணவன் தன் வேலைத்தனத்தைக் காண்பித்து விட்டான். 'இவன் ஒற்றன். இவனை நம்ப வேண்டாம்' என்று எத்தனையோ தடவை தங்களுக்கு நான் எச்சரித்திருக்கிறேன். நம்மைப் பிடிப்பதற்கு இவன்தான் ஆட்களைக் கொண்டு வந்திருக்கிறான். ஆனால் இவனால் நம்மைப் பிடிக்க முடியாது. இவனுடைய தெய்வமாகிய நாராயணனே வந்தாலும் முடியாது. வாருங்கள் போகலாம். குதிரைகள் வருவதற்குள் மலைமேல் ஏறி விடலாம்!" என்றான் மந்திரவாதி.

ஆழ்வார்க்கடியான், "நந்தினி! இந்தப் பாதகர்களுடன் நீ போகாதே! இவர்களுடன் நீ சேர்ந்ததினால் நேர்ந்த விபத்துக்கள் எல்லாம் போதும்!" என்றான்.

நந்தினி ஆழ்வார்க்கடியானைப் பார்த்து, "திருமலை! நான் வெகு நாளாக ஒன்று கேட்டுக் கொண்டிருந்தேன். அது நினைவு இருக்கிறதா? என் அன்னையிடம் அழைத்துப் போகும்படி உன்னை வேண்டிக்கொண்டிருந்தேன். இப்போதாவது என்னை நீ என் தாயிடம் அழைத்துப் போவதாக வாக்களித்தால் உன்னுடன் வருகிறேன். இல்லாவிடில் இவர்களுடன் போகிறேன்" என்றாள்.

"நந்தினி! இனி என்னால் அது இயலாத காரியம்......!" என்று திருமலை சொல்வதற்குள், ரவிதாஸன் குறுக்கிட்டு, "இவன் என்ன அழைத்துப் போவது? நான் அழைத்துப் போகிறேன், வாருங்கள்!" என்றான்.

"ஆமாம், ஆமாம்; இவன் உன்னை உன் அன்னையிடம் யமலோகத்துக்கு அழைத்துப் போவான்! உன் அன்னையைக் கொன்றது போல் உன்னையும் கொன்று யம லோகத்துக்கு அனுப்பி வைப்பான்! நந்தினி! இந்தப் பாதகர்களுடைய சகவாசம் இனியும் உனக்கு வேண்டாம். இவர்களில் ஒருவன் உன் தாயைக் கொன்றவன்! மந்திரவாதியின் முகத்தைப் பார்! கொலைகாரன் என்று எழுதியிருக்கிறது!" என்று சொன்னான் ஆழ்வார்க்கடியான்.

ரவிதாஸன் முகத்தில் கொந்தளித்த கோபத்துடன் "பொய்! பொய்!" என்று கத்தினான்.

சற்று முன் சாந்தம் குடி கொண்டிருந்த நந்தினியின் கண்களில் வெறியின் அறிகுறி காணப்பட்டது.

"திருமலை! இது உண்மையா? என் அன்னை உண்மையிலேயே இறந்து விட்-

டானா? அவனை இனி நான பார்க்க முடியாதா?" என்ருன்.

"சந்தேக மிருந்தால், இதோ இந்தப் பெண்ணைக் கேட்டுத் தெரிந்து கொள். இவர்களில் ஒருவனுன சோமன்சாம்பவன் தான் வேல் எறிந்து உன் அன்னையைக் கொன்றவன். இவள் நேரில் பார்த்தாள். அத்தையைக் கொன்றவனைப் பின் தொடர்ந்து வந்தாள்! பூங்குழலி! சொல்!" என்ருன் ஆழ்வார்க்கடியான்.

"ஆமாம்! நானே என் கண்ணுல் பார்த்தேன்! என் அத்தையைக் கொன் றவனைப் பழி வாங்கவே இங்கு வந் தேன்!" என்ருள் பூங்குழலி.

நந்தினி பைத்தியம் பிடித்தவள் போல் வெறி கொண்ட சிரிப்புச் சிரித்தாள். "பழி வாங்க வந்தாயா? பழி! பழி! நான் ஒருத்தி பழி வாங்கிய இலட் சணம் போதாதா?" என்று சொல்லி விட்டு, ரவிதாஸனைப் பார்த்து, "துரோகி! சண்டாளா! இப்படியா செய்தாய்?" என்ருள்.

"ராணி! நீ நினைப்பது தவறு! நான் ஒரு துரோகமும் செய்யவில்லை. சோமன் சாம்பவன் சக்கரவர்த்தியின்மீது வேலை எறிந்தான்"...

ஓடியவர்கள் எல்லாரும் மலைக் குகைக் குள் நுழைந்தார்கள். சற்று நேரத்துக் கெல்லாம் குகைக்கு மேலே குன்றின் உச்சியில், காவேரி ஆறு அருவியாக மாறி விழும் இடத்தின் அருகே நின்ருர்கள்.

அதே சமயத்தில் குதிரைகள் மலை அடிவாரத்துக்கு வந்து சேர்ந்தன. சரி யான வழி யில்லாமல் பெரிய பெரிய பாறைக் கற்கள் எங்கும் பரவிக் கிடந்த படியால் குதிரைகள் வந்து சேர்வதற்கு இத்தனை நேரம் பிடித்தது.

குதிரைகள் மீது வந்தவர்களில் முன் ஞல் வந்தவர்கள் சின்னப் பழுவேட்டரை யரும் கந்தமாறனுந்தான் என்பதை ஆழ்வார்க்கடியான் பார்த்துக் கொண் டான். அவர்களுக்குப் பின்னுல் சேந்தன் அமுதன் ஒரு குதிரையின் மீது கயிற் றிஞல் சேர்த்துக் கட்டப்பட்டு வரு வதையும் பார்த்தான்.

"வாருங்கள்! வாருங்கள்! நல்ல சம யத்தில் வந்து சேர்ந்தீர்கள்!" என்ருன்.

சின்னப் பழுவேட்டரையரும் கந்த மாறனும் குதிரைகளின் மீதிருந்து கீழே குதித்தார்கள்.

சியில் நின்ற ரவிதாஸன் முதலியவர்களைச் சுட்டிக் காட்டினான்.

"அவர்கள் யார்? ஏன் அவர்களைக் கொலைகாரர்கள் என்று சொல்கிறாய்?"

"அவர்கள்தான் மந்திரவாதி ரவிதாஸனும் அவனுடைய கூட்டத்தாரும். வீர பாண்டியனுடைய ஆபத்துதவிப் படையைச் சேர்ந்தவர்கள். சக்கரவர்த்தியைக் கொல்ல முயன்றவர்கள் அவர்கள்தான்; இளவரசர் ஆதித்த கரிகாலரைக் கொன்ற பாவிகளும் அவர்களேதான்!" என்றான் திருமலை.

கந்தமாறன் குறுக்கிட்டு, "பொய்! பொய்! இளவரசரைக் கொன்றவன் வந்தியத்தேவன்! உன் சிநேகிதன் செய்த குற்றத்தை மறைக்கப் பார்க்கிறாயா?" என்றான்.

"மூட்டாளே! சும்மா இரு!" என்று சின்னப் பழுவேட்டரையர் அவனை அதட்டினார். பின்னர் வைஷ்ணவனைப் பார்த்து, "தனாதிகாரியையும் அவர்கள் கொல்லப் பார்த்தார்களா? எப்படித் தப்பினார்?" என்று கேட்டார்.

"இதோ உட்கார்ந்து விம்மிக் கொண்டிருக்கும் பழுவூர் இளைய ராணியின் உதவியினால்தான் தப்பினார்!"

"ஏன் இளைய ராணி அழுது கொண்டிருக்கிறாள்?"

"அவருடைய அன்னை இறந்து விட்டாள் என்று கேள்விப்பட்டார். அதனால் அழுகிறார்! இதெல்லாம் பிறகு விசாரித்துக் கொள்ளக் கூடாதா?"

"ஆம், ஆம்! பெரிய பழுவேட்டரையரை முதலில் பார்க்க வேண்டும். நீ போய் நான் வந்திருப்பதைச் சொல்லு!"

சின்னப் பழுவேட்டரையருக்குத் தம் தமையனாரிடம் உள்ள பயபக்தி அச்சமயம்கூடச் சிறிதும் குன்றவில்லை. ஆகையால் திடீரென்று தமையனாரைப் போய்ப் பார்க்க அவர் தயங்கினார்.

"ஐயா! தங்கள் தமையனார் இனி எங்கும் போய்விட மாட்டார். நான் போய்த் தாங்கள் வந்திருப்பதைச் சொல்லுகிறேன். அதோ அந்தக் கொலைகாரர்களைப் பிடிக்கத் தாங்கள் எதுவும் செய்யப் போவதில்லையா?"

சின்னப் பழுவேட்டரையர் தம் நெற்றியைக் கையினால் அழுத்திக் கொண்டு, "ஆம், ஆம்! முன்னொரு சமயம் இப்படித்தான் என் புத்தி தவறி விட்டது! சக்கரவர்த்தியைக் கொல்ல முயன்றவனைத் தப்பி ஓடும்படி விட்டேன்!" என்றார்.

"அவனும் தப்பிவிடவில்லை. அதோ அந்தக் குன்றின் மேலேதான் இருக்கிறான். உங்கள் ஆட்களுக்குச் சீக்கிரம் கட்டளையிடுங்கள்!"

உடனே தளபதி காலாந்தக கண்டர் தம்முடன் வந்த வீரர்களைப் பார்த்துக் கட்டளை பிறப்பித்தார். அவர்கள் குதிரைகள் மீதிருந்து இறங்கிக் காவேரி நதி குன்றின் மீதிருந்து அருவியாக விழும் இடத்துக்கு அருகாமையில் போய்ச் சேர்ந்தார்கள்.

அவர்கள் அங்கே சேர்ந்ததும் மேலேயிருந்து பெரிய பெரிய உருண்டைக் கற்கள் கீழே விழ ஆரம்பித்தன. வீரர்கள் அந்தக் கற்கள் தங்கள் தலையில் விழாமல் தப்புவதற்காக அங்குமிங்கும் அவசரமாக நகர்ந்தார்கள். இரண்டொருவர் அக்கற்களினால் தாக்குண்டு கீழே விழுந்தார்கள்.

சின்னப் பழுவேட்டரையர், "அவர்கள் எப்படி மேலே ஏறினார்கள்? தெரியுமா?" என்று கேட்டார்.

"குகைக்குள் புகுந்து ஏறினார்கள். குகையில் இரகசிய வழி இருப்பதாகத் தோன்றுகிறது. வாருங்கள், போய்ப் பார்க்கலாம்!" என்று ஆழ்வான் முதலில் சென்றான். காலாந்தக கண்டரும் கந்தமாறனும் பின்தொடர்ந்தார்கள்.

குகைக்குள்ளேயிருந்து ஒரு நெடிய கம்பீரமான உருவம் தட்டுத் தடுமாறித் தள்ளாடிக் கொண்டு வெளியில் வந்தது. குகை வாசலில் நின்று, நெருங்கி வருகிறவர்களை உற்றுப் பார்த்தது.

தமையனாரை அடையாளங் கண்டு கொள்ளத் தம்பிக்குச் சிறிது நேரம் பிடித்தது.

உடம்பெல்லாம் காயங்களுடன் முகம் வெளுத்துப் பிரேதகளை பெற்று நின்ற பெரிய பழுவேட்டரையரை அடையாளம் தெரிந்ததும், சின்னப் பழுவேட்டரையர், "அண்ணா!" என்று அலறிக் கொண்டு போய்ப் பெரிய பழுவேட்டரையரைக் கட்டிக் கொண்டார்.

அண்ணனின் கண்களிலிருந்து கண்ணீர் பெருகியது. அவருடைய வாய், "தம்பி! நீ பல முறை எச்சரிக்கை செய்தாய்! அதைப் பொருட்படுத்தாமல் மோசம் போனேன்!" என்று

தழு தழுத்த மெல்லிய குரலில் முணு முணுத்தது.

அச்சமயம் ஆழ்வார்க்கடியானும் கந்தமாறனும் குகைக்குள் பிரவேசிக்க யத்தனித்தார்கள்.

பெரிய பழுவேட்டரையர் அவர்களைத் தடுத்து நிறுத்தி, "எங்கே போகிறீர்கள்?" என்று கேட்டார்.

"கொலைகாரர்கள் இந்தக் குகைக்குள்ளே புகுந்தார்கள்......"

"எந்தக் கொலைகாரர்கள்?"

"மந்திரவாதி ரவிதாஸனும் அவனுடைய கூட்டாளிகளும்."

"அவர்கள் கொலைகாரர்கள் அல்ல" என்றார் பெரிய பழுவேட்டரையர்.

"பார்த்தீர்களா? வந்தியத் தேவன் தான் கொலைகாரன் என்று நான் சொல்லவில்லையா?" என்றான் கந்தமாறன்.

பெரிய பழுவேட்டரையர் அவனை உற்றுப் பார்த்து விட்டு, "இந்த முட்டாள் வாலிபன் எப்படி இங்கே வந்து சேர்ந்தான்?" என்றார்.

"கந்தமாறன் தான் கடம்பூரிலிருந்து செய்தி கொண்டு வந்தான்."

"என்ன செய்தி?"

"இளவரசர் கரிகாலர் இறந்து விட்ட செய்தியைக் கொண்டு வந்தான். நம்முடைய பலத்தை உடனே திரட்டிச் சேர்த்து மதுராந்தகரைச் சிம்மாசனம் ஏற்ற ஏற்பாடு செய்ய வேண்டும் என்று சம்புவரையர் இவன் மூலமாகச் செய்தி அனுப்பி வைத்திருக்கிறார்!"

"ஆகா! அப்படியா?" என்று பெரிய பழுவேட்டரையர் சிறிதும் உற்சாகமின்றிக் கூறினார்.

பிறகு, "தஞ்சாவூரில் நிலைமை எப்படியிருக்கிறது?" என்று கேட்டார்.

"அண்ணா! விவரமாகக் கூறவேண்டும். தாங்கள் மிக்க பலவீனமாக இருக்கிறீர்கள். தயவு செய்து உட்கார்ந்து கொண்டு பேசலாமா!" என்றார் சின்னப் பழுவேட்டரையர்.

தனாதிகாரி குகையின் வாசலிலேயே உட்கார்ந்து கொண்டார்.

"ஐயா! சற்று இடங் கொடுத்தால், குகைக்குள்ளே போய்க் குன்றின் மேல் ஏற வழி இருக்கிறதா என்று பார்க்கலாம்" என்றான் வைஷ்ணவன்.

"எதற்காக?" என்றார் பெரிய பழுவேட்டரையர்.

"ரவிதாஸன் கூட்டத்தார் இந்தக் குகையில் புகுந்து தான் குன்றின் மேலே ஏறினார்கள்" என்றான் திருமலை.



பெரிய பழுவேட்டரையர் தலையை அசைத்துவிட்டு, "குகைக்குள் போவதில் உபயோகமில்லை, அப்பனே! அவர்கள் மேலே யிருந்து பாறையைப் புரட்டித் தள்ளிக் குகை வழியையும் அடைத்து விட்டார்கள். பாறை என்மேல் விழுவதற்கிருந்தது. என் உயிர் தப்பியதே தெய்வச் செயல் தான்! போங்கள்! நீங்கள் இருவரும் போங்கள்! மலைமேல் ஏறுவதற்கு வேறு வழி இருக்கிறதா, பாருங்கள்!" என்றார்.

ஆழ்வார்க்கடியானும் கந்தமாறனும் அப்பால் சென்றபோது பெரிய பழுவேட்டரையருடைய பார்வை சேந்தன் அமுதன் - பூங்குழலி இவர்கள் பேரில் விழுந்தது.

"அவர்கள் யார்? எங்கு வந்தார்கள்?" என்று கேட்டார்.

"அந்தப் பெண் கோடிக்கரைத் தியாக விடங்கரின் மகள் பூங்குழலி. அவள் தன் அத்தையைக் கொன்றவனைத் தேடிக் கொண்டு வந்தாள். அவளைத் தேடிக்கொண்டு சேந்தன் அமுதன் வந்தான். சேந்தன் அமுதன் வழி காட்டித் தான் நாங்கள் இங்கு வந்து தங்களைக் கண்டு பிடித்தோம்!" என்றார். சின்னப் பழுவேட்டரையர்.

"தஞ்சாவூரில் நடந்ததை யெல்லாம் விவரமாகச் சொல்!" என்றார் பெரிய பழுவேட்டரையர். சின்னப் பழுவேட்டரையர் அவ்வாறே சொல்லலானார். மந்திரவாதிக் கூட்டத்தில் ஒருவன் பொக்கிஷ நிலவறையில் ஒளிந்திருந்து, சக்கரவர்த்தியைக் கொல்லுவதற்காகச் சமயம் பார்த்திருந்து வேலை எறிந்ததையும் சக்ரவர்த்தியைக் காப்பாற்றுவதற்காக மந்தாகினி தேவி இடையில் புகுந்து உயிரை விட்டதையும் சொன்னார். பிறகு அவர் தொடர்ந்து கூறியதாவது:—

"அண்ணா! இதற்கிடையில் கொடும்பாளூர் வேளான் பெரிய சைன்யத்துடன் திடீர் என்று வந்து தஞ்சாவூர்க் கோட்டையை முற்றுகையிடத் தொடங்கினான். தாங்கள் இல்லாதபடியால் வேளானுடன் போர் தொடங்குவதா, இல்லையா என்று என்னால் நிச்சயிக்க முடியவில்லை. சக்கரவர்த்தியை யோசனை கேட்கவும் முடியவில்லை. முதன் மந்திரி அநிருத்தர் கோட்டைக் குள்ளேதான் இருக்கிறார். அவர் தாங்கள் வந்த பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்றும், அதுவரை கோட்டையைப் பாதுகாத்தால் போதும் என்றும் கூறினார். நல்ல வேளையாக இச் சமயத்தில் இளவரசர் அருள்மொழி வர்மரும் கொடும்பாளூர் வேளானுடைய மகள் வானதியும் கோட்டைக்குள் வந்து சேர்ந்தார்கள். இளவரசர் யானைப் பாகன் வேடத்தில் வந்தார். வானதி பழையாறை இளைய பிராட்டியிடமிருந்து அவசரச் செய்தி கொண்டு வந்திருப்பதாகக் கூறினாள். வேளானுடைய மகள் கோட்டைக் குள்ளே இருப்பது நமக்கு அநுகூலந்தானே என்று நினைத்து அவள் ஏறி வந்த யானையை உள்ளே விட்டேன். சக்கரவர்த்தியின் அரண்மனை வாயிலிலே யானைப் பாகன்தான் இளவரசர் அருள்மொழி வர்மர் என்று தெரிந்தது. நான் கொஞ்சம் மிரண்டுதான் போய் விட்டேன். அண்ணா! சின்ன இளவரசரிடம் ஏதோ அதிசய சக்தி இருக்கத்தான் செய்கிறது. அவர் திருமுகத்தைப் பார்த்ததும் எனக்கே கைகால் வெலவெலத்து விட்டது: நெஞ்சம் இளகி விட்டது. என்னை அறியாமல் என் கைகள் கூப்பிக் கொண்டன. அவரை வணங்கி வரவேற்க வேண்டியதாகி விட்டது. சோழ நாட்டு மக்கள் இளவரசர் அருள்மொழி வர்மர் என்றால் தலைகால் தெரியாமல் கூத்தாடுவதில் வியப்பில்லைதானே?......"

"போதும் போதும்! அதுதான் தெரிந்திருக்கிறதே! அருள்மொழி வர்மன் கடலில் மூழ்கி இறந்தான் என்பதெல்லாம் கட்டுக் கதை என்று நான் எண்ணியதும் சரியாய்ப் போய் விட்டது. அப்புறம் நடந்ததைச் சொல்லு! இளவரசர் எதற்காக யானைப் பாகன் போல் வேஷம் பூண்டு கோட்டைக்குள் வந்தார்?" என்று பழுவேட்டரையர் கேட்டார்.

"இளவரசர் என்று தெரிந்தால் கொடும்பாளூர் வேளான் அவரைத் தடுத்து நிறுத்திக் கொள்வான். கோட்டைக்குள் போக விட மாட்டான். வேளானுடைய படை வீரர்களும் பெரிய ஆர்ப்பாட்டம் செய்வார்கள் என்று எண்ணி அவ்வாறு மாறு வேடம் பூண்டு வந்தாராம். அந்த வரையில் இளவரசரைப் பாராட்டத்தான் வேண்டும். இளவரசர் சக்கரவர்த்தியைச் சந்தித்துப் பேசிக்கொண் டிருந்த சமயத்திலேதான் மேலே யிருந்து கொலைகாரன் வேல் எறிந்தான். தெய்வாதீனமாக அது அந்த ஊமைப் பைத்தியத்தின் பேரில் விழுந்து அவள் இறந்தாள். சக்கரவர்த்தியின் பேரில் விழுந்து அவர் இறந்திருந்தால், நம்முடைய குலத்துக்கு என்றும் அழியாத களங்கம் ஏற்பட்டிருக்கும்..."

பெரிய பழுவேட்டரையர் தமது வாய்க்குள்ளே "இப்போது களங்கம் ஏற்பட வில்லையா, என்ன? தீராத களங்கம் ஏற்பட்டுத்தான் விட்டது!" என்று முணுமுணுத்தார்.

"அண்ணா! என்ன சொன்னீர்கள்?" என்று காலாந்தக கண்டர் கேட்டார்.

"ஒன்றுமில்லை; மேலே நடந்ததைச் சொல்லு!" என்றார் தனாதிகாரி.

"அப்புறம் ஒரு பெரிய அற்புதம் நடந்தது. வெகு காலமாக நடமாட முடியாமலிருந்த சக்கரவர்த்திக்குத் திடீரென்று கால்களில் சக்தி உண்டாகி விட்டது. ஓடிப் போய் அந்த ஊமையை எடுத்து மடியில் போட்டுக் கொண்டு புலம்ப ஆரம்பித்தார். சிறிது நேரம் நாங்கள் எல்லாரும் அந்தக் காட்சியைக் கண்டு பிரமித்து நின்றுகொண்டிருந்தோம். பூங்குழலி என்னும் இந்த ஓடக்காரப் பெண்தான் 'கொலைகாரனைப் பிடிக்கப் போகிறேன்' என்று கூவிக் கொண்டு ஓடினாள். அவள் நன்றாயிருக்க வேண்டும். அவள் மூலமாகத் தான் இன்று தங்களை இந்தக் கோலத்திலாவது பார்க்கும் பாக்கியம் கிடைத்தது......"

பெரிய பழுவேட்டரையர் கண்களில் நீர் ததும்ப, "தம்பி! புராண இதிகாசங்களில் தமையனிடம் பக்தியுள்ள தம்பிகளைப் பற்றிக் கேட்டிருக்கிறேன். ஆனால் உன்னைப் போல் பக்தியுள்ள சகோதரன் அவர்களில் யாரும் இருக்க முடியாது. போகட்டும்; அப்புறம் நடந்ததைச் சொல்!" என்றார்.

"பூங்குழலியைப் பின்பற்றி நானும் பொக்கிஷ நிலவறையிலுள்ள சுரங்கப் பாதையில் சென்றேன். அங்கே இருட்டில் ஒருவனைக் கைப்பற்றினேன். அவன் தான் கொலைகாரனாயிருக்க வேண்டும் என்று நினைத்தேன். குரலைக் கேட்டதும், மதுராந்தகத் தேவன் என்று தெரிந்தது."

"அவன் எதற்காக நிலவறைப் பாதையில் வந்தானாம்?"

"அது எனக்கும் தெரியவில்லை. கேட்டதற்குச் சரியான மறுமொழியும் சொல்லவில்லை. கொலைகாரன் அவன் தான் என்ற சந்தேகம் யாருக்காவது உண்டாகிவிடப் போகிறதே என்று எனக்குப் பயமாயிருந்தது......"

"ஒரு வேளை உண்மை அதுதானோ, என்னமோ?"

"இல்லை, அண்ணா, இல்லை! அந்தச் சாதுப் பிள்ளை அவ்வளவு தூரத்துக்குப் போகக் கூடியவனல்ல. மேலும், வேலை எறிந்து விட்டு ஓடியவனை நானே கண்ணால் பார்த்திருந்தேன். மதுராந்தகன் பொக்கிஷ நிலவறையிலிருந்து வருவதற்கு இலேசில் சம்மதிக்கவில்லை. அவனை மெதுவாகச் சரிப்படுத்தி அரண்மனையில் கொண்டு போய்ச் சேர்த்து விட்டுக் காவலும் போட்டு விட்டு மறுபடியும் பொக்கிஷ நிலவறைக்குப் போக எண்ணினேன். அதற்குள் வேறு பெரிய சம்பவங்கள் நடந்து விட்டன. 'சக்கரவர்த்தி இறந்து விட்டார்' என்றும், யாரோ அவரைக் கொன்று விட்டார்கள் என்றும் வெளியிலே வதந்தி பரவி விட்டது. உடனே கொடும்பாளூர் வேளார் அவருடைய படை வீரர்களைக் கோட்டையைத் தாக்கும்படி கட்டளையிட்டு விட்டாராம். வேளிர் படையுடன் கைக்கோளர் படையும் வந்து சேர்ந்து கொண்டிருந்தது. நமது வீரர்கள் அச்சமயம் ஆயத்தமாக இல்லை. அவர்களுக்குக் கட்டளையிட நானும் கோட்டை வாசலில் இல்லை. ஆகையால், வேளிர் படை — கைக்கோளர் படை வீரர்கள் கோட்டைக் கதவுகளை உடைத்துக் கொண்டும் சுவர்களில் ஏறிக் குதித்தும் உள்ளே வரத் தொடங்கி விட்டனர். இந்தச் செய்தியைக் கேள்விப் பட்டு நான் கோட்டை வாசல் போய்ச் சேர்வதற்குள் பதினாயிரம் வீரர்கள் கோட்டைக்குள் நுழைந்து விட்டார்கள். நம்முடைய வீரர்களோ சுமார் இரண்டாயிரம் பேர்தான். அவர்கள் வெளியிலிருந்து வந்தவர்களோடு தீரத்தோடு போரிட்டார்கள். நான் போய்க் கட்டளையிட்டுச் சண்டையை நிறுத்தினேன். நமது வீரர்களை யெல்லாம் ஒரே இடத்தில் சேர்த்துக் கொண்டேன். இனிக் கோட்டைக்குள் இருப்பதில் பயனில்லை என்று முடிவு செய்து கொண்டு நமது வீரர்களுடன் வெளிக் கிளம்பினேன். வேளிர் — கைக்கோளர் படைகள் எங்களைத் தடுத்து நிறுத்தப் பார்த்தன. தடுத்தவர்களை யெல்லாம் வெட்டி வீழ்த்தி அதாஹதம் செய்து கொண்டு வெளியே வந்து விட்டோம். 'பழுவூர்க் குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்காவது மதுராந்தகத் தேவருக்காவது ஒரு சிறிய கெடுதல் நேர்ந்தாலும் கொடும்பாளூர் வம்சத்தைப் பூண்டோடு அழித்து விடுவேன்' என்று பூதி விக்கிரம கேசரிக்குச் செய்தி அனுப்பினேன். பிறகு தாங்கள் கடம்பூரில் இருப்பீர்கள் என்று எண்ணிக் கொண்டு தங்களைச் சேர்வதற்காக

விரைந்து வந்தேன். எதிரில் குடமுருட்டி ஆற்றின் கரையில் கந்தமாறன் குதிரை மேல் ஏறிப் பறந்து விழுந்து கொண்டு வந்தான். பழுவூர்ப் பனைக்கொடியைக் கண்டதும் நின்றான். அவன் கொண்டு வந்த செய்தி என்னை மேலும் திகைக்கும் படி செய்தது. தாங்கள் கடம்பூரி விருந்து தஞ்சைக்குக் கிளம்பிச் சில நாட்கள் ஆயின வென்றும், தங்களுக்குப் பெரிய சம்புவரையர் செய்தி அனுப்பி யிருப்பதாகவும் கூறினான். தாங்கள் தஞ்சைக்கு வந்து சேரவே இல்லை யென்று தெரிந்ததும் அவனும் திகைத்துப் போய் விட்டான். பிறகு சம்புவரையர் என்னதான் செய்தி சொல்லி அனுப்பினார் என்று கேட்டேன். இளவரசர் கரிகாலர் இறந்து விட்டார் என்றும், அவரை வந்தியத் தேவன் கொன்று விட்டான் என்றும், ஆகையால் மதுராந்தகத் தேவரைச் சிம்மாசனத்தில் அமர்த்த இதுதான் தக்க சமயம் என்றும், அதற்கு வேண்டிய முயற்சிகளை உடனே செய்ய வேண்டும் என்றும், நம்மைச் சேர்ந்தவர்களுக்கெல்லாம் ஓலை அனுப்பிப் படை திரட்ட வேண்டும் என்றும் பெரிய சம்புவரையர் சொல்லி அனுப்பினாராம். இது எனக்கும் சரியாகப் பட்டது. தாங்களும் நமது பலத்தைத் திரட்டும் வேலையில் தான் ஈடுபட்டிருப்பீர்களென்றும் சீக்கிரத்தில் வந்து விடுவீர்கள் என்றும் நம்பினேன். நமது பழுவூர்ப் படைகளை மண்ணியாற்றுக்கும் கொள்ளிடத்துக்கும் நடுவில் திருப்புறம்பயம் மேட்டில் கொண்டு போய் நிறுத்தினேன். உடனே ஓலைகள் எழுதச் சொல்லி, மழபாடித் தென்னவன் மழவராயர், குன்றத்தூர்க் கிழார், மும்முடிப் பல்லவராயர், தான தொங்கிக் கலிங்கராயர், வணங்கா முடி முனையதரையர், தேவ சேனாதிபதிப் பூவரையர், அஞ்சாத சிங்க முத்தரையர், இரட்டைக் குடை இராஜாளியார் ஆகியவர்களுக்கெல்லாம் குதிரைத் தூதுவர்களை விரைந்து போகும்படி அனுப்பினேன். அவர்கள் எல்லாரையும் படைகளைத் திரட்டிக் கொண்டு திருப்புறம்பயத்துக்குக் கூடியசீக்கிரம் வந்து சேரும்படி எழுதியிருக்கிறேன். அண்ணா! தங்களுக்குச் சிறிதும் கவலை வேண்டாம்! கொடும்பாளூர் வேளானையும், திருக்கோவலூர் மலையமானையும் மறுபடியும் தலை எடுக்க முடியாதபடி அழித்துப் போட்டு விடுவோம். தஞ்சாவூர்க் கோட்டையை மறுபடியும் பிடித்து விடுவோம். மதுராந்தகத் தேவரையும் சிங்காதனத்தில் ஏற்றி விடுவோம்!" என்று சின்னப் பழுவேட்டரையர் உற்சாகம் ததும்ப வீர கர்ஜனை புரிந்தார்.

ஆனால் அவருடைய வார்த்தைகள் பெரிய பழுவேட்டரையருக்குச் சிறிதும் உற்சாகம் அளித்ததாகத் தெரியவில்லை. அவருடைய கவனம் திடீரென்று வேறு பக்கம் திரும்பியது.

"தம்பி! அது யார்? முகத்தில் கையை வைத்துக்கொண்டு விம்மி அழுதுகொண்டிருப்பது யார்?" என்று கேட்டார்.

"அண்ணா! தெரியவில்லையா? அவர் தான் இளையராணி! பாவம்! தங்களைக் காப்பாற்ற முயன்றதில் ரொம்பக் கஷ்டப்பட்டுப் போயிருக்கிறார் போலும்! அவரைப் பற்றி நான் குறை கூறியதையெல்லாம் மன்னித்துவிடுங்கள், அண்ணா! மந்திரவாதி ரவிதாஸனும் அவனுடைய கூட்டாளிகளும் தங்களைச் சிறைப் பிடித்துக் கொண்டு வந்தார்கள் என்றும், இளையராணிதான் தங்களைத் தொடர்ந்து வந்து காப்பாற்றினார் என்றும் அறிகிறேன். அது உண்மைதானே?" என்றார் காலாந்தக கண்டர்.

பெரிய பழுவேட்டரையர், "ஆம், ஆம்! இளையராணிதான் என் உயிரைக் காப்பாற்றினாள். நந்தினி பணிவிடை செய்திராவிட்டால் என்னை நீ உயிரோடு பார்த்திருக்க மாட்டாய். உலகத்துக்கு உண்மை தெரியாமலே போயிருக்கும்!" என்று கூறினார்.

"இளைய ராணியின் ஒப்பற்ற பெருங்குணம் எனக்கே தெரியாமல் போய் விட்டதே! உலகத்துக்கு எப்படித் தெரியும்?" என்றார் காலாந்தக கண்டர்.

பெரிய பழுவேட்டரையர் அதைக் கவனியாமல், "நந்தினி இன்னும் இங்கிருந்து போகவில்லையா? குகைப் படிகள் வழியாக ஏறிச் சென்றவர்களோடு அவளும் போயிருப்பாள் என்றல்லவா நினைத்தேன்?" என்றார்.

"தங்களை விட்டு விட்டு இளையராணி எப்படிப் போவார், அண்ணா!" என்றார் சின்னப் பழுவேட்டரையர்.

"அது போகட்டும்! நீங்கள் இந்த இடத்தில் நாங்கள் வந்திருப்பதை எப்படிக் கண்டு பிடித்து வந்தீர்கள்?" என்று பெரியவர் கேட்டார்.

"திருப்புறம்பயம் பள்ளிப்படை யருகில் நாங்கள் தங்கியிருந்தோம். கந்த

மாறன் கொள்ளிடக் கரையோரமாகக் காவல் புரிந்து கொண்டிருந்தான். அங்கே சேந்தன் அமுதன் படகில் ஏற முயன்று கொண்டிருப்பதைப் பார்த்து அவனைப் பிடித்துக் கொண்டு வந்தான். சேந்தன் அமுதன் முன்னொரு தடவை வந்தியத் தேவனைத் தப்ப உதவி செய்த தற்காக அவனைச் சிலகாலம் நான் சிறையில் வைத்திருந்தது தங்களுக்கு நினைவிருக்கும். அவன் பேரில் கந்தமாறனுக்கு ஏற்கெனவே ரொம்பக் கோபம். இப்போதும் ஏதோ ஒற்றன் வேலை செய்கிறான் என்று சந்தேகித்துப் பிடித்துக் கொண்டு வந்தான். அவனிடம் விசாரித்தபோது தங்களைப் பற்றித் தெரிந்தது. அவனுடைய மாமன் மகள் பூங்குழலி யாரோ கொலை காரனைத் தொடர்ந்து தனியே சென்றதைக் கேள்விப் பட்டு இவன் அவளைத் தேடிக் கொண்டு புறப்பட்டானாம். பூங்குழலி அவனைத் தன்னுடன் வரக்கூடாது என்று சொல்லித் திருப்பி அனுப்பி விட்டாளாம். ஆயினும் இவன் அவளை அறியாமல் பின்னோடு தொடர்ந்து போனானாம். அப்போது திருப்புறம் பயம் பள்ளிப் படைக்கருகில் சதி காரர்கள் சிலர் சேர்ந்து பேசுவதை அவன் அறிந்து ஒளிந்திருந்து கேட்டானாம். அப்போது தான் தங்களை ரவிதாஸன் கூட்டம் சிறைப் பிடித்துப் பச்சைமலைப் பிராந்தியத்துக்குக் கொண்டு போயிருப்பதாகத் தெரிந்ததாம். பூங்குழலியும் வைஷ்ணவன் ஆழ்வார்க்கடியானும் பச்சைமலைக்குப் போவதை அறிந்து கொண்டு இவனும் அவர்களுக்குத் தெரியாமல் பின் தொடர முயற்சித்தானாம். இதையெல்லாம் கேட்டதும் நானும் கந்தமாறனும் ஐம்பது வீரர்களை அழைத்துக் கொண்டு புறப்பட்டோம். சேந்தன் அமுதன் தானும் வருவதாகப் பிடிவாதம் பிடித்தான். அதுவும் நல்லதுதான் என்று அவனை ஒரு குதிரை மேல் கட்டிப் போட்டு அழைத்து வந்தோம்! வந்தது நல்லதாய்ப் போயிற்று. தங்களைக் கண்டு பிடித்து விட்டோம்! இனி என்ன கவலை? அண்ணா! உடனே புறப்படுங்கள். தங்களுக்கு யாதொரு சிரமமும் ஏற்படாமல் ஆட்களைக் கொண்டு தூக்கிப் போக ஏற்பாடு செய்கிறேன். இதற்குள்ளே திரும்புறம்பயத்தில் பெரும் சைன்யம் சேர்ந்திருக்கும். தஞ்சாவூர்க் கோட்டையை ஒரு ஜாம நேரத்தில் திரும்பக் கைப்பற்றி விடலாம்!'' என்று கூறினார் சின்னப் பழுவேட்டரையர்.

''ஆமாம், தஞ்சாவூருக்கு உடனே போகவேண்டியதுதான்!'' என்று சொல்லிக் கொண்டே பெரிய பழுவேட்டரையர் எழுந்து நின்றார். நந்தினி தேவி உட்கார்ந்திருந்த இடத்தை நோக்கி மெள்ள மெள்ள நடந்தார்.

அத்தனை நேரமும் ஒரு பாறைக் கல்லின் மீது உட்கார்ந்து விம்மி அழுது கொண்டிருந்த நந்தினி பெரிய பழுவேட்டரையர் தொண்டையைக் கனைத்த கர்ஜனையைக் கேட்டுத் திடீரென்று எழுந்து நின்றாள். வெறி கொண்ட கண்களால் சுற்று முற்றும் பார்த்தாள்.

அவளுக்கு மிக்க அருகாமையில் நின்ற ஆழ்வார்க்கடியான் மெதுவான குரலில், ''நந்தினி! இப்போதாவது உன் சம்மதத்தைச் சொல்! என்னுடன் வருகிறேன் என்று ஒரு வார்த்தை கூறு! இந்த நாட்டை விட்டு வடநாட்டுக்குப் போவோம். பிருந்தாவனம், வடமதுரை, அயோத்தி, காசி, ஹரித்வாரம், ரிஷிகேசம் முதலிய க்ஷேத்திரங்களுக்குப் பிரயாணம் செய்வோம். ஸ்ரீமந்நாராயணனுடைய திருநாமத்தைச் சொல்லிக் கொண்டு, ஆழ்வார்களுடைய பாசுரங்களைப் பாடிக் கொண்டு, நம்முடைய வாழ்க்கையை ஆனந்தமாகக் கழிப்போம். நான் என் அரசாங்க அலுவலை விட்டு விட்டு உன்னுடன் வருவதற்கு ஆயத்தமா யிருக்கிறேன்'' என்றான்.

நந்தினி கண்களில் நீர் ததும்ப அவனை நோக்கி ''திருமலை! உனக்கு நான் இத்தனை துரோகம் செய்தும் நீ என்னிடம் வைத்த அபிமானம் மாறவில்லை. உனக்கு நீ வணங்கும் நாராயணன் அருள் புரிவார்!'' என்றாள்.

அதே சமயத்தில் பூங்குழலி சேந்தன் அமுதனிடம் ''அதோ! பழுவூர் இளைய ராணியைப் பார்! என் அத்தையைப் போலவே தோன்றுகிறாள் அல்லவா?'' என்று கேட்டாள்.

''ஆம்; தலையை விரித்துப் போட்டுக் கொண்டால், தத்ரூபமாக உன் அத்தை மாதிரியே இருக்கிறது!'' என்றான் சேந்தன் அமுதன்.

''இனிமேல் என் அத்தை இவள் தான். அத்தையிடம் இத்தனை நாள் வைத்திருந்த அன்பை இனிப் பழுவூர் இளைய ராணியிடம் வைப்பேன்!'' என்றாள்.

''என்னையும் சேர்த்துக் கொள், பூங்குழலி!'' என்றான் அமுதன்.

பெரிய பழுவேட்டரையர் இதற்குள் நந்தினி நின்ற இடத்துக்குச் சமீபமாக வந்து விட்டார்.

அதைக் கண்ட நந்தினி அவருக்கு முன்னால் பூமியில் விழுந்து வணங்கினாள். அவருடைய பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒத்திக் கொண்டாள்.

பூமியிலிருந்து எழுந்ததும், நந்தினி பெரிய பழுவேட்டரையரை ஒரு முறை பார்த்தாள். சட்டென்று திரும்பினாள். சற்றுத் தூரத்தில் சின்னப் பழுவேட்டரையர் முதலியோர் கொண்டு வந்து நிறுத்தி யிருந்த குதிரைகள் மீது அவள் பார்வை விழுந்தது. அவை நின்ற இடத்தை நோக்கி மிக விரைவாக ஓடினாள். எல்லாவற்றுக்கும் முன்னால் நின்ற குதிரையின் மீது தாவி ஏறிக் கொண்டாள். குதிரையின் முகக் கயிற்றைக் கையில் பிடித்துக் கொண்டு ஒரு குலுக்குக் குலுக்கித் தட்டி விட்டாள். குதிரை பாய்ந்து ஓடத் தொடங்கியது.

அது வரைக்கும் நந்தினியின் நோக்கம் இன்னதென்று அறியாமல் செயலற்று நின்றவர்கள் இப்போது அவளைத் தொடர யத்தனித்தார்கள். சின்னப் பழுவேட்டரையர், ஆழ்வார்க்கடியான், சேந்தன் அமுதன், பூங்குழலி எல்லாருமே ஓர் அடி முன்னால் எடுத்து வைத்தார்கள்.

பெரிய பழுவேட்டரையர் "நில்லுங்கள்!" என்று ஒரு கர்ஜனை செய்தார்.

எல்லாரும் மறுபடியும் செயலிழந்து நின்றார்கள். பெரிய பழுவேட்டரையரையே பார்த்துக் கொண்டு நின்றார்கள்.

பெரிய பழுவேட்டரையர் குதிரை மேல் சென்ற நந்தினியின் உருவத்தைப் பார்த்துக் கொண்டே நின்றார்.

அதி வேகமாகக் காற்றைப் போல் பறந்து சென்ற அந்தக் குதிரை வெகு விரைவில் மலை அடிவாரத்தின் திருப்பம் ஒன்றில் திரும்பியது.

அவர்களுடைய பார்வையிலிருந்து குதிரை மறைந்தது.

ஆம்; பழுவூர் இளைய ராணி நந்தினி தேவியும் மறைந்து விட்டாள். இனி அவளை இக் கதையிலே நாம் காண மாட்டோம்.

ஒருவேளை, பல ஆண்டுகளுக்குப் பின்னால், வேறு இடத்தில், வேறு சூழ்நிலையில், காணும்படி நேரலாம். யார் சொல்ல முடியும்?

(தொடரும்)

## பயிற்சி பெறுகிறார்!



ஆந்திர மாகாண கவர்னர் ஸ்ரீ சந்துலால் திருவேதி ஆந்திரர்களின் காரசாரமான உணவை உட்கொள்ளப் பயிற்சி பெற்று வருகிறாராம்!




ரயில்வேக்கள் தங்கள் நவீன ஸ்ட்ரீம்லைன் ரயில்களாலும், அதன் வேகம், அழகினாலும் பெருமை அடைகின்றன.

எங்களது கடிகாரங்களின் உழைப்பு, தோற்றத்தில் நாங்களும் பெருமை கொள்கிறோம். வெஸ்ட் என்ட் கடிகாரத்துக்கு நீங்கள் என்ன விலை கொடுத்தாலும் அதன் வேலைப்பாட்டிற்கும் கடிகார உற்பத்தியிலேற்பட்ட நீண்ட அனுபவத்திலும் முதலீடு செய்கிறீர்கள். ஒவ்வொரு "வெஸ்ட் என்ட்" கடிகாரமும் பார்வைக்கு அழகும் கூட.



செகண்டஸ் பாக்கெட்
சென்டர் செகண்ட்

நிக்கல் சில்வர் ... ... ரூ. 83

24 மணி நேர டயலிலும் கிடைக்கும்

# WEST END WATCH CO.

BOMBAY CALCUTTA



# இப்பொழுது !

நான் சந்தோஷ
மாயிருக்கிறேன் !
ஏனெனில் நான்
புதிய
குட்இயர்
ரிக்ஷா டயர்களை
உபயோகிக்கிறேன்

# ரோட் லக்

புகழ்பெற்ற குட்இயர்
ரோட் லக் ட்ரக் டயர்
களைப்போல் உறுதியானது



எல்லா ரஸ்தாக்களிலும்
கனமான பளுக்களுடன்,
சுலபமான சவாரியை
அனுபவியுங்கள்

## புதிய 'ரோட் லக்' கை உங்கள் ரிக்ஷாவில் இணைத்து இன்றே பணத்தை மிச்சப் படுத்துங்கள்

# GOODYEAR
# குட்இயர்

ரப்பரில் மிகப் பெரிய பெயர்

---

[illegible]

# அவள் திகைத்தாள்!

பிரபல சஸ்திர சிகிச்சை நிபுணர் பஞ்சநதம் வைத்தியக் கல்லூரி மாணவர்களுடன் ஆஸ்பத்திரியில் வியாதியஸ்தர்களைக் கவனித்துக் கொண்டு வந்தார். ஒவ்வொரு நோயாளியின் வியாதியைப் பற்றியும் தமது மாணவர்களுக்கு எடுத்துக் கூறி அதற்குரிய சிகிச்சையையும் விவரித்துக் கொண்டு வந்தார்.

ஒரு நோயாளியின் அருகில் வந்ததும் டாக்டர் தமது மாணவர் ஒருவரிடம், "இவருக்கு டைபாய்ட் ஜுரம் கண்டிருக்கிறது. இவருக்கு என்ன வைத்தியம் செய்ய வேண்டும்?" என்று வினவினார்.

அந்த வைத்திய மாணவர் விடை தெரியாது திரு திருவென்று விழித்தார். உடனே டாக்டர் பஞ்சநதம், "இவருக்கு டைபாய்ட் ஜுரம். என்ன செய்வீர்கள்?" என்று மற்றொரு மாணவரை நோக்கிக் கேட்டார்.

"உடனே ஒரு டாக்ஸியில் உங்களைத் தேடி வந்து 'கன்சல்டிங் பீஸ்' கொடுத்து டைபாய்ட் ஜுரத்துக்கு என்ன மருந்து கொடுக்க வேண்டும் என்று தெரிந்து கொள்வேன். பிறகு இவருக்குச் சிகிச்சை செய்வேன்" என்று கூறினார். கோபமுற்ற டாக்டர் பஞ்சநதமும், மற்ற மாணவர்களும் அந்த மாணவருடைய பதிலைக் கேட்டுக் கொல்லென்று சிரித்தனர்.

"பேஷ்! கெட்டிக்காரன்தான் நீ!" என்று டாக்டர் பஞ்சநதம் கூறியவாறே அடுத்த வியாதியஸ்தரிடம் சென்றார். அவரைப் பின் தொடர்ந்து மாணவர்களும் சென்றனர்.

"நண்பர்களே! இவருக்கு நாளைக்கு ஆபரேஷன் செய்வது என்று தீர்மானமாகியிருக்கிறது. இவருக்கு ஆபரேஷன் தேவைதானா என்பதற்கு உங்கள் அபிப்பிராயம் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்!" என்றார் பஞ்சநதம்.

வைத்தியரோடு வந்த மாணவர்கள் அனைவரும் பரிசோதித்துப் பார்த்து விட்டு, "ஆபரேஷன் தேவையில்லை" என்று தெரிவித்தனர்.

உடனே டாக்டர் பஞ்சநதம் அவர்களிடம் "உங்கள் அபிப்பிராயம் தவறு. இவருக்கு உடனே ஆபரேஷன் செய்ய வேண்டும். இல்லா விட்டால் ஆபத்து!" என்றார்.

அடுத்த நிமிஷம் அந்தப் படுக்கையிலிருந்து வியாதியஸ்தர் எழுந்து தமது உடைகளை அணிந்து கொண்டு ஆஸ்பத்திரியை விட்டுப் புறப்பட்டார். வழியில் அவரைப் பார்த்த நர்ஸ், "என்ன! எங்கே போகிறீர்கள்? நாளைக்குத் தங்களுக்கு ஆபரேஷன் செய்யப் போகிறார்கள். இந்த உடம்போடு வெளியே புறப்படலாமா?" என்று கேட்டாள்.

"எனக்கு ஆபரேஷன் தேவையில்லை என்று பெரும்பான்மையோர் அபிப்பிராயம் தெரிவித்து விட்டார்கள். நான் எப்பொழுதும் 'மெஜாரிட்டி' பக்கந்தான் சேர்ந்து கொள்வது வழக்கம்" என்று கூறி விட்டு அந்த வியாதியஸ்தர் நடையைக் கட்டினார். நர்ஸ் அப்படியே திகைத்து நின்றாள்!—குண்டுமணி.

## அந்தக் காலம் மலையேறி விட்டது!

அந்தமான் ஏதோ சொர்க்க பூமி என்றும் இங்கு கூலி வேலை செய்பவர்களுக்கு ரூ. 200, 300 சம்பளம் கிடைப்பதாகவும் கள்ள மார்க்கெட்டில் பாஸ் விற்பனை செய்வோர் செய்யும் பொய்ப் பிரசாரங்களை நம்பி ரூ. 23-6-0 மதிப்புள்ள பாஸை ரூ. 80, 100 வரை கொடுத்து வாங்கி இங்கு வந்து பசியாலும், வேலையில்லாமையாலும் வருந்துகிறார்கள். இதைப் போலவே இன்னும் பலர் இங்கு வந்து அல்லலுறக் கூடாது என்னும் எண்ணத்துடனேயே இதை எழுதுகிறேன்.

1947, 1949 ஆண்டுகளில் வீதிகளில் போவோரை வலியவந்து வேலைக்குக் கூப்பிட்ட அந்தக் காலம் மலையேறி விட்டது. தற்சமயம் இங்கும் வேலையில்லாத் திண்டாட்டம் மிகுதியாக இருக்கிறது. கூலி வேலை செய்பவர்களுக்கு மாதம் ரூ. 57 சம்பளம் கிடைக்கிறது. சம்பளம் ரூ. 57ஐ வைத்துக்கொண்டு கால் வயிறு சாப்பிட்டுச் சிக்கனமாக வாழ்ந்தாலும் கூடப் பொருளாதார நிலை மிகவும் பாதிக்கப்படுகிறது. ஏதாவது தொழில் தெரிந்த, அல்லது நன்றாக ஆங்கிலம் கற்றவர்களால்தான் சிறிது கண்ணிய வாழ்வு வாழ முடியும். அதிலும் ஆங்கிலம் கற்றோர்களுக்கு யாருடைய உதவியாவது இருந்தால்தான் ஏதாவது ஒரு வேலை கிடைக்கும். பெரும்பாலும் இங்கு படித்தவர்கள்கூட மண் கூடை தூக்க வேண்டும். ஆகையால் கள்ள மார்க்கெட்டில் பாஸ் விற்பனை செய்யும் கயவர்களின் வார்த்தைகளுக்குச் செவி சாய்க்காதீர்கள்.

யாராவது இங்குள்ளவர்கள் பாஸ் அனுப்பினால் மட்டும் வரலாம். ஏனெனில் அப்படி பாஸ் அனுப்புவோர்கள் ஏதாவது வேலை தேடிக் கொண்டேதான் பாஸ் அனுப்புவார்கள். இங்கும் தற்சமயம் ஒரு பாஸ் எடுப்பதென்றால் மிகவும் கஷ்டம். கப்பல் அதிகாரிக்கு எழுதிப் பின் டெபுடி கமிஷனரிடம் கொண்டு போய் அந்த விசாரணையில் அவர்கள் கேட்கும் கேள்விகளுக்குச் சரியாகப் பதில் கொடுக்காவிடில் பாஸ் கிடைக்காது. குறிப்பாக ஒருவருக்கு பாஸ் எடுப்பதாயிருந்தால் அந்தப் பாஸில் 'நான் வரவழைக்கும் நபருக்கு இங்கு எங்கும் வேலை கிடைக்காவிடில் கப்பல் புறப்படும் வரை வைத்திருந்து சாப்பாடு கப்பல் செலவு முதலியவைகள் கொடுத்து அனுப்பி வைக்க முடியும்' என்று எழுத வேண்டும். ஆகையால் வீண் பொய்ப் பிரசாரங்களை நம்பி இங்கு வந்து கவலையடைய வேண்டாமெனத் தமிழகத்திலிருந்து இங்கு வரத் துடிக்கும் எண்ணற்ற சகோதரர்களை வேண்டிக் கொள்கிறேன்.

போர்ட்பிளேயர், அந்தமான்
26-9-53

க. ப. பொன்னுசாமி, செயலாளர்,
தமிழக தொழிலாளர் கழகம்.



மிதிலையை நான்கு புறத்திலும் சத்துருக்கள் சூழ்ந்து கொண்டு விட்டனர். ஜனக மகாராஜர் இந்தத் திடீர்த் தாக்குதலை முறியடிக்கக் கிளம்பினார். கடும் போர் மூண்டு விட்டது. மூன்றும் நாள் மிதிலைப் படைகள் தோற்றுப் பின் வாங்கின. ஜனகர் நாடு, அரசு, அரண்மனை எல்லாவற்றையும் துறந்து காட்டுக்குச் சென்று விட்டார். இப்போது அவர் மகாராஜரல்ல, சாதாரணக் குடிசை கூட இல்லாத நாடோடி. கால் போன போக்கில் வனம் வனாந்தரமாகத் திரிந்து கொண்டிருந்தார். பசி வயிற்றைக் கிள்ளி யெடுத்தது. ஒரு சிறு கிராமத்திற்குப் போய், பிச்சை யெடுத்துக் கொஞ்சம் அரிசி வாங்கி வந்தார். யாரோ புண்ணியவான் சிறு கலயமும், சிக்கிமுக்கிக் கற்களும் கொடுத்தான். மரத்தடியில் அடுப்பு மூட்டிச் சமைத்தார். நியம நிஷ்டைகளை முடித்துக் கொண்டு சாப்பிட உட்காரும்போது தான், அன்ன சுத்திக்குக் கூட நெய் இல்லை என்பது நினைவு வந்தது. உடனே பக்கத்துத் தெருவுக்குப் போய் யாசித்துக் கொஞ்சம் நெய் வாங்கி வந்தார். வெகு ஆர்வத்தோடு அன்னக் கலசத்தைப் பக்கத்தில் எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தார். விதியின் ஏவல்களாக இரு காளைகள் சண்டை போட்டுக் கொண்டே ஓடி வந்தன. ஜனகர் எழுந்திருப்பதற்குள் அன்னக் கலசத்தை அவைகள் பந்தாடி விட்டன. துகள், துகளாகச் சிதறிவிட்ட கலயத்தையும், மண்ணோடு கலந்துவிட்ட அன்னத்தையும், ஓடி மறையும் காளைகளையும் ஜனகர் மாறி மாறிப் பார்த்தார். பொங்கி வழியும் கண்ணீரைக் கூடத் துடைக்க மாட்டாமல் தன் கடந்த காலத்து ராஜ போகங்களை நினைந்து நினைந்து பொருமினார். 'இதுதான் வாழ்க்கையா! இனி இப்படியேதான் வாழ வேண்டுமா!' மிகப் பயங்கர ரூபங்களுடன் வருங்காலம் ஜனகரைப் பார்த்துக் கொக்கரித்தது. தலையில் இரு கைகளையும் வைத்துக் கொண்டு, 'தெய்வமே! இப்படியும் உன் சோதனை உண்டா!'' என்று கத்தி விட்டார்.

அவருக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. கண்களைத் துடைத்துக் கொண்டு விழித்துப் பார்த்தார். ஆச்சரியம் மேலும் அதிகரித்தது. ''என்ன! இவ்வளவும் கனவா......!''

சப்ரகூட மஞ்சத்தில் கண்ணயர்ந்திருக்கும் மகாராஜரை எழுப்ப வந்த தாதிமார்கள், துதி பாட வந்திருக்கும் வந்தி ஜனங்கள் எல்லோருமே, 'என்றைக்குமில்லாமல் ஏதோ திக்பிரமை பிடித்து மகாராஜர் பிதற்றுகிறாரே!' என்று பயந்து விட்டார்கள்.

ஜனகர் காலைக் கடன்களை முடிக்க எழுந்து சென்றார். வழக்கமான ராஜோபசாரங்கள் குறைவின்றி நடந்தன. கனவில் கண்ட வறுமையின் பயங்கர நிலையும், நினைவில் கண்டு கொண்டிருக்கும் ஐசுவரியத்தின் சுக போகங்களையும் அவர்

உள்ளம் பலதடவை ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டிருந்தது. எது உண்மை வாழ்க்கை! கனவில் கண்டதா, அல்லது இப்போது காண்பதா!

வெகு நேரம் மூளையைக் குழப்பிக் கொண்டு சிந்தித்து ஆராய்ந்து பார்த்தும் அவருக்குச் சரியான பதில் கிடைக்கவில்லை.

மனக் குழப்பத்துடன் ஜனகர் ராஜ சபைக்கு வந்தார். பெரும் புகழ் பெற்ற பல பண்டித சிக்கஜர்கள் அங்கே கம்பீரமாக அமர்ந்திருந்தார்கள். மகாராஜரின் முக வாட்டத்தைக் கண்டு எல்லோரும் அவரைக் கேள்விக் குறியோடு பார்த்ததும் ஜனகர் சொன்னார்: "பண்டிதோத்தமர்களே! நேற்றிலிருந்து ஒரு சந்தேகம் என் மனத்தை மிகவும் அலைத்துக் கொண்டிருக்கிறது. நீங்கள் தாம் அந்த சந்தேகத்தைப் போக்க வேணும்."

"என்ன அப்படிப் பெரிய சந்தேகம்!" சற்று அலட்சியமும், கர்வமும் தொனிக்கப் பண்டிதர்கள் பலர் கேட்டனர்.

"அது உண்மையா, அல்லது இது உண்மையா!" பலர் பல முறை கேட்டும் அதற்குமேல் ஒரு வார்த்தைகூடக் கூற மறுத்து விட்டார் ஜனகர். 'அது' என்றால் என்ன, 'இது' என்றால் என்ன! ஒன்றும் புலப்படாமல் எல்லா ஆஸ்தான பண்டிதர்களும் குழம்பிக் கொண்டிருந்தார்கள். ஜனகர் கொடுத்திருந்த கால வரையும் முடிவை அணுகிக் கொண்டிருந்தது இன்னும் பண்டிதர்கள் கேள்வியையே புரிந்து கொண்டபாடில்லை.




## 2

நகர மக்களுக்குத் தரிசனமளிக்க ஜனக மகாராஜர் வழக்கம் போல் தம் சொர்ண ரதத்தில் பவனி வந்து கொண்டிருந்தார். ராஜ வீதிகளை மலர்த் தோரணங்களும், வர்ணக் கோலங்களும் அலங்கரித்தன. முன்னே வீரர் குழாங்களுடன் முதல் மந்திரி குதிரையில் சென்று கொண்டிருந்தார். அவர்களுக்குப் பின் கட்டியம் கூறுபவனும் துதிபாடகரும் சென்றார்கள். மகாராஜாவைச் சுற்றிலும் ராஜ பரிவாரங்கள், பின்னே படை வீரர்கள். இக்கோலாகலமான பவனியை நகர மக்கள் கண்டு மகிழ்ந்து கொண்டிருந்தார்கள்.

வீதியின் திருப்பத்துக்கு வந்ததும் முதல் மந்திரி சட்டென்று நின்றார். வீதியோரத்தில் மிக அலட்சியமாக உட்கார்ந்திருக்கும் ஓர் இளம் பிரும்மசாரியை எல்லோரும் அருவருப்புடன் பார்த்தார்கள். முதல் மந்திரி அவர் அருகில் சென்று, "ஸ்வாமி! மகாராஜர் பவனி வந்து கொண்டிருக்கிறார். சற்று அப்பால் போய் விடுங்கள்" என்று சாந்தமாகச் சொன்னார்.

"சை, என்ன கோரமான உருவம்! ஒரு அங்கமாவது ஒழுங்காயிருக்க வேண்டுமே! அவலட்சணப் பிண்டம்! மகாராஜர் பவனி வரும்போது, அவர் கண்ணில் பித்தன், போதை யேறியவன், அங்கஹீனன், அவலட்சணம் முதலிய அவலுருவங்கள் தென்படக் கூடாதென்பது இந்த மூடனுக்குத் தெரியாதோ!" என்று மற்றவர்கள் மெள்ளத் திட்டிக் கொண்டிருந்தார்கள்.

பிரும்மசாரி தம் வக்கிர அங்கங்களை உலுக்கிக் கொண்டே, "உன் மகாராஜாவுக்கு இந்த வீதி பிடிக்கா விட்டால் வேறு வீதியில் போகச் சொல். நான் எழுந்திருக்க முடியாது" என்றார்.

மந்திரி அசந்து போய் விட்டார். நேரே ஜனகரிடம் போய் நடந்ததைக் கூறினதும், "அவரை என்னிடம் மரியாதையுடன் அழைத்து வாருங்கள்" என்று ஜனகர் உத்தரவிட்டார். முதல் மந்திரி அப்படியே பணிவுடன் பிரும்மசாரியை மகாராஜரிடம் அழைத்தார்.

"வீதியில் பவனி வரும்போதுகூடத் தம் ஆணையைச் செலுத்த விரும்புகிறாரா உங்கள் அரசர்! இந்த இடம் எல்லோருக்கும் பொது. அவர் இப்போது ராஜ சபையில் தம் சிம்மாசனத்தில் அமர்ந்திருக்கவில்லை என்பதைத் தெரிவியுங்கள்!" என்று அந்தப் பிரும்மசாரி இரைந்து சொல்லியதும் முதல் மந்திரிக்கு ஆத்திரம் தாங்கவில்லை. அவர் நேரே ஜனகரிடம் வந்து, நடந்ததைக் கூறிவிட்டு, "அந்தக் கர்வம் பிடித்தவனை கையைப் புடைத்து இழுத்துவர உத்தரவு கொடுங்கள்!" என்றார்.

"வந்திருப்பவர் சாதாரணப் பிரும்மசாரி அல்ல. அவர் தன்மானம் நிறைந்த மகா பண்டிதராகத் தோன்றுகிறார்!" என்று சொல்லிக் கொண்டே ஜனகர் ரதத்தை விட்டு இறங்கிக் கால் நடையாக அந்தப் பிரும்மசாரியிடம் வந்து

சேர்ந்தார். அவர் அருகில் போய் நின்று பணிவுடன், "ஸ்வாமி! நான் மிதிலைமன்னன் ஜனகன். தங்களைப் பற்றியும், தாங்கள் வந்த காரியத்தைப் பற்றியும் தெரிந்து கொள்ள ஆவலா யிருக்கிறது. தயை செய்து தெரிவிக்கக்கோருகிறேன்" என்றார்.

ஜனகரை ஏறிட்டுப் பார்த்துவிட்டு அந்தப் பிரும்மசாரி சொன்னார் : "அரசே ! வேத சாஸ்திரங்களில் கரை கண்ட முனிவர் கஹோடரின் புத்திரன் அஷ்டாவக்ரன் நான். உமக்கு ஏற்பட்டிருக்கும் சந்தேகத்தை ஆஸ்தானத்து மகா பண்டிதர்களாலும் போக்க முடியவில்லையென்று கேள்விப் பட்டேன். பண்டித உலகத்தை நீர் குறைவாக எண்ணிவிடக் கூடாது என்பதற்காக, உமது சந்தேகத்தைப் போக்கவே இங்கு நான் வந்திருக்கிறேன்."

தேடி அலைந்தும் கிட்டாத நிதி வலியவே வந்து நிற்பதைக் கண்டு ஜனகர் பூரித்துப் போனார். "கல்விக் கடலான உத்தாலக முனிவரின் பெண் ஸுஜாதை யம்மையின் பிள்ளையா தாங்கள்! உத்தாலகரிடம் தங்கள் பிதா கஹோடர் குருகுல வாசம் செய்து கொண்டு கல்வி பயின்றது எனக்குத் தெரியும். நான் மிகப் பாக்யசாலி. தாங்கள் நாளையே என் ராஜ சபைக்கு வந்தருள வேண்டுகிறேன்" என்றார்.

மகாராஜரின் அழைப்பை அஷ்டாவக்ரர் ஒப்புக் கொண்டார். ஜனகர் மிக உற்சாகத்துடன் அரண்மனைக்குத் திரும்பினார். அஷ்டாவக்ரரின் பிறப்பு பற்றித்தாம் முன்பு கேள்வியுற்ற அதிசயச் செய்தி அவருக்கு அப்போது நினைவு வந்தது.

"ஸுஜாதை பூர்ண கர்ப்பவதியாக இருக்கும் போது தினம் வேதத்தை ஆவிருத்தி செய்து வருவது வழக்கம். அதோடு தன் தந்தையிடமும், கணவரிடமும் பல சாஸ்திரங்களையும் பயின்று வந்தாள். அவள் வயிற்றிலிருக்கும் சிசுவுக்கு அவை யாவும் அத்துபடியாகிவிட்டன. ஒருநாள் கஹோடர் வேதத்தை உரக்கப் பாராயணம் செய்து கொண்டிருந்தார். திடீரென்று, 'அப்பா! ஸ்வரம் தப்பி அபத்தமாகப் பாராயணம் செய்கிறீர்களே!' என்று ஓர் இளங் குரல் கேட்டது. திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார் கஹோடர்.

'நான்தான் உங்கள் புத்திரன். ஸ்வரம் தப்பி விட்டது.'—களைப்பால் சற்றுக் கண்ணயர்ந்திருந்த ஸுஜாதையின் கர்ப்பத்திலிருந்து அக்குரல் வந்தது. கஹோடருக்கு ஆத்திரம் தாங்கவில்லை. 'இப்போதே, 'தகப்பன்சாமி' யாகத் தலைப்பட்டு விட்டாயா! அலத்து! உன் கர்வம் பாழ்க்க அஷ்ட (எட்டு) அங்கங்களும் வக்ரமாகி அவலட்சணச் சிகரமாகப் பிறக்கக் கடவாய்!' என்று பிதா தம் புத்திரனைச் சபித்து விட்டார்."

## 3

மறுநாள் ஜனகர் ராஜ சபையை விசேஷமாக அலங்கரித்திருந்தார். யாரோ ஒரு இளம் பிரும்மசாரி அரசரின் சந்தேகத்தைப் போக்க வரப் போவதாக அறிந்ததும் எல்லா வித்வான்களும் குழுமி யிருந்தார்கள்.

அஷ்டாவக்ரர் உள்ளே நுழைந்தார். ஜனகர் மிக மரியாதையுடன் அவரை எதிர்கொண்டு வரவேற்றார். ஆஸ்தான பண்டிதர்களுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. "தலையிலிருந்து கால் வரை ஒரு அங்கமாவது நேராக இல்லையே! இந்தக் குரூபியா நம் மானத்தைக் காப்பாற்ற வந்தவன்! சிறுவன் பைத்தியம் போலிருக்கிறது!" என்று மெள்ளப் பேசிக் கொண்டார்கள்.

அஷ்டாவக்ரர் கோணல் மாணலாக நடை போட்டுக் கொண்டு வந்து சபையோர்களை வணங்கியதும், ஆஸ்தான பண்டிதர்கள் 'கொல்'லென்று சிரித்து விட்டார்கள். அஷ்டாவக்ரர் ஒரு கணம் அவர்களை வெறிக்கப் பார்த்துவிட்டுத் தம் கடோரமான குரலில் உரக்கச் சிரித்தார். ஜனகரும், சபையோர்களும் ஸ்தம்பித்துப் போய் விட்டார்கள்.

"ஸ்வாமி! க்ஷமிக்க வேணும். இந்த வித்வான்கள் சிரித்ததற்காவது கொஞ்சம் காரணம் இருக்கிறது. தாங்கள் இப்படிச் சிரிக்கக் காரணம்!"—ஜனகர் மிகப் பணிவுடன் கேட்டார்.

அஷ்டாவக்ரர் ஆஸ்தான பண்டிதர்களைச் சுட்டிக் காட்டிக் கொண்டு சொன்னார்: "இந்த மூடர்களை வைத்துக் கொண்டு நீர் எப்படித்தான் ராஜ்ய பாலனம் செய்கிறீரோ! என் வெளி உருவத்தைக் கண்டு என் யோக்யதையை நிர்ணயிக்கும் இந்த மகா பண்டிதர்களின் அரிய உபதேசங்களும், யோசனைகளும் தாமே உமக்குக் கிடைக்கின்றன! இதை நினைத்துத்தான் சிரித்தேன்!"

எல்லோருடைய முகங்களும் வெட்கத்தால் சுருங்கிக் கருத்து விட்டன. மேலே பேச்சை வளர்க்க விரும்பாமல், "மகாராஜா! தங்கள் சந்தேகமென்ன, தெரிவியுங்கள்!" என்று கேட்டார் அஷ்டாவக்ரர்.

"அது உண்மையா, அல்லது இது உண்மையா!"

அவர் சில கணம் யோசித்து விட்டு, "நல்ல சந்தேகம்தான், அரசரே! இதற்குச் சரியான பதில் இதுதான்: 'அது எப்படியோ, அப்படியேதான் இதுவும்.' சந்தேகம் நீங்கிற்றா?" என்று கேட்டார்.

ஜனகர் சற்று நேரம் மூளையைக் குழப்பிக் கொண்டு அப்பதிலைப் பலமுறை அலசி ஆராய்ந்து பார்த்தார்.

"பொருள் புலப்படவில்லையே, ஸ்வாமி! என் சந்தேகம் நீங்கவில்லையே!"

"மகாராஜா! இதுதான் சரியான பதில். நன்கு ஆழ்ந்து சிந்தியுங்கள்."

ஜனகர் மறுமுறையும் சிந்தனை செய்து பார்த்தார். "ஒன்றும் புலப்பட வில்லையே, ஸ்வாமி!" என்று சங்கோசத்துடன் சொன்னார்.

"நீங்களும் சந்தேகத்தை விளக்கிச் சொல்லுங்கள். பண்டிதர்களைப் பரீக்ஷிக்க வேண்டுமென்ற எண்ணத்தில் உண்மையை ஒளித்துக் கூடமாகக் கேள்வி கேட்டதால்தான், அதன் பதிலும் கூடமாக இருக்கிறது."

ஜனகர் தாம் கண்ட பயங்கரக் கனவை விவரமாகச் சொல்லிவிட்டு, "அந்தக் கனவு வாழ்க்கையை உண்மையென்று நம்புவதா, அல்லது இந்த நடைமுறை வாழ்க்கையை நம்புவதா!" என்று கேட்டார்.

அஷ்டாவக்ரர் சாந்தமான குரலில் சொன்னார் "இப்போது பதிலை ஒப்பிட்டுப் பாருங்கள். 'அது எப்படியோ, அப்படியேதான் இதுவும்' இரண்டும் அழிவுள்ளவைதாம். அந்தக் கனவு எப்படி மாயையோ, உண்மையில்லையோ, அப்படியேதான் இந்த வாழ்க்கையும். புரிந்ததா!

"அரசே! கனவு கண்டபோது நீங்கள் பட்ட துயரமும், கனவு கலைந்து விழித்தவுடன் உமக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியும் இப்போது வருமா! அவற்றை இப்போது ஸ்மரிக்கலாம். ஆனால் அநுபவிக்க முடியுமோ! முடியாது. கனவின் நிலையாமை வெகு சீக்கிரம் தெரிந்து விடுகிறது. நனவின் நிலையாமை புலப்படக் காலதாமத மாகி


துப்புரவான சலவைக்கும்...
தூய்மையான
துணிமணிகளுக்கும்
777
SWASTIK OIL MILLS LTD
BOMBAY
ஸ்வஸ்திக்
777
பார் மற்றும் ஸூபர்பைன் கேக்
சலவைச் சிறந்தது — இது ஒரு ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் தயாரிப்பு
இந்திய சோப் மற்றும் வாசனைத் திரவியங்கள் தயாரிப்பாளர் சங்கத்தின் அங்கத்தினர்கள்
S.O.M. 232

றது. இதுதான் இரண்டிற்கும் உள்ள வித்தியாசம். இந்த உலகத்தின் அழிவுடைமையை அறிவுறுத்தத்தான் கனவு உலகத்தையும் பகவான் படைத்திருக்கிறான் போலும்.''

ஜனகருக்குச் சந்தேகம் விலகிச் சற்றுத் தெளிவு ஏற்படத் தொடங்கியது. ''ஸ்வாமி! தாங்கள் மகாஞானி. இந்த வாழ்வும் கனவு போலவே பொய்யென்றால் உண்மையானது எது! அழியாதது எது!'' என்று கேட்டார்.

''எது நித்யம், எது அநித்ய மென்பதை உள்ளபடி உணரும் 'ஞானம்'தான் உண்மையானது. அந்த 'ஞான'த்தைச் சாதனமாகக் கொண்டு, நாம் யாவரும் அறிய வேண்டியதும், அடைய வேண்டியதுமான பரம்பொருள் இருக்கிறதே, அது 'ப்ரும்மம்' அதாவது 'ஆத்மா' எனப்படுவது. அதுதான் நித்யமானது, அழியாதது. அரசே! அந்த உண்மை 'ஞான'த்தை அடைய முயலுங்கள்'' என்று அஷ்டாவக்ரர் குரலைச் சற்றுக் கம்பீரமாக்கிக் கொண்டு சொன்னார்.

வந்திருப்பவர் சாமான்யப் பட்டவரில்லை யென்பதை ஜனகரும், மற்றவர்களும் நன்கு உணர்ந்து கொண்டார்கள்.

''பிரும்ம ஞானியான தேவரீர் தாம் எனக்குக் குரு. கிருபை செய்து எனக்கு அந்த 'ஞான'த்தை உபதேசித்தருள வேண்டும்'' என்று வணங்கிக் கொண்டே ஜனகர் பிரார்த்தித்தார்.

அஷ்டாவக்ரர் சிரித்துக் கொண்டே, ''இதுவரை உபதேசித்ததற்குக் குருதக்ஷிணையைக் கொடுத்துவிட்டுப் பிறகு மேலே கேளுங்கள்'' என்றார். ஜனகர் கண்ணை அசைத்ததும் பொன்னும், மணிகளும் தட்டுத் தட்டாக வந்து சேர்ந்தன. அஷ்டாவக்ரர் அவற்றைச் சிறிதும் ஏறிட்டுப் பார்க்கவில்லை.

''இந்த அல்பச் செல்வத்துக்கு நான் ஆசைப்படவில்லை. என்னிடம் உமக்கு உண்மையாக மதிப்பிருந்தால், நான் கேட்பதைக் குருதக்ஷிணையாகக் கொடுக்க வேண்டும். இஷ்டமா!''

ஜனகர் சிரம் வணங்கித் தமது பூர்ண சம்மதத்தைத் தெரிவித்தார்.

''அப்படியானால் பரிசுத்தமான ஹிருதயத்துடன் உமது உள்ளம், உடல், பொருள் யாவற்றையும் எனக்குக் காணிக்கையாக அளித்து விடுங்கள்!'' என்றார் அஷ்டாவக்ரர்.

சபையோர்கள் கலவரத்துடன் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டார்கள். ஜனகர் சற்றும் தயங்காமல் தம்மை அவர் பாதங்களில் ஆத்ம சமர்ப்பணம் செய்து கொடுத்தார்.

## 4

அதே சமயம் ஓர் ஏழைப் பிராமணர் ராஜசபைக்கு வந்தார். தம் வறுமையைப் போக்கிக் கொள்ள மகாராஜரிடம் பொருள் யாசித்தார். அவர் தம் தரித்திர நிலையைப் பலமுறை உருக்கமாகச் சொல்லியும் ஜனகர் அசையாமல், பேசாமல் நின்று கொண்டிருந்தார்.' ஒரு கணம், 'எதிரே இருக்கும் இந்தச் செல்வத்திலிருந்து கொஞ்சம் எடுத்துக் கொடுக்க வேண்டும்' என்று எண்ணினார். உடனே தம் சர்வத்தையும் குருதக்ஷிணையாகச் சமர்ப்பித்து விட்டது நினைவு வந்தது. முன்போலவே மௌனியாக நின்று விட்டார். வந்த யாசகருக்குக் கோபம் தாங்கவில்லை. ஜனகரை நடுச்சபையில் தூஷிக்கத் தொடங்கி விட்டார். ஜனகரின் மனம் பதறியது. உடனே, 'இனி நிந்தையையோ, துதியையோ பாராட்ட நமக்கு உரிமையேது! மனத்தையும் நான் குருவுக்கு அர்ப்பணித்து விட்டோமே!' என்பதை உணர்ந்தார். அடுத்த விநாடியே பதற்றம் நீங்கி அபூர்வ சாந்தி ஏற்பட்டது.

அஷ்டாவக்ரர் அந்த யாசகரைச் சற்று அமரச் சொல்லிவிட்டு, ஜனகரைப் பார்த்துக் கேட்டார்: ''இப்போது நீங்கள் யார்!''

''நான்தான் ஜனகன்.''

''இந்தச் சரீரத்தில் 'ஜனகன்' எங்கிருக்கிறார்! உதரத்திலா, பாதத்திலா, முகத்திலா, சிரத்திலா, எங்கே சொல்லுங்கள்!''

ஜனகரால் பதில் சொல்ல முடியவில்லை ''எனது என்று என்னிடம் எதுவுமே கிடையாது'' என்று மெல்லக் கூறிக்கொண்டே தலையை ஆட்டினார்.

அஷ்டாவக்ரர் புன்சிரிப்புடன், ''இப்போது நீங்கள் பிரும்மஞானத்தின் ரகஸ்யத்தை அறியத் தொடங்கி விட்டீரென்று நினைக்கிறேன்'' என்றார்.

''குருதேவா! சகலத்தையும் துறந்துவிட்டு வனம் சென்று தவத்திலேயே மீதி நாட்களைக் கழிக்க விரும்புகிறேன். இந்தப் பந்தங்களில் பிணைந்து கிடக்க இனித் துளியும் இச்சை இல்லை'' —ஜனகர் ஹிருதய பூர்வமாகச் சொன்னார்.

''சகலத்தையும் துறந்துவிட்டு என்கிறீரே! இப்போது உம்மிடம் என்ன மிஞ்சி யிருக்கிறது அப்படித் துறப்பதற்கு!''

ஜனகர் தம் அக்ஞானத்தை உணர்ந்து வெட்கப்பட்டார். அஷ்டாவக்ரர் சொன்னார்:

''ஜனகரே! நீர்தாம் உள்ளம், உடல், பொருள் யாவற்றையும் எனக்கு அளித்து விட்டீரே. இனி இவற்றைப் பிறர் சொத்து என்பதாக நன்கு உணருங்கள். இவற்றில் துளியும் பற்றுதல் வைக்க உமக்கு உரிமை கிடையாது. தெரிந்ததா! சரி, இப்போது இந்த என் சொத்துக்களை உம்மிடம் கொஞ்ச காலத்துக்கு ஒப்படைக்கிறேன். இவைகளைப் பத்திரமாகப் பாதுகாத்து வரவேண்டியது உமது கடமை. இவற்றில் 'தனது' என்ற அகங்காரத்தை லவலேசமும் வைக்காமல், எல்லாவற்றிலும் தம்மையும், தம்முள் எல்லாவற்றையும் காணும் பரிசுத்தமான பரந்த நோக்குடன் கடமையைச் செய்து வாருங்கள். அப்போதுதான் நீர் உண்மையான 'மன்னுயிர் காவலன்' ஆவீர். இதுதான் ராஜ்யமாளுபவரின் ஆதர்சமான ராஜகர்மம். இதிலேதான் நித்ய சத்யமான பிரும்மஞானம் தெளிவு படுகிறது.

''ஜனகரே! தேகக் கூண்டில் அடைபட்டிருந்தும் துளிக்கூட தேகபற்று இல்லாத உம்மை இனி 'விதேஹர்' என்று உலகம் கொண்டாடப் போகிறது.

''விதேஹ ராஜரே! ராஜ்ய காரியங்களை நடத்திக் கொண்டு, ராஜ போகங்களுடன் வாழ்ந்தாலும் அவைகளில் கொஞ்சமும் பிடிமானம் வைக்காமல் துறவியாக வாழப்போகும் உம்மை, யாருக்கும் கிட்டாத 'ராஜரிஷி' என்ற புனிதப் பெயர் கொண்டு உலகம் வாழ்த்தப் போகிறது!''

அஷ்டாவக்ரர் இதைக் கூறி முடித்ததும் ஜனகர் அவர் பாதங்களைத் தொட்டு வணங்கினார். அந்த விதேஹரை ஆசீர்வதித்துவிட்டு, வக்ர அங்கங்கள் விகாரமாக அசைய எல்லோரிடமும் விடை பெற்றுக் கொண்டு புறப்பட்ட அந்த ஞானியை ஆஸ்தான பண்டிதர்களும், மற்றவர்களும் மிகப் பணிவோடு அன்புடன் வழி யனுப்பினார்கள்.



## 18. மனமும் மணமும்

கபடமற்ற உண்மையான மனத்துடன் கேட்கப்படும் குழந்தைகளின் கேள்விக்கு எத்தகைய பலம் இருக்கிறது என்பதைக் குழந்தைகள் அறியார்கள். அந்தக் கேள்விகள் துயரப்படுபவர்களின் துயரத்தைத் துடைத்து எறிந்து சிரிக்க வைக்கும் சக்தி வாய்ந்தவை. கல் நெஞ்சத்தைக் கரைய வைத்துக் கண்ணீர் வடிக்கச்செய்யும் ஆற்றல் வாய்ந்தவை. உலகத்தில் குழந்தைகள் மட்டும் இல்லாவிட்டால் மனிதன் மிருகத்தைக் காட்டிலும் கீழான மனோ நிலையை அடைந்து விடுவான். அறியாமல் தெரியாமல் இருதயத்தின் ஆட்சி பீடத்திலே ஆதிக்கம் செலுத்தும் குழந்தைகள் தாம் உள்ளத்தை உணர்ச்சிக் களஞ்சியமாக ஆக்கி விடுகிறார்கள். சிந்தனைக்குச் சிறகுகள் கட்டி விடுகிறார்கள். அதனால் தானோ என்னமோ, குழந்தைகள் தெய்வம் என்று கொண்டாடப் படுகிறார்கள். மனிதனை மனிதனுக்கும் மாண்பு வாய்ந்த குழந்தைகளை யாருமே தெய்வமாகக் கொண்டாடுவதில் வியப்பு என்ன?

சாந்தாவின் கேள்வியில் சிந்தனையைச் செல்ல விட்ட வண்ணம் மனோரமா வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தாள். வழிமேல் விழி வைத்து அவள் எத்தனையோ நாட்கள் சுதாகரின் கடிதத்தை எதிர் பார்த்து எதிர்பார்த்து ஏமாந்தாள். வர வரச் சுதாகரிடமிருந்து கடிதம் வரும் என்ற நம்பிக்கையே அவள் உள்ளத்திலிருந்து விடுபட ஆரம்பித்திருந்தது. எவ்வளவு நாட்கள் தான் இனிமேல் அவனிடமிருந்து கடிதத்தை அவள் எதிர் பார்த்துக் கொண்டிருக்க முடியும்? மணம் முடித்து விட வேண்டும் என்ற முயற்சியில் ஈடுபட்டிருக்கும் பெற்றோர்களைத் தட்டிக் கழித்துக் கொண்டிருக்க முடியும்?

பெற்றோர்களின் எண்ணப்படி மாதவப் பிரஸாதையே மணம் செய்து கொண்டு விட்டால் என்ன? குடித்தனத்தை நடத்தச் சரியான ஆள் இல்லாததால் அவருடைய குடும்பம் கெட்டுப் பாழாகிக் கொண்டிருக்கிறதே! குழந்தைகள் கஷ்டப் பட்டுக் கொண்டிருக்கின்றனவே! குழந்தை சாந்தா கூட, "நீ போகாமல் இங்கேயே இருந்து விட்டால் என்ன?" என்று கேட்டாளே!

இப்படிச் சிந்தனையில் லயித்து நடந்து கொண்டிருந்த அவள் கண்களிலே வரும் வழியில் தபால்காரன் எதிர்ப்பட்டான். உடனே அவள் உள்ளத்துச் சிந்தனை தடம் புரண்டு கொடுத்தது. அதைத் தொடர்ந்தாற் போலவே, தபால் வந்திருக்க நேரமாயிற்றே என்ற எண்ணம் எழுந்தது. இன்றைக்காவது நமக்குக் கடிதம் வந்திருக்கலாகாதா என்ற சபலமும் தட்டியது. உள்ளத்தில் நம்பிக்கை ஊசலாடவே, வெகு வேகமாக வீட்டை நோக்கி நடந்தாள். வாசற்புறத்தில் மாட்டப் பட்டிருந்த தபால் பெட்டியில் கடிதங்கள் கிடந்தன. தபால் பெட்டியை நெருங்கியதும், 'தன் பெயருக்குக் கடிதமே வராமல் இருந்து விட்டால்...?' என்ற எண்ணம் எழுந்தது. அடுத்த வினாடியே அவளுடைய இருதயம் முழுவதையும் அவநம்பிக்கை வியாபித்துக் கொண்டு விட்டது.

மனித இருதயத்தின் பலவீனத்தை என்னவென்பது? இருதயம் முழுவதையும் அவநம்பிக்கை கன்னங்கரிய இருள் போல் வியாபித்துக் கொண்டிருந்த பொழுதிலும், அதன் ஒரு மூலையில் நம்பிக்கையின் ஒளி மங்கலாகவாவது பிரகாசித்துக் கொண்டிருக்கத்தான் செய்கிறது. காரணம், நம்பிக்கை அத்தகைய சக்தி வாய்ந்தது. எத்தனைதான் அடித்துப் போட்டாலும் அது தலை தூக்கி நிற்கத்தான் முயற்சிக்கிறது. வான வீதியை முழுவதும் கன்னங் கரிய கார் முகில்கள் மூடி மறைத் திருந்தாலும், கொஞ்சம் இடங் கிடைத்தால் சூரிய கிரணங்கள் தலைகாட்டிப் பிரகாசிக்கத் தொடங்குகின்றன அல்லவா? அதேபோல நம்பிக்கையும் எங்கேயாவது கொஞ்சம் இடங் கிடைத்தால் கூடப் போதும், தலை காட்டியேதான் தீரும்.

நம்பிக்கையும் அவநம்பிக்கையும் ஒன்றோடு ஒன்று மோத அவள் வெகு ஆவலுடன் பெட்டியிலிருந்து கடிதங்களை எடுத்துக் கொண்டாள். ஆனால் அத்தனை கடிதங்களில் ஒன்று கூட அவள் விரும்பிய கடிதமாக இல்லை; அவளுக்கு உபயோகமானதாக இல்லை.

"தினம் தினம் எத்தனை பேர் எத்தனை கடிதங்கள் எழுதுகிறார்கள்? அவர்களுக்கு இப்படிக் கடிதம் எழுதிக் கொண்டிருப்பதைத் தவிர வேறு வேலையே கிடையாதா?"— தாபம் தாளாமல் மனோரமா தனக்குத்தானே முணுமுணுத்துக் கொண்டாள்.

தன் ஆசை நிராசையாகி விடவே அவள் நீண்ட பெரு மூச்சு விட்டாள். 'அவருடன் நமக்கு எத்தனை நாள் பழக்கம்? இரண்டு நாள் இரண்டொரு வார்த்தையாடியதற்காக அவரை அப்படியே சத்திய அரிச்சந்திரனாக நம்பிக் கடிதம் வராதா என்று ஏங்கி இத்தனை ஆதுரத்துடன் கடிதத்தை எதிர் பார்க்கத் தொடங்கி விட்டோமே! இது சுத்த மடத்தனம் அல்லவா?' என்று தோன்றிற்று. உலகத்தில் எத்தனையோ விஷயங்கள் இம்மாதிரி நடக்கின்றன. இந்த உலகத்தில் எத்தனை பேர் எத்தனை விதமான வாக்குகள் அளிக்க



வில்லை? வாக்கு அளிக்கிறவர்கள் அத்தனை பேரும் அந்தச் சமயத்துக்குத் தப்பினால் போதும் என்று ஏதோ வாக்கு அளிக்கிறார்களே ஒழிய, சொன்ன சொல்லைச் செயலில் நிறைவேற்ற வேண்டும் என்று எண்ணுகிறார்கள்? வாக்குத்தத்தம் வாங்கிக் கொள்கிறார்களே, அவர்களுக்குத்தான் வாக்களித்தவர்கள் சொல் பிசகாமல் இருப்பார்கள் என்றநம்பிக்கை எங்கே உண்டாகிறது? பெரும்பாலான காரியங்கள் ஏதோ 'காமா சோமா' வென்று நடக்கின்றனவே ஒழிய, ஒருவரன் முறையுடனா நடக்கின்றன? இந்த உலகத்தில் சொன்ன சொல் பிறழாமல் இருப்பவர்கள் வெகு அபூர்வம். சொன்ன சொல்லைக் காற்றில் பறக்க விடுபவர்கள்தான் அனந்தம். சொல் வேறு, செயல் வேறு என்பதுதான் சர்வ சாதாரணமாக இந்த உலகத்து நடைமுறையில் இருந்து வருகிறது. எனவே, இம்மாதிரிக் காரியங்கள்— ஏன்?—இதைக் காட்டிலும் பயங்கரக் காரியங்கள் நிகழ்ந்தால்கூட அதில் ஆச்சரியப் படுவதற்கு ஒன்றும் இல்லை.

தனக்குக் கடிதம் வரவில்லையே என்ற ஏமாற்றத்துடன் மனோரமா மாடியேறிப் போனாள். கீழே அவள் தாயார் சுபத்திராவும் தோழி சம்பாவும் உட்கார்ந்து ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள்.

சம்பா அன்று வந்திருந்த பொழுது சுதாகரைப் பற்றிச் சில அவதூறான வார்த்தைகளைச் சொல்லியிருந்தாள் அல்லவா? அதனால் மனோரமாவுக்கு அவளிடம் சற்றுக் கோபம். தனக்கு வேண்டியவர்கள் என்று நினைப்பவர்களைப்பற்றி யாராவது அவதூறு சொன்னால் சொன்னவர்கள் மேல் யாருக்குமே கோபம் வருவது இயல்புதானே? ஆத்திரமும் வெறுப்பும் உண்டாவது சகஜந்தானே? சம்பா அவளுடைய அந்தரங்கத் தோழிதான். இருந்தாலும் தன் உள்ளங்கவர் கள்வனான சுதாகரைப் பற்றி அவள் குறை கூறியது மனோரமாவின் மனத்துக்குக் கொஞ்சம் சிரமமாகத்தான் இருந்தது. ஆயினும் அவள் தன்னைப் பார்க்க வந்தாளானால் மனோரமா தன் அருவருப்பை அவளிடம் லவலேசமும் காட்டிக் கொள்வதில்லை. எப்பொழுதும்போலவே சர்வ சகஜமாகப் பேசிப் பழகி வந்தாள். தன் மனத்தில் உள்ளது அவளுக்குத் தெரியாதவாறு நடந்து கொண்டாள். நாட்கள் ஆக ஆகச் சுதாகரைப் பற்றிச் சம்பா சொன்ன விஷயங்கள் அவ்வளவும் உண்மையாகவே இருக்குமோ என்ற எண்ணம் கூட மனோரமாவின் மனத்திலே இடம் பெறலாயிற்று.

"வா, சம்பா! நீ எப்பொழுது வந்தாய்?" என்று கேட்டுக் கொண்டே வந்தாள்.

"நீ அந்தண்டை போயிருப்பாய், நான் இந்தண்டை வந்து விட்டேன். நீ வருகிற வரை இருந்து உன்னைப் பார்த்து விட்டுத்தான் போவது என்ற முடிவில் அம்மாவுடன் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கிறேன்!" என்று பதில் அளித்தாள் சம்பா.

மொழிபெயர்ப்பு : ரா. வீ.



சுபத்திராவுக்கோ மாதவப் பிரஸாதின் வீட்டு நிலைமை பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல். "மாதவப்பிரஸாதின் குழந்தை என்ன செய்து கொண்டிருக்கிறான்? இப்பொழுது அவனுக்கு உடம்பு என்ன வாயிருக்கிறது?" என்று மனோரமாவைப் பார்த்துக் கேட்டாள்.

மனோரமா தான் போய் வந்த விவரத்தைச் சாங்கோபாங்கமாக எடுத்துச் சொல்லத் தொடங்கினாள். சம்பாவுக்கோ அங்கே உட்கார்ந்திருப்பது முள்மேல் உட்கார்ந்திருப்பது போலிருந்தது. அதையெல்லாம் கேட்க வேண்டும் என்று அவளுக்கு என்ன தலையெழுத்து? உலகமறிந்த சுபத்திராவின் கண்களில் சம்பாவின் செய்கை படாமல் இல்லை. ஒரே வயதுள்ள தோழிகள் ஏதோ அந்தரங்கம் பேசிக் கொள்ள விரும்புகிறார்கள் என்பதை அவள் அநுபவப் பட்ட உள்ளம் புரிந்து கொண்டு விட்டது. விஷயத்தைச் சுருக்கமாகக் கேட்டு விசாரித்துத் தெரிந்து கொண்டு விட்டு, "உன் தோழி ரொம்ப நாழிகையாக உட்கார்ந்திருக்கிறாள். எனக்கும் சற்றுச் சிரமமாக இருக்கிறது. நான் கொஞ்சம் களைப்பாறுகிறேன். நீ போய் அவளுடன் பேசிக் கொண்டிரு!" என்றாள்.

மனோரமாவும், "சரி, அம்மா!" என்று சொல்லிச் சம்பாவை அழைத்துக் கொண்டு தன் அறைக்குச் சென்றாள். சம்பாவின் முகத் தோற்றத்திலிருந்து அவள் ஏதோ அதிசயச் செய்தியைச் சொல்ல வந்திருக்கிறாள் என்பதை மனோரமா கண்டு கொண்டாள். ஆனால் சம்பா தன் முகத் தோற்றத்தின் மூலம் அவளுடைய ஆவலைக் கிளறி விட்டுக் கொண்டு வேறு ஏதேதோ விஷயங்களைப் பற்றியெல்லாம் பேசிக் கொண்டிருந்தாளே ஒழியச் சொல்ல வந்த விஷயத்தை இலேசில் சொல்பவளாயில்லை. மனோரமாவாக விஷயத்தைக் கேட்க வேண்டும் என்பது அவள் எண்ணம். ஆனால் அடக்கமே உருவான மனோரமா தன்னால் முடிந்த மட்டும் தன் ஆவலை அடக்கிக் கொண்டாள். 'எவ்வளவு நேரம்தான் இவள் இப்படிச் சுற்றி வளைத்துப் பேசிக் கொண்டிருப்பாள்? பார்த்து விடுவோமே!' என்று எண்ணினாள். ஒரொரு சமயம் கேட்டு விடுவோமா என்ற ஆவலும் உந்தித் தள்ளியது. கடைசியில் அந்தப் போட்டியில் பொறுமை யிழந்தவள் சம்பாதான்.

"...ஆமாம், பம்பாயில் உள்ள ஆசாபாசங்களுக்கு ஓர் எல்லையில்லை. ஒன்று போனால் இன்னொன்று ஆளை ஆட்கொண்டுவிடும் என்று அன்று சொன்னேனே, நினைவிருக்கிறதா?" என்று கேட்டாள்.

"ஆமாம், கேட்டாய். நினைவிருக்கிறது. அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?" என்றாள் மனோரமா படபடப்புடன்.

"இதோ பார், மனோ! எனக்கு ஒன்றுமே தெரியாது என்று எண்ணாதே. உன் மனம் இன்னும் சுதாகரையே சுற்றிச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருக்கிறது என்பது எனக்கு நன்றாய்த் தெரியும். ஆனால் அவனோ இந்த ஊரில் இல்லை. வெளியூருக்குப் போய்விட்டான். அவனுக்குச் சொந்த ஊரும் இதுவல்ல. அப்படியிருக்கும் பொழுது அவனை நம்பி என்ன பயன்?" என்று கேட்டாள் சம்பா.

"இதோ பார், சம்பா! எனக்கு யார் மீதும் நம்பிக்கை கிடையாது." — மனோரமாவின் குரலில் அவநம்பிக்கை தொனித்தது; ஆசை அலைபாய்கிறதே என்னும் தாபம் தாண்டவமாடியது.

"நான்தான் அப்பொழுதே சொன்னேனே! இனி சுதாகரை நம்பிப் பிரயோசனமில்லை. அவன் இப்பொழுது பம்பாயில் ஒரு பெரிய பணக்கார சேட்டிடம் வேலை பார்க்கிறானாம். அவன் ரொம்ப ரொம்பக் கெட்டிக்காரனாகி விட்டானாம். சேட்டை மட்டும் என்ன, சேட்டின் மனைவியைக் கூடத் தன் கையில்..." என்று ஆரம்பித்தாள் சம்பா.

"சம்பா!" என்று கடிந்த குரலில் சற்று உரக்கவே கூவினாள் மனோரமா. பிறகு குரலைத் தாழ்த்திக் கொண்டு, "இதோ பார்! நான் இதை யெல்லாம் ஒன்றும் கேட்க விரும்பவில்லை. யார் யாருக்கு என்ன என்ன பிடிக்கிறதோ, அதை அதைச் செய்துவிட்டுப் போகிறார்கள்!" என்றாள்.

"சுதாகருக்கு நீ அவசியம் இல்லை. அவன் உன்னை விரும்பவும் இல்லை என்றுதான் எண்ணுகிறேன். அவன் இப்பொழுது பம்பாயில் என்ன செய்கிறான், ஏது செய்கிறான் என்று யாருக்குமே தெரியாது. அவன் இப்பொழுதெல்லாம் அந்தச் சேட்டின் மனைவியோடு... ...நான் சொல்வதைக் கேள். அவனை அடையலாம் என்ற நம்பிக்கையை அடியோடு விட்டொழித்து விடு. ஒவ்வொருவரும் அவனைப் பற்றி ஒவ்வொன்று சொல்லுகிறார்களாம். பாவம், மாதவப் பிரஸாத் தான்..."

சம்பா வாக்கியத்தை முடிக்கவில்லை. அதற்குள் மாதவப் பிரஸாதின் சின்னப் பெண் சாந்தா, "மனோரமா, மனோரமா!" என்று கூப்பிட்டுக்கொண்டே உள்ளே நுழைந்தாள். "நான் வந்து விட்டேனே!" என்று குழந்தைகளுக்கே இயல்பான குதூகலத்துடன் கூறினாள். சட்டென்று அவளுக்கு ஒரு சந்தேகம் தோன்றியது. திடீரென்று இப்படி நான் இங்கே வந்தது மனோரமாவுக்குப் பிடித்திருக்குமோ, பிடித்திருக்காதோ? அவள் மனோரமாவின் முகத்தைப் பார்த்தாள். தான் வந்ததை மனோரமா தவறாக நினைக்கவில்லை என்பதைக் கண்டு கொள்ளச் சிறுமி சாந்தாவுக்கு அதிக நேரம் பிடிக்கவில்லை. எனவே, தைரியமாக மனோரமாவின் அருகில் சென்று உட்கார்ந்து கொண்டாள். மனோரமா 'டபக்' கென்று அவளைத் தூக்கி மடியில் வைத்துக் கொண்டு ஒரு முத்தமும் கொடுத்தாள்.

அதைக் கண்டபின் சம்பாவுக்கு, தான் அரைகுறையாக நிறுத்திய வாக்கியத்தை முடிக்க வேண்டும் என்ற அவசியமே தோன்றவில்லை.

மாதவப்பிரஸாதின் மகனை மடியில் மனோரமா தூக்கி வைத்துக் கொண்டதைக் கண்டதுமே சம்பா மனத் திருப்தி அடைந்தாள். மறு விநாடியே அவள் மனம் கற்பனையில் லயித்தது: கற்பனை மூலமே சகல விஷயத்தையும் புரிந்துகொண்டு ஒரு முடிவும் கட்டியது. சிறிது நேரத்துக் கெல்லாம் மனோரமாவிடம் விடை பெற்றுக் கொண்டு சுபத்திராவிடம் சென்றாள். "மாமி! மாதவப் பிரஸாதுக்கு மணம் செய்து கொடுக்கும் விஷயத்தில் மனோரமா ஆட்சேபணையே செய்ய மாட்டாள்!" என்று சொன்னாள்.

"எப்படிச் சொல்கிறாய்? அவளைக் கேட்டாயா, என்ன?" என்று கேட்டாள் சுபத்திரா ஆவலுடன்.

"அவளைக் கேட்க வேண்டுமா, என்ன? அவள் மனம் எனக்குத் தெரியாதா?" என்று ஒரே போடாகப் போட்டாள் சம்பா.

அதைக் கேட்ட சுபத்திரா சந்தோஷப் பட்டாள். ராமலால் மட்டும் என்ன? அவரும் இரட்டிப்புச் சந்தோஷம் அடைந்தார். சம்பா அடித்துச் சொல்லி விட்டபின் அவர்களுக்கு வேறு சந்தேகம் எழ முகாந்திரம் ஏது? அந்த இடத்தில் சம்பந்தம் செய்து கொள்வதில் அவர்களுக்கு அளவற்ற மகிழ்ச்சிதான். ஏனெனில் அவர்களுடைய சொத்தை விலைக்கு வாங்கிக் கொண்டவர் மாதவப் பிரஸாத். அந்தச் சொத்தை அநுபவிக்கப் போகிறவள் அவர்களுடைய சொந்தப் பெண். அந்தக் குடும்பத்தில் புகுந்தால் அவர்களுடைய பெண் சுகவாழ்வு வாழ முடியும். நல்ல பணக்காரக் குடும்பத்தில் பெண்ணைக் கொடுப்பதைக் காட்டிலும் பெற்றோர்களுக்கு வேறு என்ன வேண்டும்? அதைக் காட்டிலும் அவர்களுக்கு ஆனந்தம் பயக்கக் கூடிய விஷயம் வேறு ஏதுதான் இருக்க முடியும்?

இனி விவாகத்தைப் பற்றி மனோரமாவிடம் கேட்டுச் சம்மதம் பெற முயல வேண்டும் என்ற அவசியமே அவர்களுக்குத் தோன்றவில்லை. எனவே, அவர்கள் மாதவப் பிரஸாதுக்குத் தங்கள் விருப்பத்தைச் சொல்லி அனுப்பினார்கள்.

நீண்ட கனவு, கொண்ட ஆசை அநாயாசமாக நிறைவேறுவ தென்றால் அதில் உள்ள ஆனந்தம் அபாரமானதாகத் தானே இருக்கும்? மாதவப் பிரஸாதுக்கு அச் செய்தியைக் கேட்டதும் ஏற்பட்ட ஆனந்தத்துக்கு ஒரு கங்கு கரை சொல்லி முடியாது. குடும்பத்தை விட்டுக் குடியேறிப் போன சுகம் மறுபடியும் திரும்பி வந்து விட்டதாகவே தோன்றியது. இழந்த இன்பம் மீண்டும் வந்து விட்டதாகவே மகிழ்ச்சி ஏற்பட்டது. ஆனால் அவருடைய உள்ளத்தில் ஒரே ஒரு விஷயம் மட்டும் முன்னாகக் குத்திக் கொண்டிருந்தது.





காலஞ் சென்ற மனைவிக்குச் சாகும் தறுவாயில், தாம் மறு மணம் செய்து கொள்வ இல்லை என்று அவர் வாக்குத்தத்தம் செய்து கொடுத்திருந்தார் அல்லவா? கடைசிக் காலத்தில் அவளுக்குச் செய்து கொடுத்த அந்தப் பிரதிக்ஞைக்குப் பங்கம் விளைவிக்கலாமா? அவருடைய மனச்சாட்சி அவரையே குத்திக் காட்டிக் குறை கூறிக் கொண்டிருந்தது.

ஆனால்......

மனோரமாவை மனைவியாக அடைவதில் உள்ள ஆனந்தத்துக் கெதிரே, காலஞ் சென்ற மனைவிக்குத் தாம் அளித்துள்ள வாக்கை மீறுவது அவ்வளவு பெரிய விஷயமாக அவருக்குத் தோன்றவில்லை. அவர் மனோரமாவை எதற்காக மறுமணம் செய்து கொள்ளத் தீர்மானித்தார்? தம் இன்பத்துக்காகவா? இறந்துபோன தம் மனைவியின் குழந்தைகளைக் கவனித்துக் கொள்ளவும் அவற்றைச் சுகசாலிகளாக வளர்க்கவும் தானே மணம் செய்து கொள்வதென்று முடிவுக்கு வந்தார்? அப்படியிருக்கும் பொழுது அது சொன்ன சொல்லுக்குப் பங்கம் விளைவிப்பதாக எப்படி ஆகும்?

இப்படியெல்லாம் மனத்தைப் போட்டு உழற்றிக் கொண்டு உள்ளத்தில் உள்ள சந்தேகங்களை யெல்லாம் ஒருவிதமாக விரட்டியடித்துவிட்டு அவர் ராமலாலின் வேண்டுகோளுக்கு இணங்க முன் வருவதாக ஒப்புக் கொண்டார். மனம் உண்டானால் மார்க்கம் உண்டு என்பார்களே! மனோரமாவை மணந்து கொள்ள வேண்டும் என்று மனத்துள் முடிவு கட்டிய மாதவப் பிரஸாத், காலஞ் சென்ற மனைவிக்கு அளித்திருந்த வாக்கைக் காற்றில் பறக்க விட மார்க்கத்தைக் கண்டு பிடித்ததில் ஆச்சரியம் என்ன?

மாதவப் பிரஸாதுடன் தனக்கு மணம் நடக்கப்போகிறது என்று கேள்விப்பட்ட மனோரமா துணுக்குற்றாள். அவளுடைய கல்யாணத்துக்கு அப்படி என்ன அவசியம் நேர்ந்து விட்டது என்று அவளுக்குப் புரியவில்லை. தன் திருமணம், தான் விரும்பாத இன்னொருவருடன் நடக்கப் போகிறது என்பதை நினைக்க நினைக்க அவள் சொல்லொணாத் துயருற்றாள். அன்னியனின் மனைவியாக ஆவதாக அவளுடைய உள்ளுணர்வு அவளைக் குத்தி யெடுத்துக் கொண்டிருந்தது. அவளுடைய சுதந்திரம் சுகம் அனைத்தும் அவளிடமிருந்து வலுக் கட்டாயமாகப் பிடுங்கப்படுவதாகத் தோன்றியது. தனக்குப் பிடிக்காதவனின் தலையில் கொண்டுபோய் இப்படிக் கட்டத் துணிந்து விட்டார்களே தாய் தந்தையர்கள் என்று ஏங்கினாள். மாதவப் பிரஸாத் எத்தனை நல்லவராயிருந்தால் என்ன? எத்தனை கண்ணியம் வாய்ந்தவரா யிருந்தால் என்ன? மனோரமாவுக்கு அவரைச் சிறிதும் பிடிக்கவில்லை. அவரை மணாளனாகக் கொள்ள வேண்டும் என்ற நாட்டம் விழவில்லை.

ஆனால் காரியம் இத்தனை தூரம் மிஞ்சி விட்ட பின் அவள் என்ன செய்வது? இந்த வியாதிக்கு ஏதாவது சிகிச்சை உண்டா? ஏன் கிடையாது? 'முடியாது!' என்று அவள் மறுத்து விட்டால்......? பெண் ஜன்மம் எடுத்த அவள் மறுப்பதா? அது முடிந்த காரியமா? எங்கேயாவது நடக்கக் கூடிய காரியமா?

சுதாகர் எங்கே போய் விட்டான்? அவனுக்கு அவள் வேண்டாமா? அவளை அவன் விரும்பவில்லையா? அவன் பேசிய பேச்செல்லாம் வெறும் வாய்ப் பேச்சுத்தானா? பொய்ப் பேச்சுத்தானா? மேல் பூச்சுப் பேச்சுத்தானா? அவன் எங்கே சுற்றுகிறானோ, என்ன செய்கிறானோ, யார் கண்டார்கள்? அவன் மனோரமாவை அடியோடு மறந்து விட்டானா? அவன் இரண்டாம் கல்யாணம் என்று ஏதும் செய்து கொண்டுவிட வில்லையே! சுதாகரின் முதல் கல்யாணமே மனோரமாவுக்கு இரண்டாங் கல்யாணமாக இருந்தது. அவன்தான் முதன் முதலில் அவளிடம் மனத்தைப் பறிகொடுத்து விட்டானே! அப்புறம் அவளை மறந்து அவன் வேறு ஒருத்தியை மணம் செய்து கொள்வதென்றால் அவளைப் பொறுத்த வரை அது மறு மணம் தானே?

கல்யாணக் கூடத்திலே உட்கார்ந்திருந்த அவளுடைய உள்ளம் பதறியழுதது; புலம்பிக் கதறியது:

“சுதாகர்! சுதாகர்!!”

அவளுடைய உள்ளத்தின் கதறல் அவன் வரை எட்டியிருக்குமா? யார் கண்டார்கள்?

மணமானபின் அவளால் சிரிக்க முடியவில்லை. அவள் யாருக்காகச் சிரிக்க வேண்டும்? எதற்காகச் சிரிக்க வேண்டும்? ஆனால் அவள் அதற்காக அழவும் இல்லை. கடிதம் வந்திருந்தால் அவள் ஒருவேளை சுதாகருக்காக அழுதிருக்கலாம்; ஏன்? கட்டாயம் அழுதே யிருப்பாள். இந்தக் கல்யாணம் வேண்டாம் என்று தைரியமாக மறுத்திருப்பாள். ஆனால் சுதாகர் எங்கே? அவன் கடிதம் எங்கே? அவனிடமிருந்து கடிதம் வரும் என்ற ஆசை அரை குறையாகவே அல்லவா இருந்து விட்டது? அரைகுறையாகவா? ஆசை நிராசையாகவே அல்லவா ஆகிவிட்டது! அவள் கட்டியிருந்த கோட்டை தகர்ந்து மண்ணோடு மண்ணாகப் புழுதியோடு புழுதியாக ஆகி விட்டது. உணர்ச்சியற்ற உள்ளத்துடனும், உடலுடனும் உயிரற்ற கட்டை போல அவள் கல்யாணம் செய்து கொள்ளும்படியாகி விட்டது. அன்று முதல் அவள் முகத்தில் உணர்ச்சி என்பதே அற்று விட்டது. உயிர்க்களை என்பதே இற்று விட்டது. குழந்தைகளுக்கு விளையாட்டுக் காட்டி விளையாடச் செய்யும் பொழுது மட்டும் அவள் முகத்திலே மலர்ச்சி தோன்றும். ஆனால் அந்த மலர்ச்சிக் கடியில் சோகம்தான் கவடு இட்டிருக்கும்; துயரம் தான் படர்ந்திருக்கும்.

மனோரமா!

இந்தப் பெயரை நமக்கு ஏன் தான் வைத்தார்களோ என்று மனோரமா மிகவும் மனம் வெதும்பினாள்! (தொடரும்)

## சாம்பியன் & அசோக் பேனாக்கள்

எல்லோரும் விரும்புவது



சிறந்த வேலைப்பாடு
நல்ல ரகம் உத்திரவாதமுள்ளது

தயாரிப்பவர்கள் : **குஜராத் இண்டஸ்ட்ரீஸ்**

லோஹார் சவுல், லால்ஜீபான்சிங் பில்டிங், பம்பாய்-2

எல்லா பேனா வியாபாரிகளிடமும், ஸ்டோர்களிலும் கிடைக்கும்

---

## தாயின் அன்புக்குரியது

வின்கோலா கர்ப்பிணிகளுக்கும், பிரசவித்த பிறகும் சாப்பிடச் சிறந்தது.

நீடித்த நோய்களுக்குப் பின் சீக்கிரமாக ஆரோக்கியத்தைப் பெற ஏற்ற டானிக். சாப்பிட இனிமையான இது பசியையும் ஜீரண சக்தியையும் உண்டாக்கி எடையை அதிகப்படுத்துகிறது.

**வின்கோலா**
தேர்ந்தெடுத்த டானிக்
வைட்டமின்கள் உள்ளதும் இல்லாததும்

ஸ்டாண்டர்ட் பார்மஸூடிகல் ஒர்க்ஸ் லிமிடெட், கல்கத்தா

PSV-30

---

## 3 வாசனைக் கலாரத்னங்கள்

**கம் கம் ஜவாஜ் • கம்பால் • கமசர்**

அகர்பத்திகள்

டி.எஸ். சுகந்தாலயா,
வாசனைத்திரவிய வியாபாரிகள், பெங்களூர்-2

# லம்பாடி ஸ்திரீ



லம்பாடி ஜாதியினர் நம் நாட்டின் பற்பல பாகங்களில் பலவிதமான பெயர்களுடன் அழைக்கப்படுகின்றனர். ஹைதராபாத் ராஜ்யத்தில் தான் இவர்களை விசேஷமாகக் காணப்படுகின்றனர். நல்ல உடல் வலிமையும், வாட்ட சாட்டமான உருவமும், கரு கருப்பும் உள்ள இந்த ஜாதியினர் ராஜபுதனத்திலிருந்து மொகலாயப் படையெடுப்பின்போது, இப்பிரதேசத்தில் குடியேறினவர்களென்று சொல்லப்படுகிறது.

சமீபகாலம் வரையில் இவர்கள் நாடோடிகளாகவே வாழ்ந்தனர். இவர்கள் தத்தம் உடைமைகளையும் உணவுப்பொருள்களையும் பொதிமாடுகளின் மீது ஏற்றிக்கொண்டு கூட்டங்கூட்டமாக ஆங்காங்கு சுற்றித்திரிந்தனர். ஆனால் இக்காலத்தில் இவர்கள் சொந்தமாக நிலங்கள் வைத்துக்கொண்டு விவசாயத்தில் தமது திறமையை விருத்தி செய்து வருகின்றனர்.

லம்பாடி ஸ்திரீகள் நல்ல உழைப்பாளிகள்; தைரியமும் உற்சாகமும் உள்ளவர்கள். பெண்குலத்திற்கு இயல்பான அலங்கார ஆசை இவர்களையும் விட்டபாடில்லை. ஏனென்றால் உலோகத்தினாலும் கொம்பினாலும் செய்த வங்கிகள், வளையல்கள், பொத்தான்கள், மற்றும் அநேக விதமான ஆபரணங்களையெல்லாம் லம்பாடி ஸ்திரீகள் அணிந்துகொண்டிருப்பதை நாம் காண்கிறோம்.

நாங்கள் இந்தியாவின் மூலை முடுக்குகளிலுள்ள அநேகம் சமூகங்களோடு உறவாடிக் கொண்டிருக்கிறோம். அவர்கள் எங்களை நம்பி இருக்கிறார்கள். நாங்களும் அவர்களுக்கு பணிசெய்வதில் பெருமை அடைகிறோம்.

**பர்மாஷெல் — பாரத நாட்டின் வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கிறது**

BSY-695B TAM

# அவன் திகைப்பு

கி. ரா. கோபாலன்



நகரின் சாலை ஓரங்களில் எவ்வளவோ காட்சிகள். அதுவும் வியாபார முக்கியத்துவம் பெற்ற நகரில் கேட்கவா வேண்டும்? பொம்மை விற்பவன்; மருந்து விற்பவன்; கண்கட்டு வித்தை காட்டுகிறவன்; பழைய இரும்பு சாமான், புத்தகங்கள் விற்பவன்; சோதிடர்கள்—இத்தியாதி. மாலை வேளையில் வெளியில் கிளம்பினால் இவைகளெல்லாம் யார் கண்ணிலும் படாமல் இருக்காது. இவைகளை யெல்லாம் சிரத்தையோடு கவனிக்கும் ரசிகனைப் பார்த்துப் பைத்தியக்காரன் என்றுகூட யாராவது சொல்லலாம். ஆனால் இவைகள் எல்லாம் அவனுக்கு வேண்டியதுதான்.

வீட்டிலிருந்து கிளம்பிய மாதவன் பல சந்துகளையும், தெருக்களையும் கடந்து நகரின் முக்கிய ரஸ்தாவுக்கு வந்து விட்டான். மாலை வேளையில் அவன் வெளியே கிளம்புவது எந்த முக்கியமான ஜோலியையும் உத்தேசித்ததாக இருக்காது. எந்தக் குறிப்பிட்ட இடத்துக்கும் போக வேண்டும் என்பதாக இருக்காது. மாலைப் பொழுதைச் சில மைல் நடந்து கழித்தால் உடலுக்கும் உறுதி; உள்ளத்திற்கும் சிறிது ஆறுதல்.

மாலை மணி நான்கு இருக்கும். மாதவன் ஆற்றங் கரையை நோக்கி நடந்து கொண்டிருந்தான். எப்பொழுதுமே சுற்றிச் சுழலும் அவன் கண்களுக்குச் சாலையின் இரு புறங்களிலும் நடப்பவைகளைக் கவனிப்பதில் ஒரு தனி ஆர்வம். எங்கேனும் சிறு கூட்டத்தைக் கண்டால் கூட 'அங்கே என்ன நடக்கிறது' என்று போய்க் கூட்டத்தை நெருக்கியடித்துப் புகுந்து தலையை நீட்டிப் பார்ப்பான். ஏதோ, எப்படியோ ஒருவிதமாக மாலைப் பொழுது கழிந்தால் சரிதான்.

நகர் பூங்காவுக்குச் சமீபமாக நடந்து வந்து கொண்டிருந்தான் மாதவன். அந்த இடத்தில் எப்பொழுதுமே சிறிது ஜன நடமாட்டம் அதிகம்; சாலை ஓரத்தில் நின்று தங்கள் வியாபாரத்தையோ தொழில் வல்லமையையோ காட்ட நினைப்பவர்களுக்கு அது மிகவும் தகுதியான இடம். நகர் பூங்காவுக்கு வெளிப்புறம் மதில் ஓரமாக மர நிழல்களில் ஐந்தாறு சோதிடர்கள் உட்கார்ந்திருப்பார்கள், வரிசையாக. இது எப்பொழுதும் பார்க்கக் கூடிய சகஜமான காட்சி. அவர்கள் ஒவ்வொருவர் ஒவ்வொரு வகை: ஒருவன் ரேகை சாஸ்திரி; மற்றொருவன் நக்ஷத்திர, ஜாதக தசா புக்திப்படி நவக்கிரகங்களையும் சோதித்தறிந்து பலன் சொல்லக் கூடியவன். இன்னொருவன் குருவி மூலமாகச் சீட்டு எடுத்துக் குறி சொல்லுவான். வேறொருவன் சோழியைக் குலுக்கிப் போட்டு விதியை அளந்து சொல்லுவான். இன்னொருவன் ஒரு சக்கரத்தைச் சுற்றி ஏதோ எண்களை எல்லாம் கூட்டிக் கழித்து வகுத்துப் பலன் சொல்லுவான். இப்படிப் பல ரகம். இந்த ரஸ்தா சோதிடர்களுக்கும் ஏதோ தொழில் நடந்து கொண்டுதான் வந்தது. ஏழை, பணக்காரன் படித்தவன், படிக்காதவன், அறிவாளி, தற்குறி, வயோதிகர், வாலிபர், கிராமவாசி, நகரவாசி, ஆண், பெண் ஒவ்வொருவரும் அந்த ஜோஸ்யர்களை நாடி வந்து தங்கள் வாழ்நாளின் விதிப்பயன் எப்படி இருக்கும் என்று கேட்டுத் தெரிந்து கொண்டுதானிருந்தனர். சில நாள் அந்த ஜோஸ்யர்களைச் சூழ்ந்து பெருங் கூட்டம் நிற்கும். சிலநாள் அங்கு கூட்டமே இருக்காது. அவர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருப்பார்கள். இதெல்லாம் அந்தச் சோதிடர்களின் கால பலனைப் பொறுத்தது!

இவ்வளவு நாளும் இல்லாமல் அன்று மாதவன் அங்கு பிரமிப்படையக் கூடிய காட்சி ஒன்றைக் கண்டான். ஒரு குருட்டுப் பிச்சைக்காரன் தன் கையை நீட்டி அங்கிருந்த ரேகை பார்த்துச் சொல்லுகிறவனிடம் பலன் கேட்டுக் கொண்டிருந்தான். இது மாதவனுக்குச் சிறிது வியப்பாகவே இருந்தது. இந்தக் குருட்டுப் பிச்சைக்காரனும் தன் எதிர்கால வாழ்வில் மலர்ச்சியை எதிர்பார்க்கிறான். அந்த ரேகை சாஸ்திரி சொல்லுவதைக் கேட்கும்போது அவன் முகத்தில் தான் எவ்வளவு ஆவல்! உற்சாகம்! குருடன், அதிலும் பிச்சைக்காரன். அவனுடைய வாழ்வே இருளடைந்தது தானே? உலகத்தில் நல்ல நிலையில் வாழ்கிறவர்களே தங்கள் எதிர்காலத்தில் இன்னும் எது எதையோ விரும்பிச் சோதிடர்களை நாடிச் சென்று கேட்கிறார்கள். அப்படி இருக்கும்போது வாழ்வில் பிரகாசத்தையே காணாத ஒரு குருட்டுப் பிச்சைக்காரன் ஒரு

சோதிடனை நெருங்கித் தன் வருங்கால பலனைக் கேட்பதில் ஏதேனும் தவறு உண்டா?

ரேகை பார்த்துச் சொல்லுகிறவன் பாட்டாகவும் வசனமாகவும் அவனுக்கு ஏதேதோ சொல்லி அவனுடைய உணர்ச்சியையும் உற்சாகத்தையும் அதிக மாக்கிக் கொண்டிருந்தான். பாவம்! இந்த மாதிரி அந்தக் குருட்டுப் பிச்சைக்காரனின் வாழ்க்கையிலும் நம்பிக்கைப் பாதையை அமைத்துக் கொடுப்பவர்கள் இப்படிப்பட்ட சோதிடர்களைத் தவிர வேறு யாராக இருக்க முடியும்?

பிச்சைக்காரனாக இருந்தாலும் அவனிடம் காசு வாங்காமல் அந்த ரேகை சாஸ்திரி பார்த்துப் பலன் சொல்லிவிட மாட்டான். பிச்சைக்காரனை விடச் சிறிது உயர்ந்த நிலையிலுள்ள அவன் யாராவது 'இரண்டணா, நாலணா கொடுக்க மாட்டார்களா' என்று தானே ரஸ்தா ஓரத்தில் கடையை விரித்து உட்கார்ந்திருக்கிறான்? அந்தப் பிச்சைக்காரன் அன்று பகலெல்லாம் அலைந்து யாசித்துச் சேகரித்த இரண்டணாவையோ நாலணாவையோ கட்டாயம் அந்த ரேகை பார்ப்பவனுக்குக் காணிக்கையாகச் செலுத்தி இருப்பான். அவன் கொடுத்த காசை உத்தேசித்தாவது அந்தக் குருடனுக்கு உற்சாகம் ஏற்படும்படி ஏதாவது சொல்லி வைக்க வேண்டாமா? அதைத்தான் செய்து கொண்டிருந்தான் அந்த ரேகை சாஸ்திர நிபுணன்.

பாவம்! மாதவனுக்கு அந்தப் பிச்சைக்காரனைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. மாதவனுக்கு நினைவு தெரிந்த நாளிலிருந்து அந்தப் பிச்சைக்காரன் அந்த ஊரில் வசித்து வருகிறான். வீதியில் நடந்து கொண்டே 'ஐயா காலணா, சாமி காலணா' என்று கூவிக் கொண்டு வருவதைத் தவிர அவன் வாக்கிலிருந்து வேறெதுவும் வெளி வராது. வாழ்வில் ஓடிய பல வருடங்களை அவன் அப்படித்தான் கழித்து வந்தான் என்பது அவனைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டிய ரகசியமில்லை. இந்நிலையில் அவன் திடீரென்று தன் வாழ்வில் எத்தகைய மாறுதலை விரும்பித் தன் குருட்டுக் கண்களுக்குத் தென்படாத கை ரேகைகளைக் காட்டிப் பலன் கேட்க விரும்புகிறான் என்பது தான் சிறிதும் புரியவில்லை.

அந்தச் சோதிடன் அந்தக் குருடனிடம் என்ன சொல்லுகிறான் என்பதைக் கேட்க வேண்டுமென்று மாதவனுக்கு ஆவல். அவர்களைச் சுற்றிச் சிறிதாவது கூட்டம் இருந்தால் மாதவன் சட்டென்று நெருங்கிப் போய்ப் பார்த்து விடுவான். கூட்டமில்லாத போது மாதவனைப் போன்ற அந்தஸ்து உடையவர்கள் நெருங்கிப் போய்ப் பார்ப்பது சிறிது கூச்சத்தை அளிக்கக் கூடியதாய்த்தானிருந்தது. அவன் சிறிது நேரம் தயங்கி நின்றானே தவிர மறுபடியும் நடக்க ஆரம்பித்தான். ஆனால் அந்தக் காட்சி அதோடு அவன் மனதை விட்டு அகன்று விட வில்லை.

அந்தக் குருட்டுப் பிச்சைக்காரன் அந்த ரேகை பார்த்துச் சொல்லுகிறவனிடம் எதை விரும்பிக் கேட்டிருப்பான்...?

அவன் யாரேனும் ஒரு பெண்மீது மோகம் வைத்திருப்பான். அவளைக் கல்யாணம் செய்து கொள்ள முடியுமா என்று சோதிடனைக் கேட்டிருப்பான்.

அப்படி இல்லையானால்...?

தனக்கு எங்கேனும் பெரும் புதையல் அகப்படுமா? அல்லது பெரிய கோடீசுவரனாவதற்கு ஏதாவது எதிர்காலத்தில் வழி உண்டா என்று கேட்டிருப்பான்.

அப்படியுமில்லா விட்டால்?

அவனுடைய இயற்கையான விருப்பம் தன் கண்களுக்குப் பார்வை ஒளி ஏற்பட்டு உலகத்தில் குருடனென்ற தாழ்மையான சொல்லுக்கு விலக்காகி உலகில் நடமாடுவேனா என்றும் கேட்டிருக்கலாம்.

அதுவுமில்லா விட்டால்?

குருடனாயிருந்தாலும் பாதகமில்லை. வாழ்வில் பிச்சைக்காரன் என்ற இழிச் சொல்லுக்கு ஆளாகாமலிருக்க இனி என் விதியில் ஏதேனும் மாறுதல் ஏற்படுமா என்று கேட்டிருக்கலாம்.

மாதவன் நடந்து கொண்டிருந்தான். அவன் மனம் இப்படியெல்லாம் தனக்குள் விவாதித்துக் கொண்டே வந்தது. அந்தக் குருடன் எதை அறிந்து கொள்ள விரும்பி ரேகை பார்ப்பவனிடம் வந்து தன் கையைக் காட்டிக் கேட்டிருப்பான் என்பதை அறிந்து கொள்ளாத வரையில் மாதவனின் மனசுக்கு ஆறுதல் ஏற்படாது போலிருந்தது.

மறுநாள் மாலை. மாதவன் வழக்கம் போல் வீட்டை விட்டு வெளியே கிளம்பினான். அன்று அவனுடைய திட்டம் ரயில்வே ஸ்டேஷன் வரையில் போய் வருவதென்று. ரயில்வே ஸ்டேஷனுக்குச் சமீபமாக வந்த போது இன்றும் அவனுக்குத் திகைப்பு ஏற்படும் வண்ணம் ஒரு காட்சியைக் காண நேர்ந்தது. நேற்று பார்த்த அதே குருட்டுப் பிச்சைக்காரன் அங்கொரு மரத்தடியில் உட்கார்ந்திருந்த கைரேகைச் சோதிடனிடம் தன் கையைக் காட்டி ஆர்வத்தோடு மிகவும் கவனமாக எதையோ கேட்டுக் கொண்டிருந்தான். பாவம்! இந்தக் குருட்டுப் பிச்சைக்காரனுக்கு ஏன் இந்தப் பைத்தியக்காரத்தனம்?

இந்தப் பைத்தியக்காரத்தனத்தைச் செய்வதில் நன்கு படித்தவர்களும், அநுபவ ஞானமுடையவர்களும், அறிவாளிகளுமே தயங்காதபோது கேவலம் ஒரு குருட்டுப் பிச்சைக்காரன் செய்வதில் என்ன பிசகு...? நேற்று பார்த்த ரேகை நிபுணன் மனசுக்குத் திருப்திகரமாகச் சொல்லியிருக்கமாட்டான். இன்று வேறொருவனைப் பார்த்து அவன் எப்படிச் சொல்லுகிறான் என்று பார்க்கலாமல்லவா?

போகட்டும். அப்படிப் பல சோதிடர்களைக் கண்டு கேட்க வேண்டிய விஷயம் எவ்வளவு முக்கியத்துவம் பொருந்தியதாக

இருக்க வேண்டும்? அது என்ன...? அதைத் தெரிந்து கொண்டால்தான் மாதவனின் மனத்துக்கு நிம்மதி ஏற்படும் போலிருந்தது. ஆனால் அன்றும் அவர்களை நெருங்கிப் பார்க்கச் சூழ்நிலை சரியானதாக இல்லை. மாதவன் பலவிதமாகச் சிந்தித்தவாறே ரயில்வே ஸ்டேஷனை நோக்கி நடந்தான்.

மறு நாள் காலை; நகர் பூங்காவுக்குச் சமீபமாக உட்கார்ந்திருக்கும் கை ரேகை சாஸ்திரியை நெருங்கிக் கேட்க மாதவனுக்கு ஒரு சந்தர்ப்பம் அகப்பட்டது.

"என்னப்பா, மூந்தா நாள் ஒரு குருட்டுப் பிச்சைக்காரன் உன்னிடம் வந்து ஏதோ கேட்டானே...? இல்லையா...?" என்றான் நயமான குரலில்.

"ஆமாங்க..." என்றான் ரேகை சாஸ்திரி சுவாரஸ்யம் இல்லாதவன் போல்.

"அவன் உன்னிடம் என்ன கேட்டான்?" என்றான் மாதவன் பொங்கி யெழும் தன் ஆர்வத்தை இழுக்காதவனாய்.

"அவன் கிடக்கிறாங்க பைத்தியக்காரன். அவன் என்னோடு மாத்திரம் விடல்லே. ஊரிலே இருக்கிற எல்லா சோதிடனையும் தான் பார்த்துக் கேட்கிறான்...."

"அது தெரிகிறது. அவன் அப்படி என்ன முக்கியமான காரியத்தை உத்தேசித்துச் சோதிடம் கேட்கிறான் என்றுதான் கேட்கிறேன்......" என்றான் மாதவன்.

"அவன் ஏதோ தொழில் நடத்தப் போகிறானாம். அது நன்றாய் நடக்குமான்னு கேட்டான். பைத்தியக்காரன்! இரண்டு கண்ணும் சூன்யம். அதிலும் பிச்சைக்காரன். இவனாவது தொழில் நடத்தவாவது!" என்றான் ஏளனமாக ரேகை சாஸ்திரி.

"நீதான் அவன் கையைப் பார்த்தாயே, அதில் ஏதாவது தொழில் நடத்தக் கூடிய அதிருரியான ரேகை இல்லையா?" என்றான் மாதவன் அந்த ரேகை சாஸ்திர நிபுணனை ஆழம் பார்ப்பதுபோல்.

"அதிலே என்ன இருக்கு? ஒன்றும் இல்லை. அவன் தன்னுடைய ஆயுசு முழுதும் இப்படித்தான் பிச்சை எடுத்துப் பிழைத்தாகணும்" என்றான் அவன்.

"சரிதான். இருந்தாலும் அவனுக்கு ஏதோ தொழில் நடத்தணும்னு ஆசை இருக்காப்பிலே தானிருக்கு. அவன் அப்படி என்ன தொழில் நடத்த ஆசைப் படுகிறான் என்பதாவது விளங்கியதா?"

"அதுதானே விளங்கல்லே. அவன் வாய் மூலமாகவே !அதைத் தெரிந்து கொள்ளணும்னு எவ்வளவோ சிரமப் பட்டுப் பார்த்தேன். அதை மாத்திரம் அவன் சொல்லவே யில்லை. ஏதோ இரண்டணா கொடுத்தான். அவன் கொடுத்த காசுக்காகவாவது ஏதாவது திருப்தியாகச் சொல்லி வைப்போம் என்று 'தொழில் ரேகை மேலே தன ரேகை ஓடுது, ஜீவன ரேகையைப் போய்ப் பாக்கிய ரேகை தொடுது. நீ எந்தத் தொழிலை எடுத்து நடத்தினாலும், குருட்டு அதிர்ஷ்டமாக நடக்கும், போ'ன்னு சொல்லி அனுப்பினேன்."

இதற்கு மேல் அவனிடமிருந்து வேறெதுவும் அறிந்து கொள்ள விரும்பவில்லை. அவனுக்கு இப்பொழுது மனதில் ஒரு புதுக் கவலை தோன்றியது. அந்தக் குருட்டு பிச்சைகாரன் என்ன தொழில் நடத்த ஆசைப் படுகிறான்? பிச்சை எடுத்த காசில் ஏதேனும் சிறு தொகை சேமித்து வைத்திருப்பான். அதைக் கொண்டு ஏதேனும் ஒரு சிறு தொழிலை ஆரம்பித்து நடத்திக் கௌரவமாக ஜீவிக்கலாமே என்று நினைக்கலா மல்லவா?

ஒரு வாரம் சென்றது. அந்தக் குருட்டுப் பிச்சைக்காரன் மாதவனின் கண்ணில் படவே யில்லை. அவனைப் பற்றிய நினைவும் மாதவனின் மனத்திலிருந்து தேய்ந்து மறைந்துவிட்டது. ஒரு நாள் மாதவன் கடை வீதிப் பக்கம் போய்க் கொண்டிருந்தான். கடை வீதிக் கிடையே உள்ள ஒரு சந்தில் ஓரமாக ஒரு சிறு கூட்டம் நின்று கொண்டிருந்தது. இயற்கையாக மாதவனுக்குள்ள சிரத்தையினால் அவன் அந்தக் கூட்டத்தை நெருங்கிச் சிரமப் பட்டுத் தலையை நீட்டி எட்டிப் பார்த்தான். என்ன ஆச்சரியம்! அவன் மின்சாரத் தாக்குதலுக் குள்ளானவன் போல் துள்ளிக் குதித்து நின்றான்.

அந்தக் குருட்டுப் பிச்சைக் காரன். ஆம்! அதே குருட்டுப் பிச்சைக்காரன்தான். தன்



கை ரேகையைக் காட்டிப் பல சோதிடர்களிடம் பலன் கேட்ட அந்தக் குருட்டுப் பிச்சைக்காரனேதான். இப்பொழுது அவன் ஒரு ரேகை பார்த்துச் சொல்லும் சோதிடனாக மாறி நின்றான். அவனுடைய உருவத்தில் எவ்வித மாறுதலும் ஏற்படா விட்டாலும் உடையிலே பெரிய மாறுதல் ஏற்பட்டிருந்தது. நீண்ட அங்கி, தலையில் ஒரு முண்டாசு, குட்டையான தாடி, கையில் ஒரு சிறிய பிரம்பு, ஏதோ மந்திரக் கோல் போல. அவனுக்குப் பக்கத்தில் ஒரு பெரிய அட்டையில் பலவித ரேகையோடு அமைந்த ஒரு பெரிய கையைப் போன்ற சித்திரம் வரைந்து வைக்கப் பட்டிருந்தது. இன்னொரு அட்டையில் 'அதிசயம்! அற்புதம்! கேட்கத் தவறாதீர்கள்! இரண்டு கண்ணும் தெரியாத குருட்டுக் கை ரேகை நிபுணர். கை பார்த்துப் பலன் சொல்ல அணா எட்டு' என்று எழுதி வைக்கப் பட்டிருந்தது. அந்தக் குருட்டுச் சோதிடருக்கு ஊழியம் செய்ய ஒரு சிஷ்யன் வேறு இருந்தான். நவநாகரிக உடையணிந்த வாலிபனொருவன் அந்தக் குருடனிடம் தன் கையைக் காட்டிக் கொண்டிருந்தான். அந்தக் குருடன் தனக்குக் கண் தெரியாவிட்டாலும் ஞான திருஷ்டி மூலமாகவே எல்லா ரேகைகளையும் பார்த்துத் தெரிந்து கொண்டவன் மாதிரி மலையருவி விழுவது போல் பாட்டாகவும் வசனமாகவும் ஏதேதோ சொல்லிக் கொண்டு போனான். நீட்டிய கையை எடுக்காமல் அந்த வாலிபனும் குருடனின் சரளமான வார்த்தைகளில் மதிமயங்கி இருந்தான். இதையெல்லாம் பார்க்கப் பார்க்க மாதவனுக்கு ஏற்பட்ட வியப்பில் உன்மத்தம் அடைந்தவன் போல்தான் நின்றான்.

அந்த வாலிபனுக்குப் பிறகு பலர் தங்கள் கைகளைக் காட்டி அந்த குருட்டுச் சோதிடனிடம் தங்களுக்கு எதிர்காலத்தில் ஏற்படக் கூடிய சுக துக்கங்களைத் தெரிந்து கொண்டனர். ஒரு மணி நேரத்திற்குள் அந்தக் குருடனுக்கு ஐந்தாறு ரூபாய் சேர்ந்து விட்டது. அவனிடம் தங்கள் கை ரேகையைக் காட்டிக் கேட்டவர்களெல்லாம் அவன் மிக அபூர்வமாகப் பலன் சொல்லுவதாகச் சொல்லிக் கொண்டு சென்றனர்.

மாலை மணி ஆறுக்கு மேலாகி விட்டது. தெரு விளக்குகள் பிரகாசிக்கத் தொடங்கின. அக் குருட்டுச் சோதிடனைச் சூழ்ந்து நின்ற கூட்டமும் சிறிது சிறிதாகக் கலைந்தது. ஆனால் மாதவன் மட்டும் அந்த இடத்தை விட்டு நகரவே இல்லை. எப்படியாவது அந்தக் குருடனின் வாயைக் கிளறி ஏதாவது தெரிந்து கொண்டால்தான் அவன் மனசுக்கே ஒரு சாந்தி ஏற்படும் போலிருந்தது.

"ஏனப்பா! நீ ஏற்கெனவே பிச்சை எடுத்துக் கொண்டிருக்கவில்லையா?" என்று கேட்டான் மெதுவாக அந்தக் குருட்டுச் சோதிடனைப் பார்த்து.

"ஆமாம்."

"இப்பொழுது திடீரென்று ரேகை பார்த்துச் சொல்லக் கிளம்பி விட்டாயே!"

"ஆமாம்! பிச்சை எடுப்பதைவிட இது நல்ல தொழில் இல்லையா?"

"அது சரிதான். ஆனால் நீ கூடப் பல சோதிடர்களிடமெல்லாம் உன்ன கையைக் காட்டிப் பலன் கேட்டுக் கொண்டிருந்ததைக்கூட நான் பார்த்திருக்கிறேன்" என்றான் மாதவன்.

"ஆமாம்! அது எதற்காகத் தெரியுமா? இந்தத் தொழிலின் ரகசியம் என்னவென்று தெரிந்து கொள்ளத்தான். பத்துப் பேரிடம் கையைக் காட்டினால் பத்துப் பேர் சொல்லுகிற விஷயங்களையும் தெரிந்து கொள்ளலாமல்லவா?"

"சரிதான். நீ தான் குருடனாச்சே! உனக்கு எப்படிப் பிறர்கையிலே இருக்கிற ரேகை தெரியும்?" என்றான் மாதவன்.

இதைக் கேட்டதும் அந்தக் குருடனின் முகத்தில் ஏளனச் சிரிப்புத் தோன்றி மறைந்தது. "உங்களுக்குத் தெரியாதுங்க. இரண்டு கண்ணும் தெரிந்த சோதிடர்களெல்லாம் அப்படியே கையிலிருக்கிற ரேகை எல்லாவற்றையும் பார்த்து உள்ளபடியே சொல்லிட றாங்கன்னு நினைக்கிறீங்களா...? எல்லாம் வெறும் கதை. இதோ பாருங்க. இந்த உலகத்திலே மனசு குருடான ஜனங்கள் இருக்கிற வரையிலே என்னைப் போல் கண் குருடான பதினாயிரம் சோதிடன் வந்தாலும் பிழைப்புக்கு வழி உண்டு" என்றான்.

அவனுடைய வார்த்தை மாதவனைத் திகைப் படைய வைத்தது. "வாஸ்தவம். ஆனால் எல்லாக் குருடர்களும் உன்னைப் போல் உலக தத்துவம் தெரிந்தவர்களாக இருப்பார்களா?" என்று சொல்லி விட்டு அந்த இடத்தை விட்டகன்றான் மாதவன்.

# கண்ணன் வந்தான்!

எம். ஜி. சுவாமி

அண்ணாவிடமிருந்து, வெகு நாட்களுக்குப் பிறகு, ஏன் பலவருஷங்கள் கழித்தேதான், கடிதம் வந்திருந்தது. அவர் ஒரே மகன் கண்ணன் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையில் தேறியிருந்தான். அவனைக் கல்லூரியில் சேர்ப்பதற்காக, இன்னும் ஒரு வாரத்தில் வருவதாக எழுதியிருந்தார். பையனின் படிப்பு முடியும் வரையில் என் வீட்டிலேயே வைத்துக் கொள்ள வேண்டுமாம்.

கடிதத்தைப் படித்த நான் சிறிது நேரம் ஆச்சரியத்தில் ஆழ்ந்து போனேன். பணக்கார அண்ணன் என்னையும் மதிக்கிறார். என் வீடு தேடி இதுவரை ஒருநாளும் வராதவர் இப்பொழுது வரப் போகிறார். என்னை நம்பி, தம் மகனை என் வீட்டிலேயே விட்டுவிட்டுப் போகப் போகிறார். ஆச்சரியப்பட வேண்டியதுதான்.

ஏழைப் பெற்றோர்களுக்கு நாங்கள் இருவர்தான் பிள்ளைகள். அண்ணா கொஞ்சம் படிப்போடு நிறுத்திக் கொண்டார். நானோ, வறுமையையும் வீண் சிரமத்தையும் பொருட்படுத்தாது, படித்து முடித்து, முதல் தேதி சம்பளக்காரனாகி, சர்க்கார் காரியாலயங்கள் ஒன்றில் வேலையில் அமர்ந்தேன். அப்பொழுதுதான் அண்ணாவுக்குக் கல்யாணம் நடந்தது. பெண் வீடு, சொந்தத்தில் பெரிய பணக்கார இடம்! மனைவி வீட்டோடேயே அவர் போய்த் தங்கி விட்டார். அண்ணாவின் மனைவி பத்மா பெற்றோர்களுக்கு ஒரே செல்லப் பெண். பிறகு கேட்க வேண்டுமா! கிராமத்தில் பணக்கார மிராசுதார் ஆனார் என் அண்ணா. இந்தப் பெருமை ஒன்றுதான் எனக்கு.

என் பெற்றோர்களும், ஒன்றிரண்டு வருஷங்களில் காலகதி அடைந்து விட்டனர்.

அண்ணாவைப் போன்று நான் அதிர்ஷ்டசாலியுமில்லை, சோம்பேறியுமில்லை. உழைப்பை நம்பி வாழ்ந்த எனக்கு, உழைப்பினால் உயராத ஒரு ஏழையின் மகள் மனைவியாகக் கிடைத்தாள். என் மனைவி தங்கம் குணத்திலும் தங்கம்தான். எதுவும் இல்லையே என்று ஆயாசப் படமாட்டாள். உள்ளதைக் கொண்டு திருப்தியடைந்து விடுவாள். எங்களுக்குச் செல்வம் இல்லாவிட்டாலும், புத்திர பாக்கியத்துக்குச் சிறிதும் குறைவில்லை. மூன்று குழந்தைகள். எப்படியோ காலம் போய்க் கொண்டிருந்தது.

மலைக்கும், மடுவுக்கும் ஏணி வைத்தாலும், எட்ட முடியாத ஏற்றத் தாழ்வையுடைய இரு சகோதரர்களாகிய நாங்கள் தொலை தூரத்தை இடைவெளியாக வைத்து, வெவ்வேறு ஊரில் பிரிந்து வாழ்ந்து வந்தோம். நான்தான் எப்பொழுதாவது அவசியம் நேர்ந்த போது ஒன்றிரண்டு தடவை அண்ணா வீட்டுக்குப் போய் வந்திருக்கிறேன். அண்ணாவும் சரி, அவர் மனைவி பத்மாவும் சரி எங்கள் வீட்டுக்கு வந்தறிய மாட்டார்கள். இத்தனைக்கும் இருவருக்கும் அண்ணன் தம்பி என்ற உறவு முறை விட்டுப் போகவில்லை.

'கண்ணன் எங்களோடு இருக்கும் நாலைந்து வருஷங்களுக்குக் கஷ்டமிருக்காது. மகனை உத்தேசித்து அண்ணன் ஊரிலிருந்து பணமும், மற்ற மற்றப் பொருள்களும் அனுப்பி வைப்பார்' என்று இப்படி ஒரு எண்ணம் என் மனத்தில் கிளைத்தோடியது. இதற்குக் காரணம் அண்ணாவிடமிருந்து வந்திருந்த அந்தக் கடிதம்தான்.

தங்கத்தினிடம், அண்ணன் கடிதத்தின் சாராம்சத்தைச் சொன்னேன். அவளுக்குண்டான திகைப்பை அவள் முகம் எடுத்துக் காட்டியது. சிறிது நேரம் அவள் பலத்த யோசனையில் ஆழ்ந்து விட்டாள்.

"கண்ணன் இங்கு வருவது பற்றி எனக்கும் சந்தோஷம்தான். அவனுக்கு எதையும் பார்த்துச் செய்வதில் ஒன்றும் சிரமமிருக்காது. என் குழந்தைகளைக்கூட நான் கவனிக்க மாட்டேன். அவனுக்குத் திருப்திப்படும்படி என்னால் பார்த்துக் கொள்ள முடியும். அவர்கள் பணம் கொடுத்தாலும் வாங்கிக் கொள்ளக் கூடாது. நாம் என்ன சாப்பாட்டுக் கடையா நடத்துகிறோம்! ஆனால் நாம் செய்வது, பணக்காரர்களாகிய அவர்களுக்குத் திருப்திப்படுமா! இந்தக் குறைக்கு இடம் வைத்துக் கொள்ளக் கூடாது. உங்கள் அண்ணிக்கு எப்போதுமே பணக்காரி என்ற கர்வம் தலைக்கு மேலே உண்டு. நாளைக்கு அவர்கள் இடித்துக் காட்டினால் என்னால் சகித்துக் கொள்ளமுடியாது. இப்போதே சொல்லி விட்டேன்" என்று தங்கம் தன் மனத்தில் உள்ளதைச் சொல்லி விட்டாள்.

"தங்கம், அவ்வளவு தூரத்துக்குப் போகாது. அண்ணன் ஒன்றும் சொல்ல மாட்டார். அண்ணியின் பணம் அவர்களோடேயே இருந்துவிட்டுப் போகிறது. அவர்களாகக் கேட்கும் போது, நாம் எப்படி முடியாது என்று சொல்ல முடியும்? நம் மனதுக்குத் திருப்தியாய் நடந்து கொண்டால் போதும்" என்று நான் கூறியபோதுதான், தங்கத்துக்கும் மனசு சமாதானப் பட்டது.

* * *

அண்ணாவும், அவர் மகன் கண்ணனும் ஊரிலிருந்து வந்து சேர்ந்தார்கள்.

"தம்பி! நம் பையன் கண்ணனை ஹாஸ்டலில் கொண்டுவிட எனக்கிஷ்டமில்லை. சின்னப் பையன்; அவ்வளவாக விவரனை போதாது. உன் வீட்டிலேயே இருந்து படிக்கட்டும். கவனமாகப் பார்த்துக் கொள். செலவுக்கு வேண்டிய பணம் அனுப்பி வைக்கிறேன்" என்றார் அவர்.

"இங்கேயே அவன் இருக்கட்டும், அண்ணா. ஆனால் அவன் சாப்பாட்டுக்கு நீங்கள் பணம் கொடுக்க வேண்டாம். அவன் யார்! எங்கள் குழந்தைதானே!" என்றேன் நான். இது ஒப்புக்குச் சொன்ன வார்த்தையல்ல.

கண்ணனைக் கல்லூரியில் சேர்த்து விட்டு, மகனுக்கு நல்ல புத்திமதிகள் சொல்லி விட்டு, அவர் ஊருக்குத் திரும்பினார்.

சாதுப்பிள்ளை கண்ணன். "பசிக்கிறது சாதம் போடு, சின்னம்மா!" என்று கேட்க மாட்டான். தங்கமும் சரி, நானும் சரி, அவனை வேற்றுமையாகக் கருதவில்லை. குழந்தைகளுக்கு இருந்தாலும் இல்லாவிட்டாலும் கண்ணனின் ஆகார விஷயத்தில் தங்கம் ஒன்றும் குறைவு வைக்கவில்லை. பாரமாக அவன் இருக்கிறானே என்று எண்ணவோ, முகம் கோணவோ அவள் செய்யவில்லை. அண்ணி பத்மா, தன் பிள்ளைக்கு எதுவும் செய்யவில்லை என்று குறைப்பட்டுக்கொள்ளாமல் ஒவ்வொன்றும் அவனுக்குப் பார்த்துப் பார்த்து, பயந்து, பயந்து செய்தாள். அவர்களிடத்தில் நல்ல பெயர் எடுக்க வேண்டும் என்ற குறிக்கோள்தான் அவளுக்கு.

இரண்டு மூன்று மாதங்கள் போயின.

அண்ணன் பணம் அனுப்புகிறேன் என்று சொல்லிப் போனவர்தான். மகனின் கல்லூரிப் படிப்புக்கு உண்டான சம்பளம் முதலியவற்றிற்கு மட்டுமேதான் பணம் அனுப்பி வைத்தார். அவன் சாப்பாட்டுக்கு நாங்கள் பணத்தை எதிர்பார்க்காததினால், எங்களுக்கு இது ஒரு பெரும் குறையாகத் தோன்றவில்லை.

ஒரு நாள் அண்ணி ஊரிலிருந்து மகனைப் பார்த்து விட்டுப் போக வந்தார்கள். வந்ததும் வராததுமாக அவர் கண்ணனைப் பார்த்து "என்னடா! கண்ணு! இப்படி இளைத்துப் போயிருக்கிறாய்! சரியாகச் சாப்பிடுகிறாயா, இல்லையா! சரியாய் எண்ணெய்த் தேய்த்து ஸ்நானம் பண்ணுகிறாயா!" என்று கேட்டார்.

அவர் கூறிய வார்த்தைகள் எங்கள் உள்ளத்தில் சுருக்கென்று தைத்தது.

தங்கம் முகத்தை ஒரு மாதிரியாக வைத்துக் கொண்டு என்னைப் பார்த்தாள். நான் அவளைப் பார்த்தேன். என் முக மாறுதலையும் அவள் அறிந்திருக்க வேண்டும்.

தாய்க்கு மகன் என்ன பதில் சொல்லப் போகிறான் என்பதை அறிய என் ஆவல் அதிகரித்தது.

"என்னம்மா, நீ சொல்லுகிறது! நல்லபடியாகத் தானே இருக்கிறேன்! சித்தப்பா வீட்டில் இருப்பதில் எனக்கு ஒன்றும் கஷ்டமில்லை. சின்னம்மா செய்வதுபோல், உன்னால்கூட எனக்கு இம்மாதிரி செய்ய முடியாது" என்று தாயின் முகத்தில் அடித்தாற்போல் கண்ணன் சொன்னான்.

எடுத்த எடுப்பிலேயே தன் பணப் பெருமையைக் காண்பித்து, வெற்றிக் கொடியை நிலைநாட்டிவிட எண்ணிய அண்ணியாருக்கு இது பெருத்த ஏமாற்றம்தான்.

'என்னதான் ஆயிரம் பணக்காரியானாலும், அண்ணிக்கு இந்த அகம்பாவம் கூடாது. கண்ணனை நாங்கள் என்ன பட்டினியாகவா போட்டு விட்டோம்! அவன் சாப்பிட்டு மிஞ்சியதுதானே, நாங்கள் சாப்பிடுவது! அவருக்கு அவ்வளவாகப் புத்தி போதாது. பணத்திமிரில், வாயில் வந்ததை எல்லாம் உளறுகிறார்' என்று எண்ணி, நான் இதைப் பெரிதுப்படுத்திக் கொள்ளவில்லை. அப்போதே மறந்து விட்டேன்.

ஆனால் தங்கம் இலேசில் சமாதானம் அடைகிறவளாயில்லை. "நான் அப்போதே சொன்னேன். நடந்ததைப் பார்த்துக் கொண்டீர்கள், இல்லையா!" என்று என்னிடம் தனிமையில் சொன்னதோடு அவள் நிறுத்திக் கொண்டாள்.

அண்ணியார் மகனைப் பார்க்க ஐந்தாறு தடவைகள் வந்து போய்க் கொண்டிருந்தார். ஒரு சமயம் ஒரு மாதத்தில் வருவார். சில சமயங்களில் இரண்டு, மூன்று மாதங்கள் கழித்து வருவார். அப்படி வரும்போதெல்லாம், ஏதாவது சுடு சொல் சொல்லிக் குத்திக் காட்டாமல் இருப்பதில்லை. கண்ணனை நாங்கள் எவருமற்ற அனாதையாகப் பாவிக்கிறோம் என்ற அர்த்தம் தொனிக்க அவர் பேசி வந்ததுதான் தங்கத்துக்கும் எனக்கும் கட்டோடு பிடிக்கவில்லை.

தங்கம்தான் அதிகம் பொருமினாள்.

"இத்தனை தூரம் செய்தும், அண்ணியார் பேசுகிறதைப் பார்த்தீர்களா! நம் குழந்தைகளுக்கு வாரத்திற்கு ஒருமுறை தலைக்கு ஊற்றினாலும், கண்ணனுக்குச் சனி, புதன் எண்ணெய் ஸ்நானம் தவறினதில்லை. அவன் ஊரிலிருந்து வந்ததைவிட, இப்போது எவ்வளவோ சதைப் பிடிப்பாயிருக்கிறான். இருந்தும் பையனின் தாயார் குறைப் படுகிறார். நீங்கள் வாங்குகிற சம்பளம் சொற்பம். அவனுக்கு நான் எதில் குறை வைத்தேன்!" என்று கூறும்போது அவள் அழுதே விட்டாள்.

"அசட்டுத் தங்கம் என்றால் உனக்குத்தான் தகும். அண்ணியார் வார்த்தைகளை நீ ஏன் காதில் போட்டுக் கொள்கிறாய்! அவைகளுக்கு மதிப்பு ஏன் வைக்கிறாய்! முடிந்தவரையில் வஞ்சனையின்றிச் செய்திருக்கிறேன் என்று திருப்திப்பட்டுக் கொள். அது போதும்" என்று அவளைச் சமாதானப் படுத்துவதற்குள் எனக்குப் போதும் போதுமென்றாகி விட்டது.

கண்ணனும் சும்மா இருந்துவிடவில்லை. தாயின் துடுக்கு வார்த்தைகளை அவ்வப்போதே மட்டம் தட்டிக் கொண்டு வந்தான். அதுமட்டு மல்ல. "சித்தி! அம்மா சொல்கிறதைக் கேட்டு வருத்தப்பட வேண்டாம். அவருக்கு என்ன தெரியும்!" என்று அவன் தன் சொந்த மனத்தோடு தங்கத்தினிடம் கெஞ்சாத குறையாகப் பேசுவான்.

## நெற்பயிர்கள் காய்கின்றன

நீங்களின் முந்தைய 'கல்கி' இதழ் ஒன்றில் நீர்ப்பாசன இலாகாவின் ஊழலைப் பற்றி எழுதியிருந்தீர்கள். அதே தவறுதலை மறுபடியும் நீர்ப்பாசன இலாகா செய்திருக்கிறது. மதிப்பிற்குரிய ராஜாஜி அவர்களின் ஆட்சியில் மேட்டூர் அணையில் 117 அடி தண்ணீர் இருக்கும்போது தஞ்சை ஜில்லாவிலே வெண்ணார் டிவிஷன் பாசனத்திலுள்ள நஞ்சை நிலங்களெல்லாம் புரட்டாசி மாத ஆரம்பத்திலிருந்து இன்று வரை தண்ணீர் இல்லாமல் காய்கிறது. என்னைப் போலுள்ள நடுத்தர நிலச்சுவான்தார்களிலிருந்து பெரிய மிராசுதார்களும் மிகச் சிறிய நிலச்சுவான்தார்கள், குத்தகை சாகுபடியாளர்கள் எல்லோரும் தங்களின் நிலத்திலுள்ள இளம் பயிர்கள் தண்ணீர் இல்லாமல் காய்ந்து எரிந்து போவதைப் பார்த்து வயிறு பற்றி எரிகிறார்கள்.

நான் சைக்கிளில் என்னுடைய ஊரைச் சுற்றிச் சுமார் 50 மைல் விஸ்தீரணம் பிரயாணம் செய்து பார்த்ததில் ஒவ்வொரு விவசாயியும் தன்னுடைய நிலத்தில் பயிர் காய்வதைப் பார்த்து ரத்தக் கண்ணீர் வடிப்பது பார்க்க மிகவும் பரிதாபகரமான காட்சியாக இருக்கிறது. நடவு நட்ட பங்குகளெல்லாம் தண்ணீர் இல்லாமல் வெடித்துப் பயிர்களெல்லாம் வாடிவிட்டன. குறுவைப் பயிர்கள் தொண்டைக் கதிரில் தண்ணீர் இல்லாமல் வாடி வதங்குகின்றன. குறுவைப் பயிர்கள் வாடுவதைப் பார்த்தால் நிறை மாத கர்ப்பிணி பத்து தினங்களாக ஆகாரத்துக்கு வழியில்லாமல் ஏங்கித் தவிப்பதைப் போல் இருக்கிறது. இந்தப் பக்கத்தில் பல தந்திகள் நீர்ப்பாசன இலாகாவுக்குக் கொடுத்தும் இதுவரை பிரயோஜனமில்லை. சர்க்காரில் உயர்ந்த சம்பளமும், பொது மக்களிடம் அதிகமான லஞ்சமும் வாங்கும் இலாகா நீர்ப்பாசன இலாகாதான். ஆனால் கொஞ்சங்கூட விவசாயிகளின் கஷ்ட நஷ்டங்களையெல்லாம் உணராமல் பொறுப்பற்ற தன்மையில் நடக்கிறது நீர்ப்பாசன இலாகா. பல ஏழை விவசாயிகளின் வயிற்றெரிச்சல் நீர்ப்பாசன இலாகாக்காரர்களைச் சும்மா விடாது. நீர்ப்பாசன இலாகாக்காரர்களின் கவனக் குறைவு சர்க்காருக்குப் பெரும் அவக்கேடாகும்.

சாட்டியகுடி
29—9—53 ஏ. வி. நாராயணஸ்வாமி

நல்லது செய்பவர்களை, நன்றி கூறிப் பாராட்டுவதை விட்டு, நாக்கில் நரம்பின்றித் தாயார் அவதூறு சொல்வதைக் கேட்டுக் கேட்டு அவனுடைய இளம் மனசு புண்பட்டுப் போயிருந்தது. அவன் வேதனையை, இரண்டும் கெட்டான் நிலையைச் சொல்லி முடியாது.

அப்படித்தான் அண்ணியார் மீண்டும் ஒருமுறை வந்திருந்தபோது, இங்கே சொல்வதையும் சொல்லி விட்டு, பக்கத்து வீட்டுப் பங்கஜத்திடம் "கண்ணனை அவர்கள் சரியாகக் கவனிக்கிறதில்லைபோலிருக்கிறது. அவனுக்கு எதுவும் சரியாக வாங்கிச் சாப்பிட்டுக் கொள்ளத் தெரியாது. தனக்கு வேண்டியதைச் செய்து கொள்ளத் தெரியாது. அவன் இங்கிருந்தால், துரும்பாய் இளைத்துப் போய்விடுவான். அவனை அடுத்த வருஷம் ஹாஸ்டலில் சேர்த்துவிட்டுத்தான் மறு வேலை பார்க்க வேண்டும். நான் அப்போதே அவரிடம் சொன்னேன், ஹாஸ்டலில் சேர்த்து விடுங்கள் என்று. அவர்தான் கேட்கவில்லை. தம்பி எல்லாம் பார்த்துக் கொள்வான் என்றார். இங்கே வந்து பார்த்தால், பையனைப் பார்க்கச் சகிக்கவில்லை. நமக்குச் சொந்த மனிதர்கள் இருந்துதான் என்ன பிரயோஜனம்!" என்று குறைப்பட்டுக் கொண்டது ஒன்று விடாமல் மறுநாளே தங்கத்தின் காது வரைக்கும் வந்து எட்டி விட்டது.

இதையும் கேட்டபின் தங்கத்தின் எரிச்சல் தாளவில்லை. கண்ணைக் கசக்கிக் கொண்டே அவள் என்னிடம் வந்தாள்.

"அண்ணியின் குணம் எவ்வளவு மோசமாக இருக்கிறது பார்த்தீர்களா! அக்கம் பக்கத்தில் உள்ளவர்களிடமெல்லாம் நம்மைப் பற்றிக் குறை கூறிக் கொண்டிருக்கிறார். கண்ணனை நாம் எவ்வளவோ அன்புடன் வளர்த்தும் பயன் இல்லாமற் போய்விட்டது!" என்று கூறி வருந்தினாள்.

"தங்கம்! அண்ணி ஏதாவது பேசிவிட்டுப் போகிறார். நீ பேசுகிறது தான் சரியில்லை. அண்ணியின் குணம்தான் இப்படி. அண்ணாவின் குணம் உனக்குத் தெரியாதா, என்ன! அவர்களாகப் பார்த்து, கண்ணனை ஹாஸ்டலில் சேர்க்க வேண்டுமென்று விரும்பினால் சேர்த்துக் கொள்ளட்டும். நாமாகச் சொல்லவேண்டாம். அண்ணியை உத்தேசித்து நாம் எதுவும் செய்ய வேண்டாம். அண்ணனுக்காகவும், கண்ணனுக்காகவும், நம்மால் முடிந்ததை இன்னமும் செய்து வருவோம்" என்று நான் சாந்தமாக எடுத்துச் சொன்னதும் தான் தங்கம் ஆத்திரம் அடங்கி, ஒருவாறு சமாதானம் அடைந்தாள்.

அந்த வருஷம் பரீட்சை முடிந்து, கண்ணன் ஊருக்குக் கிளம்பினான்.

"போய் வருகிறேன் சின்னம்மா! போய் வருகிறேன் சித்தப்பா! அம்மா சொன்னது எதையும் பொருட்படுத்த வேண்டாம்" என்றான் அந்த நல்ல பிள்ளை கண்ணன்.

"அடுத்த வருஷம் நீ எங்களோடு வந்திருக்க மாட்டாய். நீ எங்களோடு இருக்க உன் அம்மா சம்மதிக்க மாட்டார். ஹாஸ்டலில் சேர்ந்து சமர்த்தா யிரு. அடிக்கடி இங்கு வந்து போய்க் கொண்டிரு" என்று சொல்லும்போதே தங்கம் கண்களைத் துடைத்துக் கொண்டாள். செய்வதையும் செய்து, நல்ல பெயர் எடுக்க வில்லையே என்ற ஆற்றாமை அவளுக்கு. கண்ணனைத் தன்னைப் போல் யார் அவ்வளவு அக்கறையுடன் கவனிக்கப் போகிறார்கள் என்ற கவலை வேறு. ஒரு வருஷமாக அவனோடு ஒட்டி உறவாடிய பாசத்தை எளிதில் மறக்க முடியுமா என்ன!

என் உள்ளத்திலும் பலதரப்பட்ட எண்ணங்கள். எனக்கும் ஒரே வேதனைதான். கண்ணன் எங்கிருந்தாலும், நல்லபடியாக, புத்திசாலியாக இருக்க வேணும் என்று ஒரே நினைவுதான்.

"போய் வாடா அப்பா, கண்ணு! எங்களை மறந்து விடாதே!" என்றேன் நான்.

"என்ன சித்தப்பா! நீங்கள் சொல்லுவது? அடுத்த வருஷம் நான் ஹாஸ்டலில் சேரப் போவதில்லை. உங்களோடு வந்து இருக்கத் தான் போகிறேன். இல்லா விட்டால், படிக்கவே வர மாட்டேன். இதைத் தான் பாருங்கள்" என்று கண்ணன் தீர்மானமாகவே சொல்லி, குழந்தைகளை எடுத்துக் கொஞ்சி விட்டு, எங்களிடம் விடை பெற்றுக் கொண்டான்.

இன்னதென்று விவரிக்க இயலாத ஏமாற்றம் நிறைந்த மனத்தோடு, நானும், தங்கமும் அவன் போவதைப் பார்த்துக் கொண்டே நின்றோம்.

* * *

கோடை விடுமுறைக்குப் பிறகு, மீண்டும் கல்லூரி திறந்தார்கள்.

கண்ணன் வந்து சேர்ந்தான். அவன்கூட அண்ணனும், அண்ணியும் வந்திருந்தார்கள்.

தங்கம், கண்ணனை வாஞ்சையோடு அணைத்துக் கொண்டாள். தனயனைப் பிரிந்து மீண்டும் அவனைச் சந்திக்கும் தாயின் மகிழ்ச்சியை, அப்பொழுதுதான் தங்கத்திடம் கண்டேன் நான்.

சிறிது நேரம் வீடு முழுவதும் மௌனம் குடிகொண்டிருந்தது.

"கண்ணன், எல்லாம் சொன்னான், தம்பி! நீ ஒன்றும் வித்தியாசமாக நினைத்து வருத்தப்படாதே. தங்கத்தின் மனசுதான் யாருக்கு வரும்! பத்மா, வெகுளி. எது பேசுவது, எது பேசக் கூடாது என்பது அவளுக்குத் தெரியாது. கண்ணன் பிறந்த நாள் முதல் அவனைப் பிரியாதிருந்த அவள், அவன் பிரிவைச் சகியாத மனோநிலையில், ஏதேதோ வாய்க்கு வந்ததை உளறியிருக்கிறாள். எல்லாவற்றையும் மறந்து விடுங்கள்" என்றார் அண்ணன். நல்லது கெட்டதைச் சீர்தூக்கிப் பார்க்கும் வகையில், அவர் சொன்னதும் நியாயமாகவே எனக்குப் பட்டது.

"இதோ பார், தங்கம், நான் உன் மனசு புண்படும்படி கண்டவிதமாய்ப் பேசி விட்டிருக்கிறேன். உன் நல்ல மனசை புரிந்து கொள்ளாமலே இருந்து விட்டேன். பார்க்கப் போனால், நீ செய்திருக்கிற அளவு நான் கூட என் மகனுக்குச் செய்திருக்க மாட்டேன். பிள்ளை மேல் வைத்த பாசத்தினால் உன் மீது குறைப்பட்டுக் கொண்டேன்; உன் மனம் நோகப் பேசியிருப்பேன். என்னை மன்னித்துவிடு, தங்கம்!" என்று என் அண்ணி பத்மா உருக்கமாகக் கசிந்துருகும் மனத்தோடு மொழிந்தார்.

"அக்கா! எனக்கு உங்கள் மீது வருத்தமில்லை. கண்ணன் என் மகன்! படிப்பு முடிந்து நல்ல புத்திமானாக வெளியேறும் வரையில் அவன் என் பொறுப்பு. இதற்கு அனுமதி யளியுங்கள், போதும். என் தாயுள்ளம் இதைத்தான் விரும்புகிறது" என்றாள் தங்கம் அன்பு நிறைவோடு.

"தங்கம்! இந்தப் பவுன் சங்கிலி உன் மகனுக்கென்று வாங்கி வந்திருக்கிறேன். அவனுக்கு என் பரிசாக இது இருக்கட்டும். செலவுக்கு இந்தப் பணத்தை வைத்துக் கொள்" என்று அண்ணியார் ஒரு ஐந்து பவுன் புத்தம் புதிய சங்கிலியையும், இருநூறு ரூபாய் பணத்தையும் தங்கத்தினிடம் கொடுத்தார். தங்கம் பணிவோடு வாங்கிக் கொண்டாள். அவள் முகமும் மலர்ந்தது.

அன்றலர்ந்த மலர்போல்
புதுமையாகவும் மோகன
காந்தியுடனும் விளங்குங்கள்...




# ஹமாம்

டாய்லட் ஸோப்பு
*உபயோகியுங்கள்*

ஹமாம் புதிய
வாசனை பொருந்தியது...
அதிக நாள் வரவும்
செய்கிறது!



தி டாடா ஆயில் மில்ஸ்
கம்பெனி லிமிடெட்



டாடா தயாரிப்பு

# கால்கேட்
# குளோரோபில் டூத்பவுடர்




## குளோரோபிலின் பூரண நன்மைகளை நீங்கள் உபயோகிக் கையில் தருகிறது!

## வீரிய குளோரோபில்தான் பலன் தரும்!

வீரிய குளோரோபிலின் நன்மைகளை எல்லாம் புதிய கால்கேட் குளோரோபில் டூத் பவுடர் தருகிறது. வீரிய குளோரோபில் தான் வாய் நாற்றம், கிரிமிகளை நீக்கி ஈறுகளைப் பலப்படுத்துகிறது. கால்கேட் முறையில் குழந்தைகளுக்கு குளோரோபில் கவனிப்பை அளியுங்கள்—அரிய சந்தர்ப்பம்.



### வாய் நாற்றத்தை அழிக்கிறது

ஒரு விசேஷ சூத்திரம் காரணமாக கால்கேட் குளோரோபில் டூத்பவுடர் துரிதமாக, திருத்தமாக வேலை செய்கிறது. உங்கள் வாய் அதிகநேரம் புதுமை, இனிமையுடன் இருக்கிறது. அதன் வாசனை ஜோரானது!

### கிருமிகளை ஒழிக்கிறது



சாப்பிட்டவுடன் கால்கேட் குளோரோபில் டூத் பவுடரை உபயோகிப்பதால் பற்களைச் சிதைக்கும் அமிலங்கள் ஒழிகின்றன.



### ஈறுகளை பலப்படுத்துகிறது

ஈறுகளை குளோரோபில் பலப்படுத்துகிறது. தினசரி கால்கேட் குளோரோபில் டூத் பவுடரை உபயோகிப்பதால் குளோரோபிலின் பூரண நன்மைகளைப்பெற்று ஈறுகளைப் பாதுகாக்கலாம்.




CTPG/I

# தாயின் நினைவு

ஞானம்

மாதர் சங்கம் நடத்தும் அனாதை ஆச்ரமத்தில் தலைவியாக என்னை ஏக மனதாகத் தேர்ந்தெடுத்தனர். அனைவரும் பாராட்டினார்கள். மாஜித் தலைவி ராதையம்மாள், வேலை முறைகளை யெல்லாம் கூறித் தைரியமும், புத்திமதியும் சொன்னார். ஊருக்குப் போகும் போது கூட அவர் ஆச்ரமக் கவலையை மறக்கவில்லை. "ஞானம்! நம் ஊருக்குப் புது கலெக்டர் வந்திருக்கிறாரே ஸ்ரீமான் ஸ்ரீதரன், நம் அனாதாச்ரமத்துக்கு ஏதாவது உதவி புரியும்படி அவரை அணுகலாம் என்று என் எண்ணம். போன வாரம் அவர் என்னைச் சந்திப்பதாகச் சொல்லியிருந்தார். போயிருந்தேன். ஆனால் அவசர வேலை நிமித்தமாக அவருக்கு நிற்க நேரமில்லை. நாளை ஞாயிற்றுக் கிழமை காலை பத்து மணிக்கு வந்தால் சாவகாசமாகப் பேசலாம் என்று உறுதியாகக் கூறினார். அவர் வீட்டில் ஒரு தையல் மிஷினைப் பார்த்தேன். அவர் வீட்டில் யாரும் பெண்கள் இல்லாததால் மிஷின் உபயோகம் இல்லாமல் சும்மா இருக்கிறது என்றுதான் நினைக்கிறேன். நீ எப்படியாவது அந்த மிஷினை நம் ஆச்ரமத்துக்கு வாங்கிவிடப் பார்" என்றார்.

"ஆகட்டும்" என்று தலையசைத்தேன்.

ஞாயிற்றுக் கிழமை காலை சரியாகப் பத்து மணிக்கு நான் கலெக்டர் வீட்டு வாசலில் போய் நின்றேன். பெரிய பங்களாவில் இருப்பார் என்று நான் நினைத்ததற்கு மாறாக அழகிய சிறு வீட்டில் குடியிருந்தார். அவர் சேவகன், "யார் அம்மா! நீங்கள் தான் மாதர் சங்க அனாதை ஆச்ரமத்தின் தலைவியா?" என்று கேட்டான்.

"ஆமாம். கலெக்டரைப் பார்க்க வந்திருக்கிறேன்..."

"உங்களை எதிர்பார்த்து உட்கார்ந்திருக்கிறார். உள்ளே போங்கம்மா" என்று வழி காட்டினான் சேவகன்.

கடகட என்று தையல் மிஷினில் தைக்கும் சத்தம் கேட்டது. தைப்பது யாராக இருக்கும் என்று எனக்கு வியப்பாக இருந்தது. உள்ளே நுழைந்ததும், தையல் மிஷினிலிருந்து எழுந்து கொண்டே, "வாருங்கள்! நமஸ்காரம்" என்று கை கூப்பினார் ஒரு வாலிபர். அவர்தான் ஸ்ரீதரன்; நான் பதில் வணக்கம் செலுத்தினேன். ராதையம்மாளுக்குப் பதில் புதிய நபரைப் பார்த்ததால் உண்டான சிறிது வியப்புடன், "நீங்கள் ...?" என்று பேசுவதற்கு ஆரம்பித்தார்.

"நான் அனாதாச்ரமத்தின் புதிய தலைவி, என் பெயர் ஞானம். ஸ்ரீமதி ராதையம்மாள் கடிதம் தந்திருக்கிறார்" என்று அறிமுகக் கடிதத்தை நீட்டினேன். வாங்கிப் படித்து விட்டு, "ரொம்ப சந்தோஷம்" என்றார்.

பேச்சை எப்படி ஆரம்பிப்பது என்று தெரியாமல் அறையைச் சுற்றிப் பார்வையை ஓட்டினேன். சுவரில் பெரிய படம் ஒன்று மாட்டியிருந்தது. நடுத்தர வயதுள்ள ஒரு அம்மணி மடிசார் வைத்துப் புடவை கட்டிக் கொண்டு, தலைப்பால் முதுகைப் போர்த்திக் கொண்டு வெகு அடக்கமாக நின்றிருந்தாள். அந்த அம்மாளின் தோளோடு தோள் இடித்தாற் போல் ஒரு கிறிஸ்துவப் பாதிரி நின்று கொண்டிருந்தார். இத்தனை அடக்கமான பெண்மணி ஒரு அன்னியருடன் இவ்விதம் போட்டோவுக்கு நிற்க எப்படிச் சம்மதித்தாள் என்று வியப்பாகக் கூட இருந்தது. படத்தைச் சுற்றி அலங்கரித்த மஞ்சள் கொம்பு மாலை எனக்கு விசித்திரமாகப் பட்டது. ஒரு கலெக்டர் விரும்பினால் மல்லிகை, ரோஜா என்று நல்ல மாலைகளா வாங்க முடியாது?

"உங்களுக்கு ஆட்சேபனை இல்லாவிட்டால் தைத்துக் கொண்டே பேசலாம் அல்லவா?" என்றார் அவர்.

"ஆஹா!" என்றேன். அவர் 'ஷர்ட்' தைத்துக் கொண்டிருந்தார்.

"இதுநாள் வரை மாதர் சங்கங்களைப் பற்றி எனக்கு ஒன்றுமே தெரியாது. படித்து விட்டு வீட்டில் பொழுது போகாமல் திண்டாடும் பெண்கள் உல்லாசமாகக் காலம் கழிக்க ஏற்பட்டவையே மாதர் சங்கங்கள் என்று எண்ணியிருந்தேன். அறியாமைதான் காரணம். உங்கள் சங்கம் உண்மையிலேயே பெரிய சேவை செய்கிறது என்று கேட்க எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது. உற்சாகமும், ஊக்கமும் உள்ள உங்கள் தலைமையின் கீழ் அனாதாச்ரமம் இன்னும் சிறப்பாக நடக்கும் என்று நம்புகிறேன்" என்றார்.

"உங்கள் நம்பிக்கை வெற்றி பெற என்னால் முடிந்தவரை உழைப்பேன். எங்கள் அனாதாச்ரமத்துக்கு நீங்கள் ஏதாவது உதவி செய்ய வேண்டும்" என்று கேட்டேன்.

"உதவி என்றால் என்ன விதத்தில்?..." என்று இழுத்தார்.

என் மனம் சஞ்சலப் பட்டது. ராதையம்மாள் நினைத்தபடி 'மிஷின்' உபயோகமில்லாதிருந்தால் கேட்பது நியாயம். இவரானால் சொந்த உபயோகத்துக்காக வைத்திருக்கிறார். கேட்பது உசிதமா என்று என் மனம் குழம்பியது.

"அனாதாச்ரமத்துக்கு எந்த உதவி செய்தாலும் ஏற்றுக் கொள்ளுவோம். ஸ்ரீ ராதையம்மாள் உங்கள் வீட்டில் தையல் யந்திரம் உபயோகம் இல்லாமல் இருப்பதாக எண்ணி, அதைக் கேட்கச் சொன்னார். ஆனால் நீங்கள் சொந்த உபயோகத்துக்காக வைத்திருப்பதைக் கேட்டால் தருவீர்களோ என்று..."

"எதை? இந்த மிஷினையா?" என்று திடுக்கிட்ட அவர் வாஞ்சையுடன் அதைத் துடைத்துக் கொண்டே, "படிப்பைத் தவிர என் தாயார் எனக்கு வைத்துப் போன சொத்து இது ஒன்றுதான்" என்று கூறி

விட்டுச் சுவரில் மாட்டியிருந்த படத்தை ஒரு முறை நிமிர்ந்து பார்த்தார்.

இதுதான் சமயமென்று நான் ஆவலுடன், "இந்த அம்மாள்தான் தங்கள் தாயாரா? கூட இருப்பவர்......?" கேட்டேன்.

"ஆமாம். என் அம்மாவின் பக்கத்தில் இருப்பவர் பாதர் ஜோசப். இருவரும் என் கண் கண்ட தெய்வங்கள்" என்றார். அப்பொழுது அவர் குரல் கரகரத்தது.

"சொந்த விஷயங்களைக் கேட்டு, உங்கள் உணர்ச்சியைக் கிளறி விட்டதற்கு மன்னித்து விடுங்கள். இன்று இவர்களில் யாரும் உயிருடன் இல்லையா?" என்றேன்.

"இல்லை, ஒரே நாளில் தாய்? தந்தை இருவரையும் பறி கொடுத்த துர்ப்பாக்கிய சாலி நான். எனக்காகச் சொல்ல முடியாத பாடுபட்ட இவர்கள், என் நல் வாழ்வைக் காணாமலே நாலு வருஷங்களுக்கு முன் காலமாகி விட்டனர்" என்றார்.

என் மனதில் சந்தேகம் குறு குறுத்தது. தாய், தந்தை என்றது எந்த முறையில்? பெற்ற தகப்பன் என்ற முறையிலா? அல்லது

கழிந்தது. அந்தச் சூழ் நிலையில்தான் நான் பிறந்தது. இத்தனை சங்கடத்திலும் பெண் குழந்தையாகப் பிறக்காமல் நான் ஆணாகப் பிறந்ததில் தாயாருக்கு ஒரு திருப்தி. சாகும் வரை அதைப் பற்றிச் சொல்லிச் சொல்லிச் சந்தோஷப் படுவாள்.

நான் மூன்று மாதக் குழந்தை. அப்பொழுதுதான் அம்மா ஒரு துணிச்சலான காரியம் செய்தாள். தோடு, மூக்குத்தி, திருமங்கல்யம் — எல்லாம் விற்றுப் பட்டணம் போகிற ஒருவரிடம் கொடுத்துத் தையல் மிஷின் ஒன்று வாங்கி வரச் சொன்னாள்.

தட்டித் தடுமாறி எப்படியோ யந்திரத்தில் தைக்கப் பழகிக் கொண்டாள். தன் சினேகிதிகளைத் தன்னிடமே தைக்கத் தரும்படி கேட்டுக் கொண்டாள். கூலிக்குத் தைக்கிறாள் என்று கிராமத்தார் செய்த இளப்பம் கொஞ்ச நஞ்சமில்லை. தூரத்து உறவில் என் அம்மாவுக்கு அண்ணன் முறையாகும் ஒரு பணக்காரர், 'கூலிக்குத் தைத்துக் குல கௌரவத்தையே கெடுத்து விட்டதாக'



சரியாக இருக்கும். அம்மா அதிகமாக வெளியே போக மாட்டாள். நான்தான் வாடிக்கைக்காரர்கள் வீட்டுக்குச் சென்று கூலி வசூல் செய்வது. தைத்த துணிகளைக் கொண்டு போய்க் கொடுப்பது முதலிய எல்லாக் காரியங்களும் செய்து வந்தேன்.

மிஷினிலே தைக்க எனக்கு வெகு ஆசை. யந்திரத்தின் மிதி காலுக்கு எட்டியதும் தைக்கக் கற்றுக் கொள்ளத் துடித்தேன். பெரியவர்கள் சுபாவப்படி, 'உனக்குத் தெரியாது. மிஷினைக் கெடுத்துக் குட்டிச் சுவராக்கி விடுவாய்' என்றெல்லாம்கூறாமல் அம்மா பொறுமையாகக் கற்றுத் தருவாள். ஹைஸ்கூல் படிப்பு முடியும் முன்பே நான் தையல் வேலையில் சேர்ந்து விட்டேன். நகரில் எந்தத் தையல் காரனையும் விட அழகாகவும், சரியாகவும் கோட்டு, சூட்டு எல்லாமே நான் தைக்கக் கற்றுக் கொண்டு விட்டேன்.' இப்படி எங்களுக்குச் சோறு, துணிக்குக் கவலையின்றி காலம் கழிந்தாலும் ஒன்றும் மிச்சம் பிடிக்க முடிய வில்லை. ஹைஸ்கூல் படிப்பு முடிந்ததும் காலேஜில் சேரப் பண மில்லை. இன்னொரு மிஷின் வாங்கி நானும் தைக்கலாம் என்று கூறினேன்.

அம்மாவுக்குப் பிடித்தமில்லை. "ஸ்ரீதரா! உன் அப்பாவுக்கே தான் காலேஜில் படிக்க முடியவில்லையே என்று வெகு குறை. அடிக்கடி தன் துரதிர்ஷ்டத்தை நொந்து கொள்வார். நீயாவது படித்தால்தான் எனக்குத் திருப்தி. யாராவது உதவி செய்வார்களா என்று பார். அரைச் சம்பளம் கட்டும் சலுகை இருந்தாலும் போதும். எப்படியாவது சமாளித்து விடலாம்" என்றாள்.

பாதிரிகள் கல்லூரியில் சேர முடியுமா என்று அலைந்தேன். கட்டிடத்துக்குள் நுழைந்ததுமே ஒரு பாதிரி தென்பட்டார். அவரைக் கண்டதுமே மரியாதை, முறை எதுவுமில்லாமல், "சார்! எனக்குக் காலேஜில் சேர ரொம்ப ஆசை. ஆனால் பண வசதிதான் இல்லை. நல்ல மார்க்குகள் வாங்கியிருக்கிறேன். ஸ்காலர்ஷிப்போ, அரைச் சம்பளமோ கொடுத்து என்னைச் சேர்த்துக் கொள்ளுங்கள், ஸார்! நன்றாகப் படிக்கிறேன்" என்றேன் ஆர்வத்துடன்.

என்னைச் சமாதானப் படுத்தித் தம் அறைக்கு அழைத்துச் சென்றார் 'பாதர்' ஜோசப். என்னைப் பற்றிய விவரங்கள் அனைத்தும் அறிந்து கொண்ட அவர், பிரின்ஸிபாலிடம் கூறி எனக்கு உதவிச் சம்பளத்துக்கு ஏற்பாடு செய்தார். வேண்டிய புஸ்தகங்கள் அனைத்தையும் வாங்கித் தாமே தந்தார்.

எனக்கு அவரிடம் தனி அன்பு ஏற்பட்டு விட்டது. அது நன்றி உணர்ச்சி காரணமாக இருக்கலாம். பாதர் ஜோசப் கபடமற்ற அன்பு காட்டுவதை எண்ணி மகிழ்ந்தேன். ஒழிந்த நேரங்களில் 'பாதர்' ஜோசப் எனக்குத் தனியாகவும் பாடம் போதிப்பார்.

அவர்கள் அன்பும், நம்பிக்கையும் வீணாக வில்லை. நான் மாகாணத்திலேயே முதலாக 'பி. ஏ. ஹானர்ஸ்' பரீட்சையில் பாஸ் செய்தேன். தையல் பரீட்சைகளிலும் தேறினேன். பாதர் ஜோசப்பின் தூண்டுதலால் கலெக்டர் பரீட்சையும் எழுதினேன். அதில் தேர்வும் பெற்றேன்..."

ஸ்ரீதரன் பெருமூச்சு விட்டுச் சிறிது மௌனமாக இருந்தார். பின் ஆரம்பித்தார்:

"அன்று வேலைக்கு உத்தரவு வந்தது. 'பாதர்' ஜோசப் அடைந்த ஆனந்தத்துக்கு எல்லை இல்லை. கட்டிக் கொண்டு கண்ணீர் உகுத்தார். 'ஸ்ரீதரா! புத்திசாலியான உன்னைப் பெற்ற உன் தாயை நேரில் பாராட்ட ஆசைப் படுகிறேன். நான் உன் வீட்டுக்கு வருகிறேன்' என்றார்.

அவர் என் வீட்டுக்கு வருவது எனக்குப் பெருமையாக இருந்தது.

என் தாயாருக்கு அவள் பட்டபாடு பலன் அளித்தது என்ற ஆனந்தமும், நன்றி நிறைந்த உள்ளத்தின் உணர்ச்சிப் பெருக்கும் கண்ணீராக வழிந்தது.

பேசிக் கொண்டே அம்மா பரிமாறினாள். பாதர் ஜோசப் வருவது பற்றியும் சந்தோஷப்

பட்டாள். நான், 'அம்மா! முதல் மாச சம்பளத்தில் உனக்கு இரண்டு பட்டுப் புடவைகளும், ஒரு ஜோடி வளையலும் வாங்கப் போகிறேன்' என்றேன்.

'போடா அசடு! எனக்கு எதற்குப் பட்டும் ரெட்டும். கிழவியான பின் நகை போட்டுக் கொள்வேனா? உனக்குக் கல்யாணமாகிப் பெண்டாட்டி வந்தால் பட்டும் பூஷணமும் அவளுக்கு வாங்கலாம்' என்று சொல்லிக் கொண்டே அம்மா பேச்சை மாற்றினாள்.

அம்மாவின் மாங்கலியச் சரடு புடவைக்கு வெளியே தொங்கி ஊசலாடிற்று. அந்த மஞ்சள் சரட்டில், தகதக என மின்னும் தங்கத்திரு மாங்கலியத்துக்குப் பதில் மஞ்சள் கிழங்கு தான் முடியப் பட்டிருந்தது.

விவரிக்க முடியாத உணர்ச்சியுடன் என் மனத்தில் ஒரு தீர்மானம் உருவாயிற்று. 'அம்மா! அதெல்லாம் வேண்டாமென்றால் போகட்டும். முதலில் உனக்குத் திருமாங்கல்யம் செய்து தந்து விடுகிறேன். எத்தனை நாள் மஞ்சள் கிழங்கைக் கட்டிக் கொண்டிருப்பாய்?' என்றேன்.

அம்மா கண்களில் நீர் ததும்ப, 'அம்பி! என் உயிர் உள்ளவரை இந்த மஞ்சள் கிழங்கு சாசுவதமாக என் கழுத்தை விட்டு நீங்காதிருந்தால் போதும். அவர், உன் அப்பா, உலகில் ஏதோ ஒரு மூலையில் இருக்கிறார் என்ற நம்பிக்கைக்குப் பாதகமான செய்தி வராமலிருந்தாலே ஆயிரம் ஆயிரம் பவுன் நகை பூட்டிக் கொண்டமாதிரி' என்றாள். நான் மௌனமாகி விட்டேன். ஆனாலும் என் தீர்மானம் மாறவில்லை; வலுவடைந்தது.

அம்மா பசும் பால் வாங்கிக் காய்ச்சி வைத்தாள். பழம் வாங்கி வைத்து விட்டு, பாதர் ஜோசப்பை அழைத்து வரச் சென்றேன்.

அம்மா இயல்பாகவே அயல் புருஷர்கள் எதிரில் கூட நிற்கமாட்டாள்; பேசமாட்டாள். பாதர் ஜோசப்பிடம் இருந்த அளவற்ற நன்றியால் கதவோரமாக நின்று, 'வாருங்கள்' என்று வரவேற்றாள்.

பாதர் ஜோசப் நின்ற நிலையிலேயே, "ஸ்ரீதரனைப் பெற நீ...நீங்கள் மிகப் புண்ணியம் செய்திருக்க வேண்டும். நல்ல பையன்" என்றார் தயங்கித் தயங்கி.

அம்மா ஒரு கணம் திக்பிரமையுடன் விழித்தாள். சற்றே வெளியே வந்து 'பாதரை' உற்றுப் பார்த்தாள். 'நீங்களா? இத்தனை நாள் கழித்தாவது உங்களைப் பார்த்தேனே!' என்று அலறியபடி ஓடி வந்து பாதரின் கால்களைப் பிடித்துக் கொண்டாள்.

பாதர் ஜோசப் கண்களைத் துடைத்தபடி, 'ஆமாம், கடமையை மறந்து ஓடின கயவன் தான் நான்' என்றார்.

எதுவும் விவரமாகப் புரியாமல் நான் அவர் முகத்தை நோக்கினேன். 'ஆமாம் ஸ்ரீதர்! நான் தான் உன் தந்தை. இந்த உத்தமியின், தைரியசாலியின் கணவன். கடமைக்குப் பயந்து, கர்ப்பிணி என்றும் பாராமல் கட்டிய மனைவியையும், குருட்டுத் தாயையும், அனுதைக் குழந்தைகளையும் விட்டு விட்டு ஓடியவன். மணமானவன் என்பதை மறைத்து, கிறிஸ்தவப் பாதிரியாகி விரும்பிய கல்வியைக் கற்றேன். உன்னை முதல் நாள் பார்த்ததுமே உன் முக ஜாடை என் உள்ளத்தை உலுக்கிற்று. ரத்த பாசம் சாமான்யமானதல்லவே? உன் வரலாற்றைக் கேட்டதும் நீ என் பிள்ளை என்று சந்தேகமில்லாமல் தெரிந்து கொண்டேன். அது தெரிந்தே உனக்கு உதவிகள் செய்தேன். ஸ்ரீதரா! உத்தமியான உன் தாயாரைப் பாராட்டவும் எனக்குத் தகுதி இல்லை. நல்ல பிள்ளையைப் பெற்ற அவள் பாக்கியசாலி. அவள் துன்பங்கள் முடிவடைந்து விட்டன. இத்தனை நாளைக்குப் பின் எங்களுக்கு எதற்குச் சம்சார பந்தம்? உன் அம்மாவை எழுந்திருக்கச் சொல்' என்றார் ஜோசப்.

'அம்மா! அப்பா எழுந்திருக்கச் சொல்லுகிறார்' என்று அம்மாவை எழுப்பினேன்.

அம்மா மூர்ச்சித்துக் கிடந்தாள். எடுத்துப் படுக்க விட்டேன். அப்பா 'ஸ்ரீதரா! நல்ல டாக்டரை அழைத்து வந்து, பார்' என்று கூறி, சரேலென்று வெளியே போய்விட்டார்.

'பாதர்! பாதர்!!' என்று கத்திய வண்ணம் ஓடினேன். அவர் போய் விட்டார்.

அம்மா இரண்டு நாட்கள் நினைவு வராமல் படுத்திருந்தாள். மூன்றாம் நாள் விடியற்காலை நாலு மணிக்கு அவள் உயிர் பறந்து விட்டது. அழுதேன்; அரற்றினேன்; வேறு என்ன செய்ய முடியும்?

'சார் தந்தி' என்ற சத்தம் கேட்டது. அப்போது என் உடல் நடுங்கிற்று. "பாதர் ஜோசப் மாரடைப்பால் காலை ஐந்து மணிக்குப் பரலோகம் அடைந்தார்" என்று கோடைக் கானலிலிருந்து வேறு ஒரு பாதிரி தந்தி அடித்திருந்தார். என் துக்கத்தை விவரிக்க இன்று எனக்குச் சக்தி இல்லை.

இன்று எனக்கு ஒரே ஆறுதல், அம்மா, அப்பாவுக்கு ஒரு மணி நேரம் முந்திக் கொண்டு அவள் ஆசைப்படியே மஞ்சள் குங்குமத்துடன் போனாள் என்பதுதான். அம்மா சாசுவதமாக விரும்பிய அந்த மஞ்சள் கிழங்கையே என் தாயாரின் படத்துக்கு மாலையாகப் போட்டிருக்கிறேன். அது மற்றவர்களுக்கு வேடிக்கையாகவும், பைத்தியக்காரத்தனமாகவும் கூட இருக்கலாம். ஆனால் அதை நான் லட்சியம் செய்யவில்லை..."

★

இவ்வாறு கூறி முடித்தார் ஸ்ரீதரன்.

"உங்கள் வாழ்க்கையில் முக்கிய அங்கமான தையல் மிஷினை நான் கேட்டது தவறுதான். மன்னிக்க வேண்டும்" என்றேன்.

"இந்தத் தையல் மிஷினுக்குப் பதில் புதிதாக ஒன்று வாங்கித் தருகிறேன்" என்றார் ஸ்ரீதரன் நிதானமாக.

அவருக்கு நன்றி தெரிவிக்க வார்த்தைகள் கிடைக்காமல் திணறினேன்.



# சிக்கனத்திற்கும் பந்தோபஸ்துக்கும்

சூப்பர் இந்தியா டயர்களினுல் உள்ள இரட்டிப்பு ஆதாயம்




**கார்களுக்கு**

சுகமான சவாரி
மற்றும்
பந்தோபஸ்து

**லாரிகளுக்கும் பஸ்களுக்கும்**

உறுதியான உழைப்பு
மற்றும்
சிக்கனம்

"டயர்களில்
மிகச் சிறந்தவை"

# சூப்பர் இந்தியா

IT. [illegible]






## 14. குடம் நழுவியது!

பிரபாவதி துணிகரமான காரியம் செய்து விட்டாள். மந்திரவாதியை விட்டுத் தனியே எங்கேயோ போய் விட்டாள். மந்திரவாதி எவ்வளவு தேடிப் பார்த்தும் பிரபா தென்படவில்லை என்ற விஷயங்கள் எல்லாம் நமக்கு ஏற்கெனவே தெரியும்.

மந்திரவாதியை விட்டுப் பிரிந்து சென்ற பிரபா எங்கே சென்ருள்? யாரிடம் புகல் அடைந்தாள்? அல்லது வேறு யாராகிலும் அவளை எங்கேயாவது அழைத்துக் கொண்டு போனார்களா?

அதெல்லாமில்லை. அப்படியெல்லாம் ஒன்றும் நேர்ந்து விடவில்லை! மந்திரவாதி இனி தன் மந்திர சக்தியைப் பிரயோகித்துத் தன்னைக் கட்டுப் படுத்தி வைக்க முடியாது என்றவுடன் அவளுக்குச் சிறிது துணிச்சல் ஏற்பட்டது.

இரண்டு நாள் கழித்து அவள் மந்திரவாதியின் வீட்டை விட்டு வெளியேறிய போது, அவளைக் காட்டு மரங்களும், செடிகளும், புஷ்பங்களும் என்றுமில்லாதபடி ஆடி அசைந்தும் பூத்துக் குலுங்கியும் வரவேற்றன. இன்றைய வரவேற்பில் பிரபா இதுகாறும் அடைந்திராததோர் ஆனந்தத்தைக் கண்டாள்.

அன்று வீசிய தென்றல் காற்றில் புதியதோர் உல்லாசம் இருந்தது.

இவற்றையெல்லாம் அனுபவித்துக் கொண்டே பிரபா, நடந்தாள், நடந்தாள், நடந்து கொண்டேயிருந்தாள்!

முன்பெல்லாம் காட்டில் ஒரு எல்லை வரைக்கும் தான் அவள் நடக்க முடியும்! அதற்குமேல் அவள் ஒரு அடி எடுத்து வைத்தாலும் பூமியில் ஓர் அகழ், ஒரு பிளவு ஏற்பட்டு விடும்! இன்று அப்படியெல்லாம் ஒன்றும் நேர்ந்து விடவில்லை. அவள் இப்படி ஏன் இன்று நிகழவில்லை என்று ஒரு கணம் யோசித்தாள். உடனே, இதற்குக் காரணம் மந்திரவாதி தன் மந்திர மோதிரத்தை இழந்து விட்டதுதான் என்பது நினைவுக்கு வந்தது. இப்பொழுது அவளுக்குச் சொல்ல முடியாத துக்கம் ஏற்பட்டது. தன் தாத்தா எல்லா மந்திர சக்தியையும் இழந்து விட்டுச் சாதாரண மனிதராகி விட்டாரே என்று தான் அவள் வருத்தமுற்ருள்.

அடுத்த சில நிமிஷங்களில் அவளுக்கு இன்னொரு எண்ணமும் உதித்தது.

"இந்தத் தியாகம், நந்தகுமாரன் வந்திருந்த போது, அவனுடன் காட்டை விட்டுச் செல்ல முயன்றபோது மந்திரவாதி செய்திருக்கக் கூடாதா? அவனுடன் எவ்வளவு சந்தோஷமாக நான் போயிருப்பேன். அப்பொழுது, பூமியைப் பிளந்து என்னை மேலே போக விடாமற் செய்தாரல்லவா, தாத்தா! சே, என்ன மனுஷர் இவர்! என்னை எவ்வளவு வயிற்றெரிச்சல் கொட்டிக் கொண்டார்! எனக்கு நந்தகுமாரனுடன் செல்ல முடியவில்லை என்ற போது எவ்வளவு வருத்தம் ஏற்பட்டது! அதற்குத் தண்டனையாக, நான் இப்பொழுது சொல்லிக் கொள்ளாமல் இந்தக் காட்டை விட்டே போய் விடுகிறேன். 'பிரபா எங்கேயோ போய் விட்டாளே!'

என்று ஏங்கித் தேடி அலையட்டும்!" என்று மனத்தில் தீராத ஆத்திரங் கொண்டாள்!

இப்படிப் பலவிதயோசனைகளில் மூழ்கி அவள் காட்டைக் கடந்து நாட்டையே அடைந்து விட்டாள்!

*  *  *

பச்சைக் கிளியின் உருவெடுத்த நந்த குமாரன் காட்டில் எங்கெல்லாமோ தேடினான்! ஒருவாரம் காட்டில் பறந்து பறந்து தேடினான். மலைக் குகைக்குள்ளும், மரப் பொந்துகளுக்குள்ளும் புகுந்து தேடினான். கிளியின் உருவத்திலிருந்து ஈயின் உருவம் வரை எத்தனை உருவங்கள் உண்டோ அத்தனையும் தன் மந்திர சக்தியின் பயனாக எடுத்துப் பார்த்து விட்டான். பிரபா அகப்படவே இல்லை! உள்ளம் சோர்ந்து மறுபடியும் கிளியின் உருவத்தில் சிறைக் கூடத்துக்குத் திரும்பினான்.

சிறைக் கூடத்தில் மந்திரவாதியைக் காணவில்லை! நந்தகுமாரனுக்கு ஒரே ஆச்சரியமாகப் போய் விட்டது! "மந்திர வாதி எங்கே?" என்று நந்தகுமாரன் சங்கீத வித்வானைக் கேட்டான்.

"அதைச் சொல்லுகிறேன்! அதற்கு முன் நீ போன காரியம் என்ன ஆயிற்று?" என்று கேட்டார் அவர்.

"பிரபாவை நான் தேடாத இடங் கிடையாது! காற்றுப் புகாத இடத்திலும் கூடப் புகுந்து தேடி விட்டேன். பிரபா அகப்படவில்லை. அவள் எங்கே போனாளோ, என்ன செய்கிறாளோ! இவ்வளவு மந்திர வித்தை கற்றும் பயனில்லாமலிருக்கிறது" என்று ஏங்கினான் நந்தகுமாரன்.

"நந்த குமாரா! 'முயற்சி யுடையார் இகழ்ச்சி யடையார்' என்று சொல்லப் பட்டிருக்கிறது. இன்னும் நீ முயன்று பார்! அவள் கட்டாயம் அகப்படுவாள். நீ காட்டில்தானே இத்தனை நாளும் தேடி விட்டு வந்திருக்கிறாய்? இனி பல நாடுகளுக்குச் சென்று தேடிப்பார்! சீதையை இராவணன் அபகரித்துப் போன பல மாதங்கள் கழித்துத்தான் சீதை இருக்குமிடத்தை ராமன் தெரிந்து கொள்ள முடிந்தது! அதனால் நீ சோர்வடையலாகாது. முயற்சி செய்!" என்று கூறினார்.

"சரி, மற்றொரு முறை ஒவ்வொரு தேசமாய்ப் போய்ப் பார்க்கிறேன்!" என்று கூறிப் பறக்க இருந்தான் கிளி யுருவத்திலிருந்த நந்தகுமாரன்.

அந்தச் சமயம், "நந்த குமாரா! நந்தகுமாரா! என் வீட்டுக்குப் போய் என் மனைவி சௌக்கியமாக இருக்கிறாளா என்று பார்த்து விட்டு வந்து சொல்லேன்! என்னைப் பற்றிக் கவலைப் படுவாள். நான் இந்தச் சிறையில் சௌக்கியமாக இருக்கிறேன் என்று அவளுக்குத் தெரிவித்து விடு!" என்றார் சங்கீத வித்வான்.

"அப்படியே ஆகட்டும்" என்று சொல்லி விட்டுப் பறந்தான் நந்தகுமாரன்!

நேரே, சங்கீத வித்வான் வீட்டுக்குச் சென்றான். அவர் மனைவி, இயந்திரத்தில் ஏதோ அரைத்துக் கொண்டிருந்தாள்.

"அம்மா, நமஸ்காரம்" என்றான்.

குருவின் மனைவி திடுக்கிட்டுச் சுற்று முற்றும் பார்த்தாள். ஆள் உருவமின்றி மனிதக் குரல் மட்டும் கேட்டால் அந்த அம்மாள் பயப்படுவது இயல்புதானே?

"நான்தான் அம்மா, குருவின் சிஷ்யன் நந்தகுமாரன்! கிளி வடிவத்தில் வந்திருக்கிறேன்" என்றான்.

அந்த அம்மாள் தலை நிமிர்ந்துப் பார்த்தாள். கிளி யுருவத்தில் நந்தகுமாரனைப் பார்த்ததும், "நந்தகுமாரனா நீ?" என்று ஆச்சரியத்தோடு கேட்டாள்.

அந்தச் சமயத்தில் இடுப்பில் தண்ணீர்க் குடத்துடன் வேலைக்காரப் பெண் வந்தாள்!

'நந்தகுமாரன்' என்ற வார்த்தை அவள் காதில் விழுந்ததும் 'ஆ! என்ன?' என்று அவளும் வியந்து தான் குடத்தைப் பற்றியிருந்த கையைத் தளர்த்தினாள்! குடம் தண்ணீருடன் தடால் என்று பெருத்த சத்தத்துடன் கீழே விழுந்தது!

அந்தச் சத்தத்தைக் கேட்டுத் திடுக்கிட்ட கிளி பறந்து விட்டது! கிளியின் உருவம் எடுத்தால், கிளியின் சுபாவமும் இருக்கத் தானே செய்யும்!

கிளி பறந்து விட்டதைக் கண்டு சங்கீத வித்வானுடைய மனைவி பொல்லாத கோபமடைந்தாள்.

"உன்னாலே தானேடி என் நந்தகுமாரன் பறந்து போய் விட்டான்! சமயம் பார்த்து வந்து தொலைந்தாயே, பாவி!" என்று அவளை நையப் புடைத்தாள்.

அவ்வளவு அடி வாங்கியதற்கு வேறு எந்தப் பெண்ணாக இருந்தாலும், வலி தாங்கமாட்டாமல் அழுதிருப்பாள். நந்த குமாரன் காரணமாகத் தனக்கு அடி விழுகிறது என்பதில் அவள் வருந்தப் படுவதற்குப் பதில் சந்தோஷமே அடைந்தாள். அவள் கண்களிலிருந்து ஒரு பொட்டுக் கண்ணீர்கூட வரவில்லை.

இதைக் கண்டு ஆச்சரியமும் வெறுப்பும் அடைந்த சங்கீத வித்வானுடைய மனைவி "உன் தோல் என்ன, எருமை மாட்டுத் தோலா? இத்தனை அடி அடித்திருக்கிறேன். கொஞ்சமாகிலும் உரைத்தாற் போல் தெரியவில்லையே! சூடு, சுரணையே கிடையாதோ?" என்று கேட்டாள்.

அந்தப் பெண்ணுக்குச் சிரிப்பு வந்தது. அதை அடக்கிக் கொண்டாள். பிறகு குருவின் மனைவி தன் வேலையைக் கவனிக்கப் போய் விட்டாள்.

நேரம் ஆக ஆக அந்தப் பெண்ணின் முகத்தில் துயரக் குறி தோன்றியது! அப்பொழுது எங்கிருந்தோ குழலோசை கேட்டது! அந்தப் பெண்ணின் முகத்தில் தோன்றத் தொடங்கி யிருந்த துயரம் கணத்தில் மறைந்தது; முகத்தில் மலர்ச்சி பொங்கித் ததும்பியது! (தொடரும்)

# வயிற்றுக்கோளாறு தினம் உங்கள் சந்தோஷத்தைக் கெடுக்க விடாதீர்கள்!



உங்களுக்கு அஜீர்ணமோ, நெஞ்செரிச்சலோ அல்லது பித்தமயக்கமோ ஏதாவது ஏற்பட்டால், ஒரு கிளாஸ் ஈனோஸ் 'ப்ரூட் ஸால்ட்' சாப்பிடுங்கள்— கட்டாயம் நிவர்த்தி பெறுவீர்கள். ஈனோஸ் புளிப்பை அகற்றும் குணமுள்ளதாகையால் அது வயிற்றிலுள்ள 'கன உணர்ச்சியை' சீக்கிரம் நீக்கி, நீங்கள் சந்துஷ்டியும் சுறுசுறுப்பும் பெற உதவுகிறது. ஈனோஸ் பித்தப்பை மந்தத்தைத் தடுத்து, மலக்கழிவை ஒழுங்குபடுத்துகிறது. ஈனோஸ் மூலம் சந்தோஷமாக வாழுங்கள்

## ஈனோஸ்
## 'ப்ரூட் ஸால்ட்'

உங்களை தென்பாகவும் சுறுசுறுப்பாகவும் வைத்திருக்கிறது




புதுமை கெடாமலிருக்க புட்டிகளில விற்கப்படுகிறது.

'ஈனோ' மற்றும் 'ப்ரூட் ஸால்ட்' என்ற பதங்கள் ரிஜிஸ்டர் செய்யப்பட்ட டிரேட் மார்க்குகள்

ENO. 8163

# கெட்டி மேளம்

நா. ராமச்சந்திரன்

“டும் டும் டடும் டடும்” என்று கெட்டி மேளம் முழங்கியபோது பூங்கொடியின் கண்களில் கலகல வென்று கண்ணீர் அரும்பி விட்டது. ஜன சந்தடியின் மத்தியில் அதை அவள் மறைத்துக் கொள்ள எவ்வளவோ பிரயத்தனப் பட்டாள். நாலுபேர் தன் கண்களில் கண்ணீர் வழிவதைப் பார்க்கக் கூடாது என்று புடவைத் தலைப்பால் முகத்தை மூடிக் கொண்டாள். ‘தன்னை இந்த நிலையில் ஒருவரும் பார்க்கவில்லை’ என்று தனக்குள் தீர்மானித்துக் கொண்டு தைரியத்தை வரவழைத்துக் கொண்டாள். ஆனால் அவளை அந்த நிலையில் வேதாசலம் பார்த்துவிட்டான் என்பதை அவள் என்ன கண்டாள்! வேதாசலம் இன்றுதானா பூங்கொடியைக் கவனிக்கிறான்! தினமும்தான் பார்த்துக் கொண்டிருக்கிறான். பல சமயங்களில் அவள் தேம்பித் தேம்பி அழுவதைக் கூடக் கவனித்திருக்கிறான். கெட்டி மேளத்துக்கும் அவள் கண்ணீருக்கும் என்ன சம்பந்தம் என்றுதான் அவனுக்கு இன்னமும் விளங்கவில்லை

வேதாசலம் அந்த ஊர் சிவன் கோயிலில் நாகசுரம் வாசிப்பவன். மாலை வேளை தீபாராதனை சமயம் கெட்டி மேளம் முழங்குவது வழக்கம். அந்தச் சமயமாகப் பார்த்துத்தான் பூங்கொடி சந்நிதி பக்கம் வருவாள். மேளச் சத்தத்தைக் கேட்டவுடன் கண்களில் கண்ணீர் முட்டி மோதிக் கொண்டு வரும். வேதாசலத்துக்கு வெகு நாளாகவே பூங்கொடியைக் கண்டு பேச வேண்டுமென்று ஆவல். அவள் அழகுக்காக இல்லாவிட்டாலும், அவள் விடும் கண்ணீருக்காகவாவது அவளுடன் பேசி, அவள் கண்ணீர் விடுவதன் காரணத்தைக் கேட்டு அறிய வேண்டும் என்று ஒரு துடிப்பு. ஆனால் எப்படி அவளை இருந்திருந்தாற்போல் கண்டு பேசுவது என்று தான் அவனுக்குத் தெரியவில்லை.

வேதாசலம் இளம் காளை. ஆஜானுபாகுவாக இருப்பான். நாகசுரம் வாசிக்கும் திறமை வேறு இருந்ததால், அந்த ஞானத்தின் ஒளி வேறு களை கட்டி அவன் முகத்தில் பிரகாசித்துக் கொண்டிருந்தது. நாலைந்து மாதங்களுக்கு முன்புதான் அந்த ஊரில் குடியேறிக் கோயிலில் வாடிக்கையாக நாகசுரம் வாசித்துக் கொண்டிருக்கிறான். மற்றப் பேர்வழிகளோ பழம் பெருச்சாளிகள், தவுல் அடிப்பவனும் தாளம் போடும் அவன் பிள்ளையும் ஊரையே விற்றுவிட்டு வந்து விடுவார்கள். இந்த நிலையில் கொடிபோல் விளங்கும் பூங்கொடியினிடம் எப்படிப் பேசுவது!

பூங்கொடியும் அந்தக் கோயிலில்தான் வேலை செய்து கொண்டிருந்தாள். அவள் வேலை எல்லாம் காலையிலேயே முடிந்துவிடும். கோயில் பூராவும் பெருக்குவது, விளக்குகள் யாவையும் துடைப்பது என்ற காரியங்கள் எல்லாவற்றையும் பக்தி சிரத்தையாகச் செய்வாள் அவள். இதற்காக அவளுக்கு மாதம் நாலு கலம் நெல் கொடுத்தார்கள். ‘இந்த நாலு கலம் நெல் அவளுக்குப் போதுமா?’ என்று வேதாசலம் எண்ணிப் பார்ப்பதுண்டு. அப்போதெல்லாம் அவள்மீது அவனுக்கு எல்லையில்லாத இரக்கம் உண்டாகும். தன்னை அறியாமல் தன் உள்ளமும் மனமும் அவளை நாடுவதை உணரும் போதெல்லாம் அவன் உடல் நிறைவு கண்டு பூரித்துப் போகும். இது ஏன், எதனால் என்றுதான் அவனால் இதுவரை ஊகித்து அறிய முடியவில்லை.

அன்றைய தினம் வெள்ளிக்கிழமை. ஒரு நாயனுக்கு விசேஷ பூஜை என்று குருக்கள் அறிவித்திருந்தார். சாதாரணமாக நாயன்மார்கள் என்றால் மேளம் வாசிப்பவர்களுக்கு வெகு அலட்சியம். மேளம் கொட்ட வர மாட்டார்கள். அன்றைய தினம் அந்த நாயனுக்கு அதிர்ஷ்டம் போலும்! வேதாசலம் நாகசுரத்தை எடுத்துக் கொண்டு கோயிலுக்கு வந்து விட்டான். நாகசுரம் மட்டும் வந்தால் போதுமா! ஒத்து ஊதுபவர் வரவில்லை. தவுலையும் காணோம். குருக்கள் வேதாசலத்தைப் பார்த்து, “என்ன வேதாசலம் இன்று மழைதான் வரப்போகிறது. நீயே வந்து விட்டாயே. ஆனால் வந்து என்ன பிரயோசனம்! தவுல்காரர் வந்தால் தானே!” என்று கேட்டுவிட்டு, பரிகாசமாக ஒரு சிரிப்புச் சிரித்து வைத்தார். வேதாசலத்துக்கு அவர் சிரிப்பு நெருப்பாக இருந்தது. “என்ன சாமி! தவுல் இல்லாவிட்டால் என் பாட்டு எடுக்காதா! அப்படி தவுல் வேண்டும் என்றால் கொட்டி இட்டு வாசிக்கிறேன்” என்றான் ஆத்திரத்தோடு.

“கோவிச்சுக்காதே, அப்பா! நீ அஷ்டாவதானம் செய்வாய் என்று எனக்கு எப்படித் தெரியும்!” என்று குருக்கள் சொல்லி விட்டுக் கர்ப்பக் கிரஹத்துக்குள் சென்று விட்டார்.

வேதாசலம் நிஜமாகவே அஷ்டாவதானம்தான் செய்தான். மூலையில் மூடிக் கிடந்த தவுலை எடுத்துக் கீழே வைத்து, அதன் முன்பு உட்கார்ந்து கொண்டான். பிறகு நாகசுரத்தை அதன்மேல் கிடத்தி ஊத ஆரம்பித்துவிட்டான். ஒரே சுரத்தில் நாகசுரம் அலற, அதற்கு ஏற்ற மாதிரி அவனுடைய வலது கை தவுலை ‘டும்டும்’ என்று தட்ட இடது கை ‘ஜாலரா’வைச் சுருதிக்கு ஏற்றபடி இனிமையாகத் தட்டிக் கொண்டிருந்தது.

நாகசுர சத்தம் திடுமென்று கேட்கவே, பிராகாரத்தில் விளக்குகளைச் சுத்தம் செய்து கொண்டிருந்த பூங்கொடி சந்நிதிப் பக்கம் வந்து வெளியே எட்டிப் பார்த்தாள். வேதாசலம் ஒருவனே மூன்று வாத்தியங்களை வாசிப்பதைக் கண்டு ‘களுக்’கென்று சிரித்து விட்டாள். சிரித்த பிறகுதான் நாணம் அவளைக் கவ்விக் கொண்டது. தான் சிரித்து விட்டதை வேதாசலம் கவனித்து விட்டான் என்பதை அவள் அறிந்தபோது, அது பன்மடங்கு பெருகி நின்று அவள் வாட்டசாட்டமான சரீரத்தைச் சிறுக வைத்து விட்டது.

பூங்கொடி கோயிலில்தான் இருக்கிறாள் என்பதை வேதாசலம் அறிந்தபோது அவன் குதூகலம் பெருகிற்று. தவுலை வெகு வேகமாகக் கொட்ட ஆரம்பித்து விட்டான். கெட்டி மேளம் கொட்ட வேண்டும் என்று அவன் பிரம்மப் பிரயத்தனம் செய்து பார்த்தான். எவ்வளவு முயன்றும் அது சாத்திய மாகாமல் போய் விட்டது.

வேதாசலம் காலை வேளையில் நாகசுரம் ஊத வந்ததின் காரணமே பூங்கொடியைச் சந்திக்க வேண்டும் என்பதற்காகத்தான். அவள் வந்திருப்பது ஊர்ஜிதமானவுடன் எப்படியும் அவளுடன் இன்று பேசிவிட வேண்டும் என்று தன்னுள் தீர்மானம் செய்து கொண்டான்.

பூங்கொடி கைக் காரியங்கள் யாவையும் முடித்து விட்டு, சுவாமியைத் தொழச் சந்நிதிப் பக்கம் வந்தாள். கடவுளைக் கவனித்தவளின் கண்கள் வேதாசலத்தைச் சுற்றிச் சுற்றி வட்ட மிட்டன. குருக்கள் திருநீறு அள்ளிப் பூங்கொடியின் கைகளில் கொடுத்து விட்டு மடப்பள்ளி பக்கம் சென்று விட்டார். பூங்கொடி சற்றுத் தயங்கியபடியே வெளிப் பக்கம் வந்தாள்.

" இந்தா, இந்தப் பக்கம் பாரு, உன்னோடு பேச வேண்டும் என்றுதான் இத்தனே நேரம் காத்துக் கிட்டு கிடக்கிறேன் " என்றான் வேதாசலம், அவள் வந்த வழிப் பக்கம் நின்று கொண்டு.

பூங்கொடிக்குச் சப்த நாடியும் ஒடுங்கி விட்டது. திடீரென்று வேதாசலம் பேச்சை ஆரம்பித்த வுடன் அவளுக்கு ஒரேயடியாகத் தன்னை யாரோ தூக்கி எடுத்துப் போவதைப் போல் இருந்தது. இருந்தாலும் ஒருவாறு சமாளித்துக் கொண் டாள். வேதாசலத்திடம் அவளை யறியாமல் அவ ளுக்கொரு நன்றி பிறந்தது. அது அவன் வாசிக் கும் நாகசுர இசையின் காரணமாக இருக்கலாம். எனவே அவன் பேச்சுக் கொடுக்கும் போது அவளால் பதிலளிக்காமல் இருக்க முடிய வில்லை.

" என்னிடம் பேசக் காத்துக்கிட்டு கிடப்பா னேன்! பூங்கொடி என்று ஒரு குரல் கூப்பிட்டா, நானே ஓடி வரேன் " என்றாள் பணிவாக.

" அட, உன் பேரு பூங்கொடியா! பேரு ரொம்ப நல்லாதான் இருக்கு. பேரு தெரிஞ்சிருந்தால் நானே அப்போதே கூப்பிட்டிருப்பேன் " என்று சொல்லிவிட்டுப் பல்லைக் காட்டினான் வேதா சலம். " அதற்கு நான் என்ன செய்வேன்!" என்று 'வெடுக்' கென்று பதிலளித்து ஒரு மாதிரியாக நின்றாள் பூங்கொடி.

" பூங்கொடி நான் பேச வரேன் என்று உனக்குக் கோபமா! ரொம்ப நாளாக ஒரு விசயம் உன்னைக் கேக்கணும்னு துடிச்சுக் கிட்டு இருக்கேன். நான் கேட்டால் அதை நீ சொல்லவா போறெ!" என்று பரிதாப மான குரலில் கேட்டான் வேதாசலம்.

" ஏன் இப்படிப் புதிர் போடுகிறாய்! இந்த ஆண் பிள்ளைகளே இப்படித்தான் சுத்திச் சுழட்டிக் கிட்டு......"

" பூங்கொடி, பூங்கொடி! கோவிச்சுக் காதே! கேட்டுப்பிடறேன். நீ வந்து, தினமும் கோயிலுக்கு வறையா ......"

" வரேன்......"

" வந்து என்ன செய்யறே ......!"

" சாமி, கும்பிடறேன்...... "

" இல்லே, பொய் புளுகறே......"

" பின்னே என்ன செய்யறேனும்!"

" நிதம் நீ கோவிலுக்கு வந்து அழுவலே!"

" அடபாவி, உனக்கு எப்படி இது தெரி யும் " என்று கேட்க வேண்டும் போல இருந்தது பூங்கொடிக்கு. ஆனல் அவள் அப்படிக் கேட்கவில்லை.

" என்ன பூங்கொடி! சும்மா இருக்கே. நான் சொல்றது நிசம்தானே!" என்று மீண்டும் கேட்டான் வேதாசலம்.

பூங்கொடிக்குப் பதில் சொல்லத் தெரிய வில்லை. ஆனல் அவள் கண்கள் வேதாசலத் துடன் பேசின. இமைகள் அர்த்த பாவத் துடன் மூடித் திறந்தன. கண்ணீர் மாலை மாலையாகக் கன்னங்களில் வழிந்தோடியது.

" பூங்கொடி! உனக்கு இஷ்டம் இல்லா விட்டால், சொல்ல வேண்டாம். தினமும் கெட்டி மேளம் கொட்டும் போது நீ உள் ளம் குமுறி அழுவதை என்னல் பார்க்கச் சகிக்கவில்லே. அதனுலேதான் கேட்டேன். உன் வருத்தத்தை என்னல் போக்க முடியு மானல் அதற்கான ஒத்தாசை செய்யலாம் என்று நினைச்சிருக்கேன். உனக்கு மனசு இல்லாவிட்டால் ......" பேச்சை முடிக்க முடியாமல் தயங்கினன் வேதாசலம்.

" உங்க மனசு நல்ல மனசு. எல்லாருமா இப் படிக் கேட்கிறாங்க. நான் அழுவதற்கு எவ்வளவோ காரணம். உங்களாலே அதை ஒருநாளும் தீர்க்க முடியாது. இருந்தாலும் என்னமோ சொல் லுது, உங்ககிட்டே எல்லாத்தையும் சொல்ல வேண்டும் என்றுதான். அதனுலே சொல்லு கிறேன்......" என்று கூறிக்கொண்டே கண்களைத் துடைத்து விட்டுக் கொண்டாள் பூங்கொடி.

✶

J.T தா மங்கலம் வேலூருக்குப் பக்கத்தில் இருக்கும் ஒரு சிறிய கிராமம். அங்கு 'உடைய வர்கள்' அதிகமாகக் கிடையாது. இருப்பவர்கள் அவ்வளவு பேரும் வேளாண்மை செய்பவர்கள். அங்குதான் பூங்கொடி பிறந்தாள். ஆனல் வயது ஆக ஆகத்தான் சௌந்தர்யம் அவளைத் தேடி வந் தடைந்தது. இயற்கையின் எழிலில் மிளிர்ந்து, பொன் வண்ணம் கொண்டு அவள் அந்தக் கிரா



மத்தில் ஒரு தேவதையைப் போல உலவி வந்து கொண்டிருந்தாள். அந்தக் கிராமத்தின் வடக்குக் கோடியில் ஒரு கோயில் இருந்ததாம். அந்தக் கோயிலுள்ள அம்மனுக்குச் சௌந்தர்யவல்லி என்று பெயர். கால வெள்ளத்தில் இப்போது கோயிலைக் காணோம்; அம்மனையும் காணோம். அதற்கு அடையாளமாக மதில் சுவரும், அம்மன் பெயரும் மட்டும் நிலைத்து விட்டது.



அந்த அம்மன் தான் ஜீவன் எடுத்துப் பூங்கொடியாகி விட்டாள் என்று கிராமத்திலுள்ள பலருடைய அபிப்பிராயம். இது எவ்வளவு தூரம் உண்மையோ! ஆனால் அந்த ஊர் இளைஞர்கள் அவ்வளவு பேரும், சௌந்தர்ய வல்லி அம்மனைப் பார்த்திரா விட்டாலும் நூற்றுக்கு நூறு பங்கு ஒத்துக் கொள்வார்கள்.

பூங்கொடி பூத்துச் செழித்து மலர்ந்த போது அவளைச் சுற்றிப் பல ஆண் வண்டுகள் வட்ட மிட்டன. ஆனால் அவளை நெருங்கவோ அவள் இதயத்தைக் கவரவோ செல்லப்பனால்தான் முடிந்தது. அதிர்ஷ்டம் அவன் பக்கம் இருந்தது.

செல்லப்பனுக்குத் தாயுமில்லை, தகப்பனுமில்லை. ஒண்டிக் கட்டை. ஆனால் அவன் கைகளில் வலுவிருந்தது. உள்ளத்தில் உறுதி யிருந்தது. பூமியை நம்பி வாழ்ந்த அவன் யாருக்கும் பயப்பட வில்லை. பூர்வீகமாக இருந்த கொஞ்சம் நன்செயோடு, குத்தகைக்கு வேறு எடுத்துக் கொண்டிருந்தான். பயிர்த் தொழில் மகோன்னதமாக இருந்த காலத்தில் அவன் ஒரு குறைவு மில்லாமல் கவலை யற்று வாழ்க்கை நடத்தி வந்தான். அந்த நிலையில்தான் பூங்கொடி அவன் அந்தரங்கத்தில் நிரந்தரமாகக் குடியேறினாள்.

பூங்கொடியின் வீட்டுக்கு எதிரேதான் செல்லப்பன் வீடும் இருந்தது. எனவே அவர்கள் காதல் வளரச் சூழ்நிலையும் அநுசரணையாக அமைந்திருந்தது. செல்லப்பன் வீட்டை விட்டு வயல் வெளிகளுக்குப் போகும்போதும், மாலை வேளைகளில் வீடு திரும்பும்போதும், பூங்கொடி தவறாமல் தன் வீட்டின் ஆளோடியில் நின்றுகொண்டு அவனுக்குக் காட்சி தருவாள். செல்லப்பன் அவள் கடைக்கண் வீச்சினால் தாக்குண்டு, மதுவுண்ட வண்டைப் போல் சிங்காரித்துச் சொக்கிப் போவான். பூங்கொடியின் பெற்றோர்களுக்கு இவ் விஷயங்கள் யாவும் தெரிந்துதான் இருந்தது. இச் சமயத்தில்தான் எதிர்பாராத நிகழ்ச்சி நடந்தது.

செல்லப்பன் பாடுபட்டு உழைத்ததின் பயனாக அவனுடைய சொந்த நிலமும், குத்தகை எடுத்துக் கொண்ட நிலமும் எப்போதும் போல அந்த வருடமும் நன்கு விளைந்திருந்தது. ஆனால் அதற்கு மாறாக மற்றக் குடியானவர்களின் நிலங்களில் விளைச்சல் பாதிக்குப் பாதி கூடக் காணவில்லை. எனவே அந்தப் பிராக்கியத்தில் உள்ளவர்கள் எல்லோரும், குத்தகைப்படி நெல் அளக்க முடியாது என்று பெரும் கிளர்ச்சி செய்தார்கள். இந்தக் கிளர்ச்சியில் செல்லப்பன் சம்பந்தப்படவில்லை. ஆனாலும் அவன் பெயர் அடிபட்டது. வாயளவில் இருந்த இந்தக் கிளர்ச்சி ஒரு நாள் கை கலப்பில் வந்து விட்டது. நாலைந்து மிராசுதாரர்கள், 'குத்தகைப்படி நெல் அளக்க வேண்டும்' என்று கெடுபிடி செய்தபோது, பண்ணையாட்கள் அவர்களை நையப் புடைத்து விட்டார்கள். பிறகு இந்த நிலவரம் போலீஸுக்கு எட்டிவிட்டது. உள்ளூர் அவுட்போஸ்ட் ஏட்டும், ஸப் இன்ஸ்பெக்டர் நமசிவாயமும் ராதாமங்கல கிராமத்துக்கு விசாரணை செய்ய வந்து விட்டார்கள்.

கேஸ் புலன் விசாரணைகள் நாட்கு நாட்கள் நடந்தன. கடைசியில் செல்லப்பன் உள்பட நான்கு பேர்களைக் கைது செய்து அவர்களை 'ரிமாண்டி'ல் வைத்தார்கள்.

பூங்கொடிக்குச் 'செல்லப்பன் கைது செய்யப் பட்டான்' என்ற விவரம் தெரிந்த போது மூர்ச்சை போட்டு விழுந்து விட்டாள். 'நான்கு நாட்களில் தன் தகப்பன் கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்யப் போகிறான். அதற்குள் இம்மாதிரி காரியம் ஒன்று நடந்துவிட்டதே' என்று நினைத்த போது அவள் தொண்டை அடைபட்டுக் கண்களில் கண்ணீர் மாலை மாலையாக வந்தது.

அன்று மாலை வீடு திரும்பிய பூங்கொடியின் தகப்பன் ஒரு பெருமூச்சு விட்டுக் கொண்டே கயிற்றுக் கட்டிலில் அமர்ந்தான். "ஐயனார்தான் காப்பாத்தினார். பூங்கொடியைச் செல்லப்பனுக்குக் கட்டிக் கொடுத்திருந்தோமானால் அந்தப் பெண் கண்கலங்கி நிற்கிறதைத்தான் பார்க்க வேண்டியதாக இருந்திருக்கும்" என்று அவன் வாய் முணுமுணுத்தபோது, அவன் மனைவியும், "சாமி எப்போதும் நம்ம பக்கம்தான்" என்று அதை ஆமோதித்தாள். பூங்கொடிக்கு அவர்கள் சம்பாஷணையைக் கேட்கவே வேம்பாக இருந்தது. 'தெய்வமே' என்று தன் கைகளில் முகத்தைப் புதைத்துக் கொண்டு விம்மிக் கொண்டிருந்தாள்.

செல்லப்பனை நாகப்பட்டினம் 'ரிமாண்டி'ல் வைத்துவிட்ட பிறகு ஒரு தகவலும் ராதா மங்கலத்துக்கு வரவில்லை. உற்றார் உறவினர் அவனுக்கு யாரும் இல்லாத காரணத்தினால் அவனைப் பற்றி ஒருவரும் கவலைப்படவில்லை. ஆனால் பூங்கொடி மட்டும் அவனைப் பற்றிக் கவலைப்பட்டாள். அவனுக்கு ஒரு ஆபத்தும் நேராமல் சீக்கிரமே விடுதலையடைந்து ஊருக்குத் திரும்பி வந்து தன் கைப் பற்ற வேண்டும் என்று தெய்வங்களையெல்லாம் வேண்டிக் கொண்டாள்.

பூங்கொடியின் தகப்பனுக்குப் பொறுமையில்லை. தன் பெண், கண்ணீரும் கம்பலையுமாக நின்று கொண்டிருப்பதை அவனால் பார்க்க முடியவில்லை.

"பூங்கொடி! இப்படி நீ தினமும் அழுது கொண்டிருந்தால், செல்லப்பன் வந்து விடுவானா! அப்படி வந்து விட்டாலும், நீ அவனை இனி கல்யாணம் செய்து கொள்ள முடியுமா!" என்றான்.

தன் தகப்பனின் பேச்சு பூங்கொடியின் துக்கத்தைத் தான் அதிகரிக்கச் செய்தது. அவள் பதில் பேசவே இல்லை. அதற்குப் பதிலாக அவளுடைய கண்ணீரும், உதடுகளும் துடி துடித்துக் கொண்டு ஆயிரம் ஆயிரம் பேசின.

ஒரு வெள்ளிக் கிழமை, பூங்கொடியின் தகப்பன் யாரையோ வீட்டுக்கு அழைத்துக் கொண்டு வந்தான். வந்தவன் தலையில் கொண்டை போட்

டுக் கொண்டிருந்தான். நெற்றியில் காலணா அளவு குங்குமம் இருந்தது. ஏதேதோ பேசிக் கொண்டிருந்து விட்டு, கடைசியில் அவன் தன்னிடமிருந்த தேங்காய், பூ, பழம் எல்லாவற்றையும் ஒரு தட்டில் வைத்துப் பூங்கொடியின் தகப்பனிடம் கொடுத்தான். அதற்குப் பிறகு பூங்கொடி அவனைக் கும்பிட்டு விட்டுப் போனாள்.

பூங்கொடிக்குத் தனக்கு மணப் பேச்சு நடக்கிறது, அதற்குப் பரிசம் போட யாரோ வந்திருக்கிறார், தன் தகப்பனும் அதற்குச் சம்மதித்து விட்டான் என்று தெரிந்து விட்டது. அதை ஊர்ஜிதம் செய்வதைப் போல் அவள் தகப்பன் விஷயத்தைப் பூங்கொடியிடம் சொல்லிவிட்டான். ''பூங்கொடி வர வெள்ளிக்கிழமை உனக்குக் கண்ணாலம், நிச்சயம் ஆகிவிட்டது. இன்னிக்கு வந்தாரு பாரு, அவர்தான் உன் மாமனார், பிள்ளையினுடைய தகப்பன்'' என்றான்.

கல்யாண தினம் நெருங்கி வரவரப் பூங்கொடியின் தேகம் நிலைகொள்ளாமல் தவித்தது.

கடைசியில் பூங்கொடியின் உள்ளம் உறுதியடைந்தது. அவளுக்கு இந்தத் திருமணத்தில் கொஞ்சங்கூட இஷ்டமில்லை. எப்படியாவது இதிலிருந்து விடுதலையடையவேண்டும் என்று தீர்மானித்து விட்டாள். அதற்கான திட்டம் ஒன்றும் அவள் உள்ளத்தில் உருப்பெற்று விட்டது.

கல்யாணத்துக்கு முன் தினம், நடு நிசியில் பூங்கொடி விழித்துக் கொண்டாள். விடிந்தால் தன்னைப் பந்தலுக்கு இழுத்துக் கொண்டு போய் விடுவார்கள் என்று அவளுக்குத் தெரியும். எனவே ஒருவரும் அறியாமல் வீட்டை விட்டு வெளியேறி விட்டாள். ஒருவர் கண்களிலும் படாமல் சாலையைத் தாண்டித் தோப்புக்குள் மறைவதற்குள் அவள் பாடு பெரும் கஷ்டமாகப் போய் விட்டது. எவ்வளவு வேகமாக நடந்து வந்த போதிலும், வேலூர் ஸ்டேஷனை வந்தடைந்தபோது விடியும் நேரமாகி விட்டது.

ஸ்டேஷனை அடைந்த பூங்கொடி மேற்கொண்டு என்ன செய்வது என்று புரியாமல் தத்தளித்துப் போனாள். வேலூருக்குப் பக்கத்தில் சிக்கல் இருக்கிறது. அந்தச் சிக்கலின் சிங்கார வேலர் எல்லோர் கஷ்டங்களையும் கொடிப் பொழுதில் தீர்த்து வைப்பார் என்று பூங்கொடியின் தாயார் அடிக்கடி அவளிடம் சொல்லி இருக்கிறாள். இப்போது பூங்கொடிக்குச் சிங்கார வேலர் ஞாபகம்தான் வந்தது. அந்த எண்ணம் தோன்றிய உடனேயே அவள் கரங்கள் குவிந்தன. ''வேலவா! இனி நீதான் எனக்குக் கதி'' என்று அலறினாள்.

இப்படி ஒன்றும் புரியாமல் பூங்கொடி நின்று கொண்டிருந்த சமயத்தில்தான் யாரோ 'பூங்கொடி' என்று தன் பெயர் சொல்லி அழைப்பது அவள் செவிகளில் விழுந்தது. பயத்துடனும் நடுக்கத்துடனும் பூங்கொடி திரும்பிப் பார்த்தபோது அவள் கண்களை அவளாலே நம்ப முடியவில்லை. செல்லப்பன், பூங்கொடியை நோக்கி வேகமாக நடந்து வந்து கொண்டிருந்தான். பூங்கொடிக்கு ஒரே திக்பிரமை. தான் வேண்டிக் கொண்ட சிங்கார வேலர்தான் செல்லப்பன் உருக்கொண்டு வந்து விட்டாரோ என்று அவளுக்குத்தோன்றிற்று.

''பூங்கொடி! இந்த வேளையில் எங்கிருந்து இங்கு வந்தாய்!'' என்றான் செல்லப்பன்.

''நீங்க எங்கே வந்தீங்க! உங்களைத்தான் ஜெயிலில் அடைச்சதாகப் பேசிக் கொண்டார்களே!''

''ஆமாம்; ஜெயிலில்தான் இருந்தேன். என்மீது குற்றம் ஒன்றும் இல்லை என்றவுடன் விடுதலை செய்துட்டாங்க'' என்று கூறினான் செல்லப்பன்.

''அவங்க நல்லா இருப்பாங்க. இப்போ மட்டும் நீங்க வராதுபோனால் என்பாடு அதோகதிதான். இனி பயமில்லை' என்று சொல்லிக் கொண்டே பெருமூச்சு விட்டாள் பூங்கொடி.

''உனக்கு என்ன ஆபத்து பூங்கொடி!'' என்று பதட்டத்துடன் கேட்டான் செல்லப்பன்.

''ஆபத்தா, என்னை இன்னொருத்தனுக்குக் கட்டிக் கொடுக்கல்லவோ பார்த்தாங்க. நீங்க மட்டும் இப்போ வராவிட்டால்......'' பேச்சை முடிக்காமல் கண்ணீர் விட்டாள் பூங்கொடி.

''உனக்குக் கண்ணாலமா! எப்போ!''

''இன்னிக்குத்தான். அதனாலேதான் ஓடிவந்து விட்டேன்!'' என்றாள்.

செல்லப்பனுக்கும் பூங்கொடியின் வார்த்தைகளைக் கேட்டவுடன் ஆத்திரம் மண்டிக் கொண்டு வந்தது. ''பூங்கொடி, நம்ம குல கௌரவத்தையே கெடுத்து விட்டாயேடி. பாவி!'' என்று தன்னையும் அறியாமல் கத்தி விட்டான். பூங்கொடி திகைத்துப் போனாள்.

''பூங்கொடி, கல்யாணம் நிச்சயம் செய்த பிறகு இப்படி ஓடி வரதுதான் நியாயமா! வா, ஊருக்குப் போவோம்.''

பூங்கொடிக்குத் தன் தலையில் இடிவிழுவதைப் போன்ற பிரமை ஏற்பட்டது. செல்லப்பனா இப்படிப் பேசுகிறான்! அவளால் நம்ப முடியவே இல்லை. ''செல்லா, உன்னையே நம்பியிருந்த எனக்கு நீ செய்கிற உபகாரம் இதுதானா! நம் இரண்டு பேரையும் கிராமத்திலே பார்த்தால் அப்படியே வெட்டிப் போட்டுவிடுவாங்க'' என்று பலவாறாகச் சொல்லி அவன் மனத்தைத் திருப்பப்

பார்த்தான். ஆனால் செல்லப்பனுடைய உறுதி சிறிதும் தளரவே இல்லை.

விடிய ஒரு நாழிகை இருக்கும் போது, செல்லப்பனும் பூங்கொடியும் கிராமத்தை யடைந்தார்கள். ஆனால் ஊர்க்காரர் சிலருக்குப் பூங்கொடி காணாது போன விவரம் தெரிந்து விட்டது. அவளைத் தேடிக்கொண்டு நாலா பக்கங்களிலும் சென்றனர். கல்யாணப் பந்தலில் மேளம் முழங்கிக் கொண்டிருந்தது. அப்போது கிராமக்காரர்கள் கையில் செல்லப்பன் சிக்குண்டான்.

செல்லப்பனைப் பிடித்துக் கொண்டு எல்லோருமே நையப் புடைத்து விட்டார்கள். செல்லப்பன் கரடியாகக் கத்திப் பார்த்தான். அதெல்லாம் அவர்கள் காதுகளில் விழுந்தால்தானே!

கல்யாணப் பந்தலில் மேளம் முழங்கியபோது, செல்லப்பன் மூர்ச்சையுற்றுக் கிடந்தான்.

இதற்குள் காதும் காதுமாக இருந்த இரகசியம் பகிரங்கமாகிவிட்டது. கல்யாணம் நின்றுவிட்டது.

செல்லப்பன் ஆஸ்பத்திரியில் முனகிக் கொண்டிருந்தான். அடிக்கொரு தடவை நினைவு வந்த போதெல்லாம் "பூங்கொடிக்குக் கல்யாணமாகி விட்டதா!" என்று கேட்டுக் கொண்டிருந்தான். ஒருநாள் பூங்கொடியே அவனைப்பார்க்க ஆஸ்பத்திரிக்கு வந்திருந்தாள். அன்று அவன் தேக நிலைமை ரொம்பவும் மோசமாக இருந்தது. எனினும் பூங்கொடியைக் கண்டவுடன் அவன் தெளிவாகப் பேசினான். "பூங்கொடி, உன் கல்யாணம் நின்று போச்சாம். எனக்கு என்ன ஆசை தெரியுமா! நீ உன் தகப்பனார் பார்த்த பையனையே கண்ணாலம் கட்டிக்கனும், தெரிந்ததா! அந்தப் பையன் கிட்டே கூடச் சொல்லியிருந்தேன்......" அதற்கு மேலே ஏதோ பேச வாயெடுத்தான் செல்லப்பன். அவனால் ஒன்றும் பேச முடியவில்லை. மீளாத நித்திரையில் ஆழ்ந்து விட்டான்.

*

"இதுதான் என் கதை. அன்றைய தினத்திலிருந்து நானும் தேடிக்கிட்டு இருக்கேன். அவுங்க கிடைக்கவே இல்லை. ஆனால் இந்தக் கெட்டி மேளச் சத்தம் மட்டும் தினமும் கொட்டுகிறது. அப்போ செல்லப்பனை எல்லோரும் கூடிக்கிட்டு அடிச்சது ஞாபகம் வருகிறது......" என்று விம்மி விம்மி அழ ஆரம்பித்து விட்டாள் பூங்கொடி.

"பூங்கொடி! மாரிசாமி பொண்ணு, நீ! அவரு எங்கே!" என்று கேட்டான் வேதாசலம்.

"எங்க அப்பாவை உங்களுக்கு எப்படித் தெரியும்! அவங்கதான் எங்க அப்பா!"

"பூங்கொடி நான்தான் உன்னைக் கண்ணாலம் கட்டிக்க ராதாமங்கலம் வந்தேன். இன்னிக்கே உன் தகப்பனாருக்குக் கடிதாசி எழுதி என் அப்பாவைப் பார்க்கச் சொல்கிறேன்."

"நீங்கதானா அது! எனக்கு என்னவோ நீங்கதான் அவராக இருக்க வேண்டும் என்று ஒரு நினைப்பு. எங்க அப்பா செத்துட்டாரு. என் அம்மாவுக்கு உங்க தகப்பனாரைத் தெரியும். கடிதாசி போட்டு வரவழையுங்க."

* * *

அடுத்த தடவை கெட்டி மேளம் கொட்டும் போது, வேதாசலம் பூங்கொடியின் கழுத்தில் தாலி கட்டிக் கொண்டிருந்தான். அப்போது பூங்கொடியின் கண்களில் ஆனந்த பாஷ்பம் பெருகிற்று. செல்லப்பன் நேரிலேயே வந்து தன்னை ஆசி கூறுவது போல் ஒரு பிரமிப்பு ஏற்பட்டது!

## மதுரைக்கு வந்த மாமணி!

உலக சமாதானத்தின் தூதுவர், பண்டித நேருவை, மனிதகுல மாணிக்கத்தை நேரில் காண வேண்டும், அவர் பிரசங்கத்தை நேரில் கேட்க வேண்டும் என்று வெகு நாட்களாக ஆசை.

இந் நிலையில் "அக்டோபர் மூன்றும் தேதி நேருஜி மதுரை விஜயம்" என்ற செய்தியைச் சுமார் ஒரு மாதத்துக்கு முன்பே பத்திரிகைகளின் வாயிலாய் அறிந்து, எப்படியும் மதுரை சென்று வர வேண்டும் என்ற ஆர்வத்தில் இருந்தேன். மூன்றும் தேதி காலை வண்டிக்கே புறப்பட்டுவிட்டேன். வண்டி செல்லும் நிலையங்களி லெல்லாம் ஒரே கூட்டம்.

பாண்டிய நாட்டின் தலைநகரை யடைந்ததும், மீனாக்ஷி அம்மன் கோயிலைப் பார்க்கச் சென்றேன். அங்கும் நேருஜி வருவதால், அம்மன் சன்னதிக்கு முன் புறம் சுமார் இரண்டு பர்லாங்கு தூரத்துக்கு வெய்யிலே தரையில் படாதபடி துணியாலும், தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு ஜகஜ்ஜோதியாக விளங்கிக் கொண்டிருந்தது.

விமான நிலையத்திலிருந்து சரியாக மாலை 3—30 மணிக்குப் புறப்பட்டு 'சர்க்யூட் ஹவுஸ்' செல்கிறார் எனத் தெரிந்த மக்கள் மத்தியானம் சுமார் 12 மணியிலிருந்தே பாதையின் இருமருங்கிலும் உட்கார ஆரம்பித்தனர்.

மாலை 4-15 மணிக்கு நேருஜியின் கார் நாங்கள் நின்ற பாதை வழியே சென்றது. என்னையும் மறந்து "நேருஜிக்கு ஜே" என்று கத்திவிட்டேன். ஆனால் வானம் அதிரும்படி உற்சாக மிகுதியால் சத்தமிடும் மக்கள் குரலுடன் என் குரலும் நேருவின் காதுகளில் ஒலித்ததோ என்னவோ!

நேருவைக் காணாத கண் என்ன கண்ணே! ஜய கோஷத்தைக் கேட்டு, நேருவின் முகம் மலர்ந்தது. பொலிவுடன் கூடிய பொன் மயமான முகத்தில் பள பளக்கும் ஒளி, எண்ணற்ற மக்களின் இதயத்தை ஈர்த்தது. அவர் கண்களின் கம்பீர மயமான பிரகாசமும், உள்ள மகிழ்வை எடுத்துக் காட்டும் புன்முறுவலும், அவர் நிமிர்ந்து நின்று சென்ற தோற்றமும், நேர் கொண்ட பார்வையும் 'அறுபது வயதையும் கடந்து விட்டார்' என்பதையே மறந்து விடச் செய்தது. 'முதுமையிலும் இளமை' என்ற மொழியின் எடுத்துக் காட்டு நேருதான்! என் பக்கத்தில் கறுப்புக் கொடி காட்டும் நண்பர் ஒருவர் கூடத் தம் சட்டைப் பையிலே ஓர் கறுப்புக் கொடியை வைத்துக் கொண்டே நின்றார். ஆனால் தியாகச் செம்மலின் திருவுருவம் கண்டு 'தோள் கண்டார் தோளே கண்டார்' என்ற கம்பன் கற்பனை போல், பார்த்துக்கொண்டேயிருந்து கொடியை எடுத்துக் காட்ட மறந்து விட்டார். ஐயோ, பாவம்!

அன்றையக் கூட்டத்தைப் போன்றதோர் மாபெரும் கூட்டம் மதுரைமா நகரின் சரித்திரத்திலேயே யாரும் கண்டிருக்க மாட்டார்கள். எப்பக்கம் திரும்பினாலும் ஜன சமுத்திரம் கொந்தளித்துக் கொண்டிருந்தது. மேலும் வீதிக்கு வீதி தோரணங்கள், "உலக சமாதானத்தின் உறுதுணைவனே வருக!" "இந்திய நாட்டின் ஈடிணையற்ற மாணிக்கமே வருக!" "குணக்குன்றே வருக!" — என்று எழுதப்பட்ட வளைவுகளும் கட்டப்பட்டிருந்தன. இத்தகைய மகத்தான வரவேற்பைக் கண்டு நேருஜியே வியந்தார்.

திண்டுக்கல்
6–10–53

பாரதிப் பிரியன்.

வீரராகவன் சொன்ன தகவல் சாம்பசிவ முதலியாரைத் தூக்கி வாரிப்போட்டது. "நிஜந்தானா!..." என்று துடித்துப் புடைத்துக் கூச்சல் போட்டவர் வீரராகவன் கையிலிருந்த அந்தப் பொருள்களைப் பார்த்த வண்ணம் செயலிழந்து நின்று விட்டார்.

"ஒன்றும் புரியவில்லையே......இதெல்லாம் என்னத்துக்குத்தான் நடக்குதோ!" என்று அவர் மனைவி ராஜம்மாள் பதறினாள்.

அவளுக்குப் பின்னால் நின்றிருந்த சீதா பொங்கி வரும் துக்கத்தை அடக்கும் முயற்சியுடன் முந்தானைத் தலைப்பை வாயில் திணித்துக் கொண்டு விக்கி விக்கி அழுதாள்.

வீரராகவன் சிலைபோல ஆடாமல் அசையாமல் நின்றிருந்தான். மனவேதனை அவன் உணர்ச்சியை மறக்க வைத்து விட்டிருந்தது. அவன் கையில் சிறிய தோல் பை ஒன்றும், இரண்டொரு ஆங்கில நூல்களும், ஒரு கடிதமும் இருந்தன.

காலையில் மாப்பிள்ளையை வரவேற்க ஸ்டேஷனுக்குப் புறப்படும்போது வீரராகவன் செய்த ஆர்ப்பாட்டமென்ன! பெற்றோரைக் கூடக் கண்டித்து அவர் வரும்போது எப்படி நாகரீகமாக நடந்துகொள்ள வேண்டுமென்று உபதேசம் செய்ததென்ன! தங்கை சீதா செய்யும் சிறு சிறு செயலும் தன் கணவனை வரவேற்பதற்கான காரணமாகவே அமைவதைச் சுட்டிக் காட்டி அவளைக் கேலி செய்து மகிழ்ந்ததென்ன! பொதுவாக அப்பொழுது வீட்டில் சூழ்ந்திருந்த மகிழ்ச்சிக்கும் இப்பொழுது கப்பியிருக்கும் பயங்கர அமைதிக்கும் துயரச் சூழ்நிலைக்கும் எவ்வளவு வித்தியாசம்!

"கடவுளே, உனக்குக் கண்ணில்லையா!" என்று மனதில் வெடித்தெழும் வேதனையை வார்த்தைகளின் மூலம் கொட்டி விட்டு மகளை ஆதரவுடன் அணைத்து இழுத்துக்கொண்டு உள்ளே நகர்ந்தாள் ராஜம்மாள். சீதாவின் செருமல் இப்பொழுது அதிகப்பட்டு மற்றவர்கள் மனத்தில் சம்மட்டி கொண்டு அடிப்பது போல் வேதனைப்படுத்திக் கொண்டிருந்தது.

"ம்......நாம் கொடுத்து வைத்தது அவ்வளவு தான்!" என்று நீண்ட ஒரு பெரு மூச்சுடன் தலையில் கையை வைத்துக் கொண்டு சோபாவில் உட்கார்ந்தார் சாம்பசிவ முதலியார்.

ஜன்னல் வழியாக வானத்தை வெறித்து நோக்கி அங்கே இந்தப் பிரச்னைக்கு ஏதாவது பரிகாரம் கிடைக்குமா என்று ஆராய்ந்தான் வீரராகவன்.

உள்ளே சீதா குரலெடுத்து அழ ஆரம்பித்தாள்.

★

சீதாவுக்கு மணமாகி இன்னும் ஒரு வருடம் கூடப் பூர்த்தியாகவில்லை. காஞ்சிபுரத்தில் பிரபல ஜவுளி வியாபாரியான சாம்பசிவ முதலியார் தாம் விரும்பியது போலவே சீதாவைப் பணக்கார வீட்டில் கொடுக்காமல் புகழேணியின் உச்சியில் நின்ற சென்னை பத்திரிகாசிரியரான தேவநாதனுக்கு மணம் செய்வித்துக் கொடுத்தார். கஷ்ட நிலையிலிருந்து உழைத்து முன்னுக்கு வந்த அவர் பரம்பரைப் பணக்காரக் குடும்பங்களில் மனிதர்களை விடப் பணத்துக்கே மதிப்பு அதிகமிருப்பதை உணர்ந்தார். "பணத்துக்கு என்ன! அது என்னிடம் ஏராளமாக இருக்கிறது. நல்ல குணமும் புகழும் பெற்றவனும், சீதாவைப் பூப்போல வைத்துக் கொள்பவனாகவும் உள்ள இளைஞனுக்குச்




சீதாவையும் கொடுத்து வாழ்க்கை வசதிக்கு வேண்டிய வசதிகளுக்கு நானே வளமான செல்வமும் தந்துவிட்டுப் போகிறேன்!" என்று சாம்பசிவ முதலியார் அடிக்கடி கூறுவார்.

அவருடைய மூத்த மகன் வீரராகவன் பத்திரிகைப் பித்தன். நாவல் பைத்தியம். அதனால் அவனுடைய நண்பர்கள் பெரும்பாலும் பிரபல பத்திரிகாசிரியர்களாகவும், கதாசிரியர்களாகவும் இருப்பது வழக்கம். அடிக்கடி எங்கிருந்தோ இப்படிப்பட்டவர்கள் வீட்டுக்கு விஜயம் செய்வார்கள். அவர்களுக்கு வீட்டில் ஏக அமர்க்களமாக உபசரணைகள் நடக்கும்.

இப்படியெல்லாம் நல்லவர்களாக நான்கு பேர் தன் வீட்டுக்கு வந்து போவதில் சாம்பசிவ முதலியாருக்கும் தாங்க முடியாத பெருமை.

இப்படிப்பட்ட விருந்தாளிகளில் ஒருவர்தான் தேவநாதன். சென்னையில் பிரபல வாரப் பத்திரிகையாகத் திகழ்ந்த "செந்தாமரை"யின் ஆசிரியர் அவர். அவருடைய பொருள் பொதிந்த நாவல்களுக்குப் பெருமதிப்பு இருந்து வந்தது.

தேவநாதன் பார்வைக்கு மிகவும் அழகாக இருந்தார். அமைதியும் அடக்கமும் நிறைந்த அவரது நடவடிக்கைகள் சாம்பசிவ முதலியார் முதல் சீதா வரையில் எல்லோரையும் கவர்ச்சி செய்யவே தேவநாதன் விரைவில் அந்த வீட்டு மாப்பிள்ளையாகவே மாறி விட்டார்.

பெற்றோரை இழந்து நீண்ட நாளாகத் தனிமை வாழ்வு வாழ்ந்து வந்த தேவநாதன் சாம்பசிவ முதலியாரின் மனதில் உருவாகியிருந்த கற்பனை மாப்பிள்ளையைச் சகல விதத்திலும் ஒத்திருந்ததால் சீதாவை அவருக்குத் தருவதில் அவருக்கு மட்டற்ற மகிழ்ச்சியே ஏற்பட்டது. தானே எல்லாச் செலவுகளையும் போட்டுச் சீதாவைத் தேவநாதனுக்குக் கன்னிகாதானம் செய்து கொடுத்தார்.

வசதியான வீடு கிடைத்ததும் சீதாவைச் சென்னைக்கு அழைத்துக் கொண்டு விடுவதாகத் தேவநாதன் அறிவித்திருந்தார். மூன் தினம் அவரிடமிருந்து சாம்பசிவ முதலியாருக்குக் கடிதம் ஒன்று வந்திருந்தது. ஒரு இலக்கியச் சொற்பொழிவுக்ாகத் தான் செங்கற்பட்டு வந்திருப்பதாகவும், மறுநாள் காலை எட்டு மணிக்குச் செங்கற்பட்டிலிருந்து புறப்படும் ரயிலில் காஞ்சிபுரம் வருவதாகவும், வீடு கிடைத்து விட்டதால் இந்தத் தடவை சீதாவை உடன் அழைத்துக் கொண்டு செல்ல உத்தேசித்திருப்பதாகவும் தேவநாதன் கடிதத்தில் எழுதி யிருந்தார்.

கடிதம் சாம்பசிவ முதலியார் வீட்டில் மகிழ்ச்சி அலைகளைப் பரப்பியதில் வியப்பென்ன! மறுநாள் வரவிருக்கும் மாப்பிள்ளையை வரவேற்கும் முயற்சியில் வீடே திமிலோகப் பட்டது. பெண்ணுக்குச் சீதனங்கள் செய்வதில் சாம்பசிவ முதலியாரும் அவர் மனைவியும் மண்டையை உடைத்துக் கொண்டனர். விதவிதமாக உடுத்திக் கொள்வதும், அலங்காரம் செய்து கொண்டு கண்ணாடியில் திருட்டுத்தனமாக அழகு பார்ப்பதுமான செயல்களை யெல்லாம் கண்டு பிடித்துத் தங்கையைப் பரிகாசம் செய்து மகிழ்வதில் வீரராகவன் தன்னுடைய காலத்தைக் கழித்து வந்தான்.

மறு நாள் காலையில், குறித்த நேரத்தில் வீரராகவன் ஸ்டேஷனுக்குப் போய் விட்டான். ரயில் சரியான நேரத்தில் வந்து சேர்ந்து விட்டது.

வீரராகவன் ரயிலிலிருந்து இறங்குபவர்கள் மீது கண்ணோட்டம் விட்டுக் கொண்டிருந்தான். ஆனால் தேவநாதனை மட்டும் காணவில்லை.



அன்று மிகவும் கொஞ்சம் பேரே இறங்கினர். இறங்கிய அத்தனை பேரையும் வீரராகவன் தவறாமல் பார்த்துவிட்டான். அவன் பார்வையை மீறித் தேவநாதன் நிச்சயம் வெளியே போயிருக்க முடியாது. ஒருவேளை படுத்துத் தூங்கி விட்டிருப்பாரோ! என்ற சந்தேகத்தில் அவன் வண்டியை நெருங்கி ஒவ்வொரு பெட்டியாக ஜன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டே வந்தான். ஒரு பெட்டியண்டை வந்ததும் சற்று நிதானித்தான். பிறகு அருகில் நெருங்கி நன்றாகக் கவனித்தான்.

உள்ளே ஜன்னல் ஓரமாக உட்காரும் பலகையில் ஒரு தோல் பை கிடந்தது. அது தேவநாதன் பெரும்பாலும் கையில் வைத்திருப்பது போல இருந்ததால் எடுத்துப் பார்த்தான். அவன் யூகம் சரிதான். பையில் தேவநாதனின் 'பெயர் கார்டு' செருகி வைக்கப்பட்டிருந்தது. பையின் அருகில் இரண்டு மூன்று ஆங்கில நாவல்களும், எழுதுவதற்காகக் கிழித்து வைக்கப்பட்டிருந்த சில காகிதங்களும் கிடந்தன. வீரராகவன் எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு அந்த வண்டியிலிருந்த மற்றவர்களை விசாரித்தான். நீண்ட நேரமாக அவை அந்த இடத்தில் தனியாகவே கிடப்பதாக அவர்கள் கூறினர். புத்தகங்களையும், காகிதத் துண்டுகளையும் புரட்டிப் புரட்டிப் பார்த்த போது ஒரு காகிதத்தில் நான்கு ஐந்து வரிகள் எழுதப்பட்டிருப்பதைக் கண்டு வீரராகவன் பரபரப்புடன் படித்தான். கீழ்க்கண்டவாறு அதில் எழுதப்பட்டிருந்தன......

"......வாழ்க்கையின் தொல்லைகளையும், இன்னல்களையும் எதிர்த்துப் போராடச் சக்தியற்ற காரணத்தால் நான் தற்கொலை செய்து கொள்வதென்று நிர்மானித்து விட்டேன்......"

வீரராகவனுக்கு விஷயம் தெளிவாகி விட்டது. தேவநாதன் ரயிலிலிருந்து குதித்துத் தற்கொலை செய்து கொண்டு விட்டார் என்பதற்கு இதை விட வேறென்ன ஆதாரம் வேண்டும்.

அவனுக்குத் தன் முன்னால் நிற்கும் ரயில், பிளாட்பாரம் எல்லாம் தலைகீழாகச் சுற்றுவது போலிருந்தது. வீட்டில் நிறைந்து நிற்கும் கோலாகலம் இந்தச் செய்தியைக் கேள்விப்பட்டவுடன் என்ன ஆகும் என்பதை நினைக்கவும் வீரராகவனின் உள்ளம் பொருமியது. சீதாவின் உள்ளம் இந்தச் செய்தியினால் என்ன பாடுபடும் என்பதைக் கற்பனை செய்யக்கூட அவனுக்குப் பயமாக இருந்தது.

கைக்குக்கிடைத்த தேவநாதனின் அந்தப் பொருள்களுடன் வீட்டுக்குத் திரும்புவதைத் தவிர அவனால் வேறென்ன தான் செய்ய முடியும்!......

★

"ரயில்வே போலீசுக்குத் தகவல் கொடுத்துத் தேடச் செல்வோமா!" என்றார் அடுத்த வீட்டுப் பெரிய மனிதர் ஒருவர்.

"பொதுவாகப் போலீசுக்குத் தகவல் கொடுத்து வைப்பது நல்லது" என்றார் இன்னொருவர்.

"போலீஸ் விவகாரம் பிறகு இருக்கட்டும். யாராவது ஒருவர் புறப்பட்டுச் சென்னைக்குப் போய் மாப்பிள்ளையின் பத்திரிகாலயத்தில் விசாரிக்கச் சொல்லுங்கள். உண்மையாகவே அவர் வாழ்க்கையில் வெறுப்புற்று விட்டாரா என்பதை முதலில் புரிந்து கொள்ள வேண்டும்." இது மற்றொரு பிரமுகரின் ஆலோசனை.

"அந்தக் கடிதத்தின் கையெழுத்து மாப்பிள்ளையினுடையதுதானா என்று பாருங்கள். ஒரு வேளை யாராவது அவருடைய விரோதி அவரை ரயிலிலிருந்து தள்ளி விட்டுப் போலீஸ் கண்ணில் மிளகாய்ப் பொடி தூவ இப்படி ஒரு கடிதம் தயாரித்து இருக்கப் போகிறான்......"

சாம்பசிவ முதலியார் வீட்டில் அதற்குள் உற்றார் உறவினர் நண்பர்கள் கூட்டம் பெருத்துவிட்டது. செய்தியைக் கேள்விப்பட்டு எல்லோரும் துக்கம் விசாரிக்க வந்து கூடியதோடு, தங்கள் தங்கள் மனதில் படும் ஆலோசனைகளையும் அனுதாபத்தோடு சொல்லி வைத்தனர்.

சாம்பசிவ முதலியாரின் காதில் எதுவும் விழவில்லை. இடிந்து போய்த் தலையில் கை வைத்துக் கொண்டு உட்கார்ந்தவர்தான். அப்படியே சிலையாகச் சமைந்து விட்டார். உள்ளே சீதாவின்

அழுகை சிறு ஒலியாக அடங்கி ஒலித்துக்கொண்டிருந்தது. ராஜம்மாள் மகளைப் பார்த்துப் பார்த்து ஏக்கப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தாள். வீரராகவன் ஹாலின் ஒரு மூலையில் நிலத்தை அளப்பவன்போல நிம்மதியிழந்து உலாவிக் கொண்டிருந்தான்.

''முதலியார்வாள்! இப்படியே எல்லாம் கட்டிக் காத்திருந்தால் எப்படி! நடந்தது நடந்துபோய் விட்டது. அன்று பிரமன் எழுதியதை யாரும் அழித்து எழுத முடியாது. நடக்கிறது எப்போதும் நடக்கும். கொஞ்சம் மனசைத் திடப்படுத்திக் கொண்டு மேற்கொண்டு நடக்க வேண்டியதைப் பற்றி யோசியுங்கள்'' என்று அங்கே பரவியிருந்த பயங்கர அமைதியை ஒரு முடிவுக்குக் கொண்டு வரும் முயற்சியில் ஈடுபட்டார் ஒருவர்.

இந்தச் சமயத்தில் ஒரு அழகான மோட்டார் வீட்டு வாசலில் வந்து நிற்கவே ஏக காலத்தில் எல்லோருடைய கண்களும் அப் பக்கம் திரும்பின.

''போலீஸ் அதிகாரிகளாக இருக்கும். விஷயம் தெரிந்து விசாரிக்க வந்திருக்கிறார்கள் போலிருக்கிறது'' என்று ஒருவர் மெல்லக் குரல் கொடுத்தார்.

''நான் அப்பவே சொன்னேன். இந்த மாதிரித் தகராறுகளை எல்லாம் முதலில் போலீஸில் தெரிவித்துவிட வேண்டும். இப்போ அவர்கள் வீணுகக் கேள்விகள் போட்டு வெந்த புண்ணில் வேலைச் செருகப் போகிறார்கள்'' என்று வேறொருவர் வேதனையுடன் முனகினர்.

ஆனல் அங்கிருந்த எல்லோருமே திடுக்கிடும்படியான ஒரு சம்பவம் நிகழ்ந்தது. மோட்டார் கதவைத் திறந்துகொண்டு மாப்பிள்ளை தேவநாதன் புன்னகை தவழும் முகத்துடன் கீழே இறங்கினர்.

''அட......மாப்பிள்ளை......'' என்று எல்லோரும் வியப்புத் தாங்கமாட்டாமல் ஏக காலத்தில் கூச்சல் போட்டு விட்டனர்.

''அ.......ஆ......'' என்று சாம்பசிவ முதலியார் ஒரு துள்ளுத் துள்ளி எழுந்தார்.

வீரராகவன் நடப்பது கனவு அல்ல என்று நிச்சயிக்கும் முயற்சியில் ஈடுபட்டான்.

ராஜம்மாளுக்கு என்னசெய்வதென்றே தோன்றவில்லை. பொங்கி யெழும் பூரிப்புடன் மகளைக் கட்டிக் கொண்டாள்.

சீதாவைப் பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை.

தேவநாதன் மாமனாரை அடக்கத்துடன் வணங்கிவிட்டு அமர்ந்தார். அங்கே குழுமியிருந்த கூட்டத்தைப் பார்த்ததும் ''ஏதோ விசேஷம் போலிருக்கிறது. நல்ல சமயத்தில்தான் வந்திருக்கிறேன்'' என்றார் புன்னகையுடன்.

''நீங்க ஏன் ரயிலில் வரவில்லை'' என்று அவசர அவசரமாகக் கேட்டார் வந்திருந்த பிரமுகர்களில் ஒருவர். மற்ற எல்லோருடைய முகங்களும் மாப்பிள்ளையின் முகத்தை நோக்கின, அவர் சொல்லஇருக்கும் பதிலை எதிர்பார்த்து.

''டிக்கெட் கூட வாங்கி விட்டேன். என்னுடைய தோல் பையையும் புத்தகங்களையும் ரயிலில் வைத்துவிட்டுக் கொஞ்சம் நல்ல காப்பியாகச் சாப்பிட்டுவிட்டு வருவோம் என்று ஹோட்டலுக்குப் போனேன். ரயில் அவ்வளவு சீக்கிரம் புறப்பட்டு விடும் என்று எதிர்பார்க்கவில்லை. நான் ரயிலை நோக்கி வேகமாக வருவதற்குள்ளாகவே ரயில் நகர்ந்து விட்டது. ஓடும் ரயிலில் ஏறி உயிரை விட முடியுமா! அப்புறம் நண்பர் ஒருவரின் மோட்டாரில் இங்கு புறப்பட்டு வந்தேன்'' என்றார் தேவநாதன்.

''...அப்போ...இந்தக் கடிதம்!'' என்று பரபரப்புடன் கொண்டுவந்து நீட்டினன் வீரராகவன்.

''ஓ...இது எப்படி உங்களுக்குக் கிடைத்தது! இது என் கதா நாயகனின் கடிதம்,..பெரும்பாலும் ரயில் பிரயாணத்தின் போதுதான் நான் கதைகள் எழுதுவது வழக்கம். இந்தக் காகிதத்தில் நான் கதையை ஆரம்பித்தேன். காப்பி சாப்பிட்டுவிட்டு மேற்கொண்டு எழுதலாம் என்று எண்ணியிருந்தேன்...''

''நல்ல மாப்பிள்ளை ஸார்......நீங்க... ஒரேயடியாக எங்களைப் பயமுறுத்தி விட்டீர்களே...'' என்று வாயெல்லாம் பல்லாக காலையிலிருந்து நிகழ்ந்த விஷயங்களை விவரித்தார் ஒரு பெரியவர்.

''ஓ...ரொம்ப வேடிக்கையாக இருக்கிறதே விஷயம்! என் கதைகளைவிட அபாரமாய் இருக்கிறதே!'' என்று சிரித்தார் கதாசிரியர் தேவநாதன்.

# உழைப்பும் ஊதியமும்

ஆகஸ்டு மாதம் 23-ம் தேதி கல்கி இதழில் வெளிவந்திருந்த தங்களுடைய ''கவர்னர் மகன் கூலிவேலை செய்கிறான்!'' என்ற கட்டுரையையும், செப்டம்பர் 6-ம் தேதி இதழில் பிரசுரமாயுள்ள ''புத்துணர்ச்சி பெற்றேன்!'' என்று அமெரிக்க மாணவரும் வியக்கும் வண்ணம் மார்க்குகள் வாங்கிய கேயரின் கடிதத்தையும் படித்தேன்.

அமெரிக்காவில் கவர்னர் போன்ற செல்வவந்தர்களின் புதல்வர்களும்கூடத் தங்களது கல்விக்கான செலவுப் பணத்தைத் தங்கள் உடல் உழைப்பின் மூலம் தேடிக் கொள்வதைக் குறிப்பிட்டு, இந்திய மாணவர் உடலுழைப்பின் உயர்வை உணரவில்லையே என்று குறிப்பிட்டிருக்கிறீர்கள். உடலுழைப்பு தாழ்ந்த தன்மையது என்றும், உயர் கல்வி கற்கும் மாணவரின் கௌரவத்தைக் குறைப்பது என்றும் கருதும் ''கற்றறி மூடரின்'' கூட்டத்தைச் சேர்ந்தவன் நான் அல்லனாயினும், இன்றைய இந்தியாவின் நிலையை நோக்கு மிடத்து, உயர்கல்வி கற்கும் செல்வவந்தரான மாணவர்கள் உடலுழைப்பால் ஊதியம் பெறுவது இன்றியமையாததா! அது நாட்டுக்கு நன்மை பயக்கற்பாலதோ! என்ற ஐயப்பாடுகள் எழுகின்றன.

வேலையில்லாத் திண்டாட்டம் என்ற காரிருள் சூழ்ந்து கொண்டுள்ள நம் நாட்டிலே பத்திரிகை விற்றல், குழி தோண்டுதல் போன்ற உடல் உழைப்பு வேலைகளே மாணவர்கள் செய்யலாம் என்று உரைத்திருக்கின்றீர்கள். மேலே கண்டுள்ளன போன்ற உடல் உழைப்பு மாத்திரமே தேவையான தொழில்களைச் செய்யக் கல்வியறிவு வேண்டியதில்லை. கண் எனத் தரும் கல்வி பெறும் வாய்ப்பு அற்ற ஆயிரக்கணக்கான ஏழைச் சிறுவர்கள் அத்தகைய தொழில்களையே தங்களது வயிற்றை நிரப்பும் வழியாகக் கொண்டுள்ளனர். அவர்களால் கல்வியறிவைப் பயன் படுத்த வேண்டிய பல்வேறு தொழில்களைச் செய்ய இயலாது.

அமெரிக்காவிலே உடல் உழைப்பால் பெற்ற ஊதியத்தைக் கொண்டு ''நல்ல புஷ்டி தரும் ஆகாரங்களைச் சாப்பிட்ட'' நமது சக-கேயரின் உதாரணத்தைப் பின் பற்றி, இந்திய மாணவர் அனைவரும் உடல் உழைப்பிலே தீவிரமாக இறங்கி விட்டால், ஆயிரக் கணக்கான, கல்வியறிவு அற்ற

வேறு தொழில்களில் ஈடுபட இயலாத சிறுவர்களை யும், மக்களையும் அது பாதிக்காதா !

அமெரிக்காவின் நிலைமையும், இந்திய நிலைமை யும், முற்றிலும் மாறுபட்டு இருக்கின்றன. உடல் உழைப்பால் ஊதியம் பெறுவதன் மூலம் அமெ ரிக்க மாணவர் எவருக்கும் நேரடியாகவோ, மறை முகமாகவோ தீங்கு இழைக்கவில்லை; ஏன் எனில் அங்கு வேலையில்லாத் திண்டாட்டம் என்ற பேய் தலைவிரித்து ஆடவில்லை. ஆனால் இன்று நம் நாட் டிலே தனது தகப்பனின் ஊதியத்தைக் கொண்டே கல்வி கற்க வசதி உள்ள மாணவன் ஒருவன், பத்தி ரிகை விற்பதன் மூலமாகவோ அன்றி அது போன்ற தொழில்களில் ஈடுபட்டோ ஊதியம் பெறுவானே யாகில், அவன் கல்வியறிவு அற்ற ஏழைச் சிறுவன் ஒருவனின் வாயினின்று உண வைப் பறித்து உண்ட பாவத்தைச் செய்தவன் ஆக மாட்டானு !

பிறர்க்குத் துன்பம் ஏற்படா வண்ணம் உடல் உழைப்பின் உயர்வை அறிய அவாவுறும் மாண வர்கள், ரசாயன தூானர்ஸ் வகுப்பு மாணவர்கள் ஆகிய எங்கள் உதாரணத்தைப் பின்பற்றலாம். நாங்கள் (சுமார் 30 பேர்) பூஜ்யர் ஹூர்து வெதெ னப்பள்ளி அவர்களின் கருத்தின்படி எங்கள் கல் லூரியின் அருகில் உள்ள பெரிய மைதானத்தை நல்லதொரு தோட்டமாக்கி, காய்கறிகளைப் பயிர் செய்து, அவற்றை ஏழை அட்டெண்டர்களுக்கு அளித்து வருகிறோம். முதலிலே மண் வெட்டி பிடித்து வெட்டியபோது கையிலே கொப்பு ளங்கள் உண்டாகி வலியெடுத்த போதிலும், நாங்கள் பயிர் செய்த செடியிலே காய்த்துத் தொங்கும் காய் கனிகளைக் கண்டவுடன் வலி யெல்லாம் மறந்து, மகிழ்வு எய்துகிறோம். அடுத்த ஆண்டும் ஏதேனும் தானியங்கள் பயிரிடலாம் என்றும் எண்ணியுள்ளோம்.

இங்ஙனம் உடல் உழைப்பின் பெருமையை அறிந்து பாடுபட வேண்டியது அவசியமாயினும், நமது உற்சாகம், ஊதியம் பெறும் அளவுக்குச் சென்று ஏழைகளை வேலை யற்றவர்களாகச் செய்தல் கூடாது, என்பதுதான் என்னுடைய தாழ்மையான எண்ணம். குணம் நாடி, குற்றம் நாடி, மிகைநாடி மிக்க கொள்வோம்.

மாதுரை — வெ. கிருஷ்ணசுவாமி
1-10-53

[மாணவர்கள் உடல் உழைப்பின் சிறப்பை உணர்ந்து ஏதேனும் வேலை செய்வதுதான் முக் கியமானது. வசதி உள்ளவர்கள் தங்கள் உழைப் பின் பயனை மற்றவர்களுக்குத் தாராளமாக அளிக்கலாம். ஆனால் இந்நாட்டு மாணுக்கர்களில் ஏழைப் பெற்றோர்களின் பிள்ளைகள்தான் பெரும் பான்மையோர். அவர்கள் உடலுழைப்பினுல் சம்பாதிக்கும் ஊதியத்தைத் தங்கள் கல்விக்குப் பயன்படுத்தச் செய்வதில் தவறு ஒன்றுமில்லை. இந்த மாணவ நேயரின் வாதத்தின்படி, பணக் காரர்களின் குமாரர்கள் படித்துப் பட்டம் பெற்ற பிறகும் உத்தியோகங்களைத் தேடிப் போகக் கூடாது. அப்படிப் போவதால் படித்த ஏழை இளைஞர்களின் ஜீவனோபாயத்தைப் பறிப்பவர்கள் ஆகிறார்கள் அல்லவா ! தொழிலாளிகள் ஒரு தனி வகுப்பினர், படிப்பாளிகள் ஒரு தனி இனத்தினர் என்ற பிரிவினை உணர்ச்சியே நம் நாட்டைவிட்டுப் போக வேண்டும். இதற்குப் படிக்கும் மாணுக் கர்கள் ஊதியத்துடனே, ஊதியமில்லாமலோ உட லுழைப்பில் ஈடுபடுவது இன்றியமையாதது என் பதை மீண்டும் வலியுறுத்துகிறோம். — ஆசிரியர்.]

# படித்துப் பருங்கள்!

## பெரும் பெயர் முருகன்

முத்தமிழ்க் கடவுளான முருகப் பெருமானின் புகழ் பற்றிக் கூறும் நூல்கள் பல இருக்கின்றன.

சங்க கால இலக்கியங்களிலேயே முருகனைப் பற்றிக் கூறும் நூல்கள் உண்டு. பரிபாடல் என்னும் பழைய நூலில் முருகனைப் பற்றிக் கடுவன் இளவெயினனுர் என்னும் புலவர் பாடி யிருக்கிறார். அதைப் பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரை இந்நூலில் காணப்படுகிறது. திருப்புகழ், கந்தர் அலங்காரம், கந்தர் அநுபூதி முதலிய நூல்களி லிருந்து சில பாடல்களுக்கு ஆராய்ச்சி முறையில் விளக்கம் தரப்பட்டிருக்கிறது.

பூனு, பம்பாய், வங்காளம் முதலிய பிரதேசங் களில் முருகன் வழிபாடு எம்முறையில் நடத்தப் பட்டு வருகிறது என்பது "வடநாட்டு முருகன்" என்னும் கட்டுரையில் மிகவும் சுவையுடன் கூறப்பட்டிருக்கிறது.

இயற்றியவர்: கி. வா. ஜகந்நாதன்; அமுத நிலை யம், தேனும்பேட்டை, சென்னை-18. விலை: ரூ. 3.

## கன்னிகாதானம்

உலகம் அறியாத மாணவன், ஒரு பெண்ணை மணந்தான்; பெண்ணுள்ளத்தைப் புரிந்து கொள்ள முடியாத நிலையில் இருந்த அவன் கடைசியில் எந்த நிலைக்கு வந்தான் என்பதுதான் இந் நாவலின் சாராம்சம். விசுவரூபமெடுத்த அவ னுடைய உணர்ச்சிகள் அவனை எப்படி எப்படி யெல்லாம் ஆட்டி வைத்தன என்பது இக்கதை யில் நன்கு விளக்கப்படுகிறது.

எழுதியவர்: பி. எம். கண்ணன்; கலைமகள் காரியாலயம், மயிலாப்பூர், சென்னை; விலை: ரூ. 3-8.

## காந்தி அஞ்சலி

"விருப்பற்று வேகும்போது விலைவிட்டும் வினைபோக்
தாழுற்றும் புதிய வாழ்வை நாடுகின்ற நாளிலே
பாழுமிக்கச் சேவைவிட்டுப் பதவிமோகம் பற்றிடும்
கேடு வந்த சர்க்கரை கிழவர் காந்தி சுக்குறாய்"

பொருள் பொதிந்த, ஓசை நிறைந்த இந்தக் கவிதை நம் ஆஸ்தான கவி நாமக்கல் ராமலிங்கம் பிள்ளை யவர்கள் இயற்றியது. உலகம் போற்றும் உத்தமரான காந்தி மகானை இதுபோன்ற இன்னு மெத்தனையோ பாடல்களால் கவிஞர் பாடிப் பரவியிருக்கிறார். அக் கவிதைகள் இந்நூலில் இடம் பெற்றிருக்கின்றன.

இந்த நூலின் பிற்பகுதியில் ஆதி சங்கரர் அருளிய பஜ கோவிந்தம் தமிழ்க் கவிதையாக மொழிபெயர்க்கப் பட்டிருக்கிறது. மேலும், பகவத் கீதையிலிருந்து சாங்கிய யோகம் தமிழ்க் கவிதையில் இயற்றப்பட்டு இந்நூலில் சேர்க்கப் பட்டிருக்கிறது. நாமக்கல் கவிஞர் இனிய, எளிய கவிதைகள் மூலம் தமிழ் மக்களின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டவர்; அத்தகையவர் இயற் றிய கவிதைகள் சொல்லிலும் பொருளிலும் சுவை மிகுந்து விளங்குவதில் வியப்பில்லைதானே !

பிரசுரம்: கவிஞர் பதிப்பகம், கோயமுத்தூர்; விலை: 1—4—0.



## பூட்டுகளில்' மிகுந்த வலியினால் நான் முடமாக்கப் பட்டிருந்தேன் — இப்பொழுது பரம சுகம்!

"க்ருஷன்" உபயோகித்ததனால் நான் அடைந்துள்ள அத்யாச்சரியமான பலன்களை நான் அவசியம் உங்களுக்குச் சொல்ல வேண்டும். வருஷக் கணக்காகக் கீல் வாதத்தினால் முடங்கிக் கிடந்தேன். பலதரப்பட்ட சிகிச்சைகள் செய்தும் நிரந்தரமான பலன் ஒன்றும் ஏற்படாது போயிற்று. ஆனால் மூன்று மாதங்களுக்குத் தவறாமல் ஒழுங்காக "க்ருஷன்" உட்கொண்ட பின்னர் அதன் உண்மையான குணங்களை உணர்வதுடன் ஏறக்குறைய எனது வியாதிக்கு முன்னிருந்த தன்மையையும் பெற்றிருக்கிறேன்.—A. R."

குடல்கள் நன்கு இயங்கி கழிவு பதார்த்தங்களைச் சரிவர வெளித்தள்ளத் தவறுவதால் விஷத் தன்மை வாய்ந்த அசுத்தங்கள் உள்ளேயே தங்கிவிடுகின்றன. இவைகளே கீல்வாய்வுக்குச் சாதாரணமான காரணம். க்ருஷனிலுள்ள ஆறுவித உப்புக்கள், இவ்விஷப் பொருள்கள் நன்கு வெளியேற்றப்படுமாறு உட்புற அவயவங்களைச் சரிவர இயங்கச் செய்ய உதவுகிறது. தினசரி க்ருஷன் உட்கொள்ளுவது உங்களது குடல்களை ஒரே நிதானத்துடன் இயங்கச் செய்கிறது. இதைத் தொடர்ந்து உட்கொள்ளுங்கள்; கீல் வாயு ஒருபோதும் திரும்பி வராது.

**"க்ருஷன்"** உங்களது ஆரோக்கியத்திற்கும் ஆனந்தத்திற்கும் உதவுகிறது

---

KSA—1

# மல்லிகாவின் மறுமலர்ச்சி

அநுத்தமா

மல்லிகா தயங்கிக் கொண்டே தன் கணவனை நாடினாள். எல்லா வேலைகளும் முடிந்து விட்டன. கணவன் முன் பக்கத்து ஹாலில் உட்கார்ந்து கொண்டு புத்தகம் ஒன்றைப் படிப்பதில் முனைந்திருந்தான். அவனை நெருங்கி, தான் கேட்க வந்ததை வெளியிட மிகவும் தயங்கினாள் மல்லிகா. வாயினின்று பேச்சு வர மறுத்தது. ராகவனும் புத்தகத்திலிருந்து கவனத்தை மாற்றவில்லை.

மல்லிகா அவன் அருகில் சென்று தோளின் மீது ஒரு விரலை லேசாக வைத்தாள். ராகவன் அவளை நிமிர்ந்து பார்த்தான்.

"இன்றைக்கு 'மூன்' டாக்கீஸில் புதிய படம் ஆரம்பமாம். சில தோழிகள் கூப்பிடுகிறார்கள். நான் போகட்டுமா?" என்று அவள் கேட்டுவிட்டு ராகவனின் முகம் அதிருப்தியுடன் மாறும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். தலை தூக்கவும் தைரியமின்றி மெல்லக் கண்களை உயர்த்திப் பார்த்தாள். ராகவன் சுவாரஸ்யமில்லாமல் "போய் விட்டு வாயேன்" என்றான்.

மல்லிகாவுக்குச் சந்தோஷம் கரை புரண்டு ஓடியது. தன் செவிகளையே நம்பாதவள் போல அவள் கண்களை அகல விரித்து நோக்கிக் கொண்டு அப்படியே நின்றாள்.

"உன்னிடம் பணம் இருக்கிறதா? இல்லாவிட்டால் கொடுக்கிறேன்" என்றான்.

"இருக்கிறது," என்று மட்டும் கூறிவிட்டு மல்லிகா வாசற் பக்கம் சென்றாள். அன்று என்ன புதுமை என்று வியந்தபடியே இருந்தது அவள் மனம்.

ராகவனுக்கு அவள் வெளியே போவதிலேயே அதிக இஷ்டம் கிடையாது. அதிலும் உற்சவ காலத்தில் கோவிலுக்கும், புதுப்பட ஆரம்ப தினத்தன்று சினிமாவுக்கும், மற்றும் எந்த நெருக்கமான கூட்டத்திலும் அவள் செல்வதை அவன் வெறுத்தான்.

"கூட்டம் குறைந்த பிறகு சினிமாவுக்குப் போனால் போதாதோ? நடிகர்கள் உடல் சோர்ந்துவிட மாட்டார்கள். முதல் நாள் இருந்த நடிப்புத்தான் கடைசி நாளும் இருக்கும்" என்று சொல்லுவான்.

கல்யாணமானது முதல் மல்லிகா பஸ்ஸில் ஏறிச் சென்றதே இல்லை. ஒரு தனி ரிக்ஷாவோ, குதிரை வண்டியோ, அமர்த்தி அதில்தான் ராகவன் அவளைக் கூட்டிச் செல்வான். இந்தக் கண்டிப்பினால்தானோ என்னவோ மல்லிகாவின் மனத்தில் பஸ்ஸில் ஒரு முறையாவது போக வேண்டும் என்றும் முதல் நாள் ஆட்டத்துக்கு விஜயம் செய்ய வேண்டும் என்றும் அவா பிறந்தது.

தோழிகள் அவளைப் பலவாறு கேலி செய்தனர். அவர்கள் அழைக்கவும் அவளுக்கும் சபலம் தட்டியது. அவனிடம் கேட்டாள். இன்று உடனே அனுமதி கிடைத்தது.

அவள் உள்ளத்தில் குடி கொண்டிருந்த உவகை முகத்தில் பிரதிபலித்தது போலும். அவளுடைய சினேகிதிகள் அதைப் பற்றிக் கேலி செய்தனர்.

"என்ன, மல்லிகா? உன் முகத்தில் என்றுமில்லாத தேஜஸ் பிரகாசிக்கிறது? அப்படிப்பட்ட ஆனந்த ரகசியம் என்ன? எங்களுக்குச் சொல்லக் கூடாதா? சீக்கிரத்திலேயே ஒரு குட்டிப் பாப்பாவைக் காணப் போகிறாயா? அப்படியிருந்தால் உன் கணவர் எங்கள் துணையை நம்பி விட்டிருக்க மாட்டாரே? தானே அல்லவா அடை காப்பார்?" என்று அவள் வாயைக் கிளறினார்கள்.

"போங்கள், உங்களுக்கு இப்படித்தான் ஏதாவது விசித்திரமான யோசனைகள் தோன்றும்!" என்றாள் மல்லிகா.

அதன் பிறகு அவர்கள் ஏதேதோ பேசிவிட்டு, பஸ் ஏறிச் சென்று சினிமாக் கொட்டகையை அடைந்தனர். சினிமாவைப் பார்த்து விட்டு அதைப் பற்றி விவரித்து வாதித்துக் கொண்டே திரும்பினர்.

"மல்லி, நான் என் மாமா வீட்டுக்குப் போக வேண்டும், நீயும் வருகிறாயா? இல்லாவிட்டால் இப்படியே வீட்டுக்குப் போகிறாயா?" என்று கமலா வினவினாள்.

மல்லிகாவுக்கு யோசனையாகிவிட்டது. முன் பின் தெரியாதவர்கள் வீட்டுக்குச் சென்றால் ராகவனுக்குப் பிடிக்காது. தனியாகப் பஸ்ஸில் செல்வதும் அவருக்குத் தெரிந்தால் ஆபத்து. அவள் சிறிது யோசனை செய்து விட்டுப் பிறகு கமலாவுக்கு விடை கொடுத்தாள்.

"கமலா நீ என்னுடன் பட்டாணித் தெரு வரை வருகிறாயா? அங்கே என் ஒன்றுவிட்ட நாத்தனார் ஒருத்தி இருக்கிறாள். அவளைப் பார்க்கிறாப்போலப் போய் அங்கிருந்து ரிக்ஷா வைத்துக் கொண்டு வீட்டுக்குப் போய்விடுகிறேன்" என்றாள் மல்லிகா.

"ஐயோ, இந்த இருபதாம் நூற்றாண்டில் உன்னைப் போல் நான் யாரையும் பார்க்கவில்லை" என்று கமலா கேலி செய்தாளே ஒழிய மல்லிகாவுக்குத் துணை வந்தாள்.

நாத்தனார் சாரதாவின் வீட்டு வாசலில் சினேகிதிகள் இருவரும் பிரிந்தனர். மல்லிகா கதவைத் தட்டினாள். சாரதா அவளைக் கண்டதும் மிக்க ஆச்சரியத்துடன் நோக்கினாள்,

"மன்னி, நீ எப்பொழுது வந்தாய்?" என்று கேட்டாள் சாரதா.

"இதோ, கதவை இடித்தேனே!" என்று பதிலளித்தாள் மல்லிகா.

"அதைக் கேட்கவில்லை. நீ ஊரில் இல்லை என்றல்லவா நான் கேள்விப்பட்டேன்—எப்



# மாதிரிப்

செப்டம்பர் மாதம் ஒன்பதாம் தேதியன்று ஸ்ரீ ராஜாஜி அவர்கள் வாலாஜாபாத் இந்து மத பாடசாலைக்கு விஜயம் செய்தார். ராஜாஜி அவர்களால் ஆரம்பிக்கப்பட்டுள்ள புது முறைக் கல்வித் திட்டம் வெகு காலத்துக்கு முன்பிருந்தே இந்து மத பாடசாலையில் அமுலில் இருந்து வருகிறது. ஸ்ரீ ராஜாஜி அவர்கள் மாணவர்களின் பல வகைப்பட்ட செயல்களையும் சிறிது நேரம் பார்வையிட்டார்.

தென்னிந்தியாவின் சிறந்த யாத்திரை ஸ்தலமாகிய காஞ்சிபுரத்தின் பக்கத்திலே, பாலாற்றங்கரையிலே பரந்த நிலப்பரப்பிலே பாடசாலை அமைந்துள்ளது. அதனோடு ஒரு மாணவர் இல்லம் உள்ளது. மாணவர் இல்லத்தின் சிறுவர்கள் 650 பேர் தங்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்களைத் தயார் செய்து கொள்ளுவதோடு, மற்றெல்லா வேலைகளையும் தாங்களே செய்து கொள்ளுகிறார்கள். பொத்தான் செய்தல், காகிதம் செய்தல், தறி வேலை, தையல் வேலை, அச்சு வேலை போன்ற பல தொழில்கள் பாடசாலையில் கற்பிக்கப் படுகின்றன. இது ஓர் முன்மாதிரியான பாடசாலையாக விளங்குகிறது. ஸ்ரீ ராஜாஜி அவர்கள் மாணவர் இல்லத்தைச் சுற்றிப் பார்வையிட்டு வருகையில், மாணவர்கள் ஒருவருக் கொருவர் தலைமயிர் வெட்டிக் கொள்ளுவதைப் பார்த்து மிகவும் மகிழ்ந்தார். பின்

---

பொழுது வந்தாய்?'' என்று சாரதா கேட்கவும் மல்லிகா விழித்தாள்.

"யார் அப்படி அபூர்வமாகக் கூறினார்கள்? நான் எங்குமே போகவில்லையே? உங்களை வந்து பார்க்க நாளாகி விட்டது என்பதற்காக அப்படிச் சொல்கிறீர்களாக்கும்!'' என்று சலுகையுடன் பேசினாள் மல்லிகா.

"உள்ளே வா, உன்னிடம் நான் பேச வேண்டும்'' என்று அழைத்தாள் சாரதா.

அப்பொழுது மாடியினின்று ஒரு குரல் கேட்டது. மல்லிகா திகைப்புடன் காத்தனை நோக்கினாள். ராகவனின் குரல் ஸ்பஷ்டமாகக் கேட்கவும் மல்லிகா சாரதாவிடம் வியப்புடன் பேசலானாள்.

"உங்கள் அண்ணா வந்திருக்கிறாரா? நீங்கள் சொல்லவே இல்லையே? நான் துணைக்குக் கவலைப்பட வேண்டாம். நல்லதாகப் போயிற்று! சற்று நேரம் நிம்மதியாகப் பேசிவிட்டுப் போகலாம்'' என்றாள் மல்லிகா.

"பேஷாகப் பேசிவிட்டுப் போ. ஆனால் இத்தனை நாட்களும் நீ ஊரிலேயே இருந்தாய் என்றா சொல்கிறாய்?'' என்று மீண்டும் கேட்டாள் சாரதா.

"என்ன, அக்கா? நான் உங்களிடம் பொய் சொல்லப் போகிறேனா?''

"அதற்கில்லை...'' என்று இழுத்து விட்டு மல்லிகாவைப் பார்த்தாள் சாரதா.

"என்ன?'' என்று கேட்டாள் மல்லிகா.

"உனக்கும் அண்ணாவுக்கும் ஒன்றும் மனஸ்தாபம் இல்லையே?'' என்று கேட்டு விட்டாள் சாரதா.

மல்லிகாவுக்குப் பீதி மேலிட்டது. அவள் சாரதாவைப் பார்த்தாள்.

"அண்ணாதான் சொன்னான், நீ ஊருக்குப் போயிருப்பதாக. அவன் ஆபீசுக்குப் போவது நின்றது முதல் இங்கேதானே வருகிறான்...''

"என்ன, உங்கள் அண்ணா ஆபீசுக்குப் போவதில்லையா? வேலையை விட்டு விட்டாரா? பின்னே தினமும் வேளைக்குச் சாப்பிட்டு விட்டு ஒழுங்காக உடை அணிந்து கொண்டு கடிகாரம் போல் கிளம்பிவிடுகிறாரே? மீண்டும் மாலையில் வீட்டுக்குச் சரியான சமயத்தில் திரும்பி வந்து விடுகிறார். என்னை எங்கும் போகக்கூடாது என்று கட்டுப்படுத்தி விட்டுத் தான்மட்டும் ... பேஷ் ... நான் போய்க் கேட்கிறேன். இங்கே வந்ததும் நல்லதாய்ப் போயிற்று'' என்று மல்லிகா படபடத்தாள்.

"பொறு, மல்லிகா, பொறு! அவசரத்தினால் ஒரு காரியமும் வெற்றி பெறாது. அவன் வேலையை விட்டு விட்டு, உன்னிடம் பொய்யைச் சொல்லிக் கொண்டு, வேறு எங்கும் போய்விடவில்லை. கணவன் ஏதாவது தவறு செய்து விட்டதாகவே இருக்கட்டுமே! அதைச் சண்டையினால் திருத்திவிட முடியாது என்பதை நினைவில் வைத்துக் கொள். நான் சொல்வதைச் சொல்லி விடுகிறேன். பிறகு உன் பாடு'' என்றாள் சாரதா.

# பாடசாலை

ளர் மாணவர்கள் செய்து காட்டிய யோகாசனங்களும், பல மாதிரி விளையாட்டுகளும் அவரைப் பெரிதும் மகிழ்வித்தன.

ஸ்ரீ மாலிமாமணி முதலியாரும் பாடசாலையின் மற்ற உறுப்பினர்களும் ஸ்ரீ ராஜாஜியை வரவேற்று, பாடசாலை, மாணவர் இல்லம், தொழிற்சாலை ஆகியவைகளின் பல பிரிவுகளையும் காண்பித்தனர். பாடசாலையில் கல்வி கற்பித்ததோடு மாணவர்கள் தொழிலின் மேன்மையை உணர்ந்து கைத் தொழிலில் பயிற்சி பெற வேண்டுமென்ற நோக்கத்துடன் பாடத்திட்டம் அமைக்கப்பட்டுள்ள முறைகளைப் பார்த்து வியந்த ராஜாஜி அவர்கள், "உங்கள் பள்ளியைப் பார்த்து அளவிலாத மகிழ்ச்சியடைந்தேன். தாங்கள் செய்து வரும் வேலையையும் தங்களுடைய திறமையையும் பார்த்து, நான் வியந்து வியந்து இதை எழுதுகிறேன். ஆண்டவன் நம் நாட்டுக்குத் தங்களைப் போல் இன்னும் சிலரைத் தரலாகாதா!" என்று திரு மாலிமாமணி முதலியாருக்கு எழுதியிருக்கிறார்.



ராஜாஜி அவர்கள் மாணவர்கள் செய்யும் தொழிலைக் கூர்ந்து கவனிப்பதையும், ஸ்ரீ மாலிமாமணி முதலியாரும் வாலாஜாபாத் இந்து மத பாடசாலையின் மற்ற உறுப்பினர்களும் மாணவர்களும் ராஜாஜியை மகிழ்ச்சியுடன் வரவேற்பதையும் இரண்டு பக்கங்களிலும் உள்ள படங்களில் காணலாம்.

---

மல்லிகா ஆவேசத்துடன் எழுந்தாள். பிறகு ஏதோ தோன்றி அமைதியானாள்.

"அண்ணாவுக்குப் பதவி உயர்வு வந்ததல்லவா?" என்று ஆரம்பித்தாள் சாரதா.

"உயர்வா?" என்று கேட்டாள் மல்லிகா.

"நன்றாகத்தான் இருக்கிறது, போ! உனக்கு ஒன்றுமே தெரியாதா? நீ பேசுவதைக் கண்டாலே எனக்குப் பயமாக இருக்கிறதே, மல்லி?" என்று கூறினாள் சாரதா.

"சொல்லுங்கள் மிகுதியையும். அடையப் போகும் ஆச்சரியம் அவ்வளவையும் ஒரேயடியாக அடைந்து விடுகிறேன்" என்று சூனியமான குரலில் பேசினாள் மல்லிகா.

அவனை உயர்த்தி விட்டார்கள். அந்த விஷயம் சேர்ந்து பதினைந்து நாளாகிறது. வெளியூருக்கு மாற்றி விடுவார்களாம். அது வரை ஒரு மாதம் ரஜா கொடுத்தார்களாம். தினமும் பகலில் இங்கு வருகிறான். மாலை வரை இருக்கிறான், பிறகு போய்விடுகிறான். அதனால் நீ ஊரில் இல்லை என்று நினைத்தேன். அவன் வரத் தொடங்கியது முதல் குழந்தைகளுக்குக் கும்மாளம்தான்.

'இங்கே அவர்கள் அப்பா சொல்லுவார் - 'மல்லிகாவைப் பார், எப்படிக் குடித்தனம் செய்கிறாள்! எப்பொழுதும் வீட்டில் புத்தொளி வீசுகிறது, அலங்காரம் கொஞ்சுகிறது, ஏற்பாடு பரிமளிக்கிறது' என்று. என் குழந்தைகளை வைத்துக் கொண்டு நான் என்ன செய்தாலும் அவர் வீடு வரும்போது யுத்தகளமாகத்தான் இருக்கும். இந்தப் பத்து நாட்களாக மேலே வைத்தது வைத்தபடி இருக்கிறது. மாமா போகும்வரை அவர்கள் மேலே இறங்குவதே இல்லை" என்றாள் சாரதா.

மல்லிகா பதில் சொல்லவே இல்லை. சாரதா அவளைக் கவலையுடன் நோக்கினாள்.

"மல்லிகா, நீ அவனிடம் சண்டையே போடக் கூடாது. நான் கூறினேன் என்றும் சொல்லக் கூடாது. பிறகு அவன் எங்கள் மீது வைத்திருக்கும் பிரியமும் போய்விடும்" என்றாள் சாரதா.

"நீங்கள் கவலைப்படாதீர்கள், அக்கா. நான் ஒன்றும் கூறமாட்டேன்! நான் வீட்டுக்குப் போகிறேன். ஒரு ரிக்ஷா அமர்த்திக் கொடுங்கள்" என்றாள் மல்லிகா நிதானமாக.

சாரதா உடனே எழுந்து சில அறைகளைப் பூட்டிக் கொண்டு மாடிப் படியில் ஏறினாள்.

"உங்கள் அண்ணாவுக்கு நான் வந்தது தெரிய வேண்டாம்!" என்றாள் மல்லிகா, சாரதா மாடி ஏறுவதைப் பார்த்து.

"சரி" என்று கண்களால் சைகை காட்டி விட்டு மாடி ஏறிய சாரதா மீண்டும் இறங்கி வந்து மல்லிகாவை அழைத்தாள்.

"நீ மெதுவாக ஏறி வந்து இந்த ஜன்னல் இடுக்கில் பாரேன்!" என்று காட்டினாள் சாரதா பெருமையுடன்.

மல்லிகா வந்து எட்டிப் பார்த்தாள்.

குழந்தைகளுடன் அவன் உற்சாகமாக விளையாடிக் கொண்டிருந்ததைப் பார்த்தாள்.



திருச்சி 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' நிருபர் ஸ்ரீ டி. எஸ். ரங்காச்சாரியாரின் குமாரத்தி சௌ. ஸ்ரீரங்கநாயகிக்கும் சிதம்பரம் வக்கீல் ஸ்ரீ வி ஆர். கிருஷ்ணமாச்சாரியாரின் குமாரர் ஸ்ரீ வி. கே. வெங்கடராகவன் பி. ஏ. பி. எல். – க்கும் 10–9–53-ல் ஸ்ரீரங்கத்தில் திருமணம் வெகு விமரிசையாக நடைபெற்றது. திருமணத்துக்குத் திருச்சி, ஸ்ரீரங்கம் பிரமுகர்களும், நண்பர்களும், உறவினர்களும் விஜயம் செய்திருந்தனர். தம்பதிகளுக்குச் சென்னை ராஜ்ய கவர்னர், விந்தியப் பிரதேச லெப்டினண்ட் கவர்னர், முதன் மந்திரி ராஜாஜி போன்ற ஏராளமான பிரமுகர்களிடமிருந்து ஆசிச்செய்திகள் வந்திருந்தன. திருமண வைபவத்தில் அய்யம் பேட்டை வேணுகோபால் கோஷ்டியாரின் நாதஸ்வரமும், தஞ்சாவூர் ஸ்ரீ லக்ஷ்மி நாராயணன் கோஷ்டியாரின் சங்கீதக் கச்சேரியும் சிறப்பாக நடைபெற்றன.

முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள் மல்லிகா. சாரதா பரிவுடன் அவள் முதுகில் கையைப் போட்டாள்.

"மன்னி, வருத்தப்படாதே. கடவுள் கொடுப்பார். கல்யாணமாகி அப்படி என்ன ஆகிவிட்டது?" என்றாள் சாரதா.

மல்லிகாவின் முகம் சுளித்தது.

"என்னை வண்டி ஏற்றிவிடுங்கள்" என்றாள்.

சாரதா அண்ணனிடம் ஏதோ சொல்லி விட்டு வந்து வாசலை வெளிப் பக்கம் பூட்டிக் கொண்டு மல்லிகாவுடன் கிளம்பினாள்.

"மன்னி, உனக்கும் அண்ணாவுக்கும் ஒன்றும் மனஸ்தாபமில்லை யென்று சொல்கிறாய்!" என்று அவள் சொல்லுவதை நம்பாதவள் போல மீண்டும் கேட்டாள் சாரதா.

"அப்படி இருந்திருந்தால் எனக்கு அவர் போக்குக்குக் காரணம் தெரிந்து விடுமே? இதற்கு முன்னாலாவது சில்லறைச் சச்சரவுகள் இருக்கும். இப்பொழுது பதினைந்து நாட்களுக்குமேல் ஆகிவிட்டது. அவர் மிகவும் அன்பாகவும், ஆதரவாகவும், என் விருப்பத்தைப் பேணுபவராகவும் இருக்கிறார். இன்று பாருங்கள்—சினிமாவுக்கு முதல் ஆட்டத்துக்குப் போகிறேன் என்றேன். உடனே சம்மதித்து விட்டார். அமைதியாக இருக்கிறது எங்கள் குடும்பம்" என்றாள் மல்லிகா.

"பயங்கர அமைதி அது! எங்கள் மண வாழ்க்கையில் எப்படி என்றால்......" என்று கூறி நிறுத்திவிட்டுச் சிரித்தாள் சாரதா. மீண்டும் துவக்கினாள்...... "எங்கள் மண வாழ்க்கையில் எப்படி என்றால் என்றாவது நாங்கள் இருவரும் எதற்காவது கொஞ்சம் வாதிக்காமல் இருந்து விட்டோமோ, அன்று ஏதோ தகராறு என்று அர்த்தம். மல்லிகா, நெருக்கம் இருந்தால் சலுகையுடன் ஒருவரை ஒருவர் கண்டிப்பதுதான். அது என்று குறைகிறதோ, அன்று மரியாதை நடத்தை ஆரம்பமாகிறது. இன்பமும் குதூகலமும் ஓடி விடுகிறது" என்றாள் சாரதா.

மல்லிகாவுக்கு அவ் வுண்மை கசந்தது. அவள் ரிக்ஷாவில் ஏறி உட்கார்ந்தாள். 'போய்வருகிறேன்' என்றுகூடக் கூறவில்லை. வண்டி வைத்துக் கொடுத்ததற்கு நன்றியும் செலுத்தவில்லை. வேதனையில் மூழ்கி மூழ்கி மூச்சு முட்டித் திண்டாடினாள் அவள்.

வீட்டுக்குச் சென்றதும் இயந்திரம் போல் அவள் வேலைகளைச் செய்து வந்தாள். கணவன் ஆபீசிலிருந்து திரும்புவது போல் சரியான நேரத்துக்கு வீடு வந்தான். அவள் தினசரி உபசாரங்களை வழக்கத்தின் மீது ஏற்றுக் கொண்டான். அவள் வாடிய முகத்தை அவன் கவனிக்கவில்லை.

மல்லிகா மீண்டும் தன் வேலைகளைக் கவனிக்க உள்ளே போய் விட்டாள். தையல் மெஷினைத் திறந்து வைத்துக் கொண்டு தைக்க ஆரம்பித்தாள். விளக்கு வைத்த பிறகு தைப்பது கண்ணுக்குக் கெடுதல் என்று ராகவன் இன்று கூறவில்லை.

என்ன தவறு நடந்து விட்டது? எங்கே தவறி விட்டேன்? இங்கே அமைதியாக இருப்பவர் ஏன்......? ஆயினும் அவர் மனம் நம் வீட்டை விட்டு வேறு வீட்டின் நிழலை நாடிய காரணமென்ன? நான் என்ன தப்பு செய்தேன்? பேதை போல அவர் சினிமாவுக்கு அனுப்பியதை வெகு விசேஷமாக நினைத்துப் பெருமை கொண்டேனே? அதில் எவ்வளவு கொடூரம் நிறைந்திருக்கிறது என்று உணரவில்லை நான். தன் மனைவி மீது உசிதமற்ற காற்று கூடப் படக் கூடாது என்று எண்ணிய மனிதன் அவள் எங்கு வேண்டுமானாலும் எப்படி வேண்டுமானாலும் கெட்டுப் போகட்டும் என்பதைச் சிரித்த முகத்துடன் கூறிவிட்டாரே? வெளிச் சிரிப்பைக் கண்டு மயங்கிய முட்டாள் நான். உள்ளே இருந்த கசப்பை உணரவில்லை.

'நாம் இதற்கு முன் மனஸ்தாபப்பட்டது கூட எதற்கு? பணம் கொடுப்பதில்லை என்றேனா? புடவை வேண்டும் என்று கேட்டு அவர் மறுத்தாரா? அன்புப் பேச்சில்லை என்று ஏங்கினேனா? அல்லது அவர்தான் நான் செய்யும் பணிவிடைகளில் குறை கண்டாரா?

சமையலில் குற்றம் கூறினரா? என் தோற்றத்தில் விருப்பு காட்டவில்லையா? அதெல்லாம் ஒன்றுமில்லையே?'

'பின்னே என்னதான் அது?' திரும்பத் திரும்பச் சின்னச்சின்ன விஷயங்களுக்குத் தான் வாக்குவாதம் வரும். மல்லிகாவுக்கு வீட்டில் அதிக பிரமை. துடைத்துத் துடைத்துக் கண்ணாடி போல வைத்திருப்பாள். தன் உடைகளையும் சுத்தமாகத் தோய்த்து, கடுக் இல்லாமல் இஸ்திரி போட்டு, மடிப்புக் கலையாமல் உடுப்பாள். அதன் பொருட்டுச் சில சமயம் இருவருக்குமிடையே வாக்குவாதம் நேரும். ஞாயிற்றுக் கிழமை வந்து விட்டால் அக்கம் பக்கத்துக் குழந்தைகள் பத்து, பன்னிரண்டு ராகவனைச் சூழ்ந்து கொள்ளும். அப்பொழுது வீடு அமளிதுமளிதான். காப்பி குடித்த பாத்திரங்களில், மண்ணும் தண்ணீரும் வீடு நிறைய இறைந்து கிடக்கும்.

மல்லிகா யோசித்துக் கொண்டே தைத்தாள். ராகவனின் அத்தை, ஓர் அம்மாள் தன் பேரன் பேத்திகளுடன் வந்து ஒரு மாதம் இங்கிருந்து விட்டுப் பத்து நாட்களுக்கு முன் திரும்பிப் போனள். ஒரு மாத காலமும் மல்லிகாவுக்கு நரக வேதனையாக இருந்தது. அவள் தனிமையில் அமைதியாக இருக்க விருப்பமுடையவள். அக் குழந்தைகளோ வீட்டில் ரகளை செய்து கொண்டே இருந்தன.

அத்தை திரும்பிப் போன அன்று மல்லிகா அத்தைக்கு வணங்கினள்.

"பதினறும் பெற்று பெரு வாழ்வு வாழ வேண்டும்," என்று ஆசீர்வதித்தாள் அத்தை. மல்லிகா சிரித்தாள். "அப்படியெல்லாம் சபிக்காதீர்கள், அத்தை" என்றள் அவள். அப்பொழுது ராகவன் அருகில் தான் நின்று கொண்டிருந்தான். அவன் முகம் ஒரு விதமாக மாறி விட்டது.

மல்லிகா தையலை நிறுத்தி விட்டாள்.

'இதில் அவர் கோபம் கொள்ளும்படி ஒன்றும் இல்லையே?' என்று ஆராய்ந்தது அவள் மனம். அவளுக்குப் புரியவில்லை. சாரதாவின் வீட்டில் அவள் கண்ட காட்சி மறுபடியும் கண்முன்னே வந்து நின்றது.

கணவனைச் சாப்பிட அழைத்தாள் மல்லிகா. ராகவன் வந்து மௌனமாக உணவை முடித்துக் கொண்டான். மல்லிகா வெற்றிலைப் பாக்குத் தட்டைக் கொண்டு வந்து வைத்தாள். தினம் போல கணவன் அவளைக் கிழித்துத் தரும்படி கூறவில்லை. அவளைத் தடுப்பது போல சட்டென்றுதானே நான்கு வெற்றிலைகளைக் கிழித்துப் போட்டுக் கொண்டு விட்டுப் படுக்கையில் படுத்து விட்டான்.

மல்லிகா அவன் காலடியில் வந்து உட்கார்ந்தாள். அவன் கால்களை இரு கையாலும் பிடித்தாள். அதற்குள் அழுகை அவளை மீறி வந்தது. ராகவன் எழுந்து விட்டான்.

"ஏன், மல்லிகா, ஏன்?" என்று அவன் சற்றும் சலனமில்லாமல் கேட்டான்.

"நீங்கள் ஏன் பராமுகமாக மாறிவிட்டீர்கள்? என்னிடம் தவறு இருந்தால் நீங்கள் திருத்தக் கூடாதா? பதவி உயர்வு கிடைத்திருக்கிறதாம்—என்னிடம் சொல்லவில்லை. பத்து நாட்களுக்கு மேலாகிறதாம் நீங்கள் ஆபீசுக்குப் போய். என்னிடம் பொய் வேஷம் போடக் காரணமென்ன? நான் உங்கள் அன்புக்கும் அக்கரைக்கும் தகுதியற்றவளாகி விட்டேனு? ஒரு தவறும் நான் செய்ததாகத் தெரியவில்லையே?" என்று கூறி விக்கி விக்கி அழுதாள் மல்லிகா.

ராகவன் அவள் கைகளினின்று தன் கால்களை இழுத்துக் கொண்டான். சுவரைப் பார்த்துப் பேசினன்.

"அது போதாதா ஒரு மனிதனுக்கு? உன்னுடைய அலங்கார வீட்டில் அலங்கார புருஷன் வேண்டும் என்று நீ சிங்காரக் கனவு காண்கிறய். எனக்கு என்னுடையது என்று ஒரு வீடு வேண்டும். அதில் குழந்தை குட்டிகளுடன் சுதந்திரமாக வாழவேண்டும் என்று



தஞ்சை ஜில்லா நீடாமங்கலத்துக்கு அருகிலுள்ள அனுமந்தபுரம் என்னும் கிராமத்தில் ஸ்ரீ ரத்தினம் அய்யர் அவர்களால் நன்கொடையாக அளிக்கப் பட்ட கட்டிடத்தில் காந்தியடிகள் பிறந்த நாளாகிய அக்டோபர் 2-ம் தேதியன்று ஒரு புதிய பள்ளிக்கூடம் திறந்து வைக்கப் பட்டது. பயிர்த்தொழில் வேலை செய்யும் பண்ணை ஆட்களின் நூறு ஹரிஜன குடும்பத்தார்க்கு இந்தப் பள்ளிக்கூடம் கல்வி வசதி அளிக்கிறது. பள்ளிக்கூடத்தைத் திறந்து வைத்த திரு டி.எம். பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள் ராஜாஜியின் புதிய கல்வித் திட்டத்தின் அவசியத்தை விளக்கிக் கூறினர்கள். விழாவில் கலந்து கொண்ட ஹரிஜனங்களும், அவர்கள் குழந்தைகளும் பிரமுகர் ஸ்ரீ டி. எஸ். வெங்கட்ராமன் அவர்களையும் மேலே யுள்ள படத்தில் காணலாம்.



"தாண்டுகிற அனுமார் விலை ரொம்ப ஜாஸ்தியாகச் சொல்லுகிறீர்களே!"
"சாதாரணமாக நிற்கிற அனுமார் என்றால் நீங்கள் கேட்கிற விலைக்குக் கொடுக்கலாம், அவர் தாண்டுகிறாரே. அம்மா!"

---

தோன்றுகிறது. கடைசியில் உன் வீட்டில் அலங்காரமாக இருக்கத் தீர்மானித்து விட்டேன். என் அலங்கோலத்துக்கு ஏற்ற இடத்தை நாடுகிறது மனம். இது ஒரு தவறா!" என்றுகூடச் சடக் கேட்டு விட்டு அவன் ஜன்னல் அருகில் போய் நின்றான்.

மல்லிகா முகத்தைத் திருப்பிக்கொண்டாள். "நான் உங்களுக்கு என்ன சொல்லப் போகிறேன்? லட்சிய இல்லாளுக்கு வேண்டிய பொறுமையும், பிறர் சௌகர்யத்தையும் கவனித்து அறிந்து செய்யும் திறமையுமில்லாதவளாகி விட்டேன். என்னை விட்டு எங்கோ போகிறீர்கள், என்னிடம் உண்மையை ஒளித்துப் பேசுகிறீர்கள் என்று அறிந்ததும் என் உள்ளம் தத்தளிக்கிறது. என்றைக்காவது உங்கள் அன்பை நான் மீண்டும் பெறுவேனோ என்னவோ? ஒன்று மட்டும் கூறி விடுகிறேன். என்னிடம் நேரிடையாகக் கூறியிருந்தால், நான் திருந்தியிருக்க மாட்டேனா? அது தான் வருத்தமாக இருக்கிறது" என்று துயரத்துடன் கூறினாள் மல்லிகா.

"கட்டாயம் திருந்தியிருக்க மாட்டாய். எத்தனை நாட்கள் நாம் அதற்காக மனஸ்தாபப் பட்டுச் சண்டையிட்ட தில்லை? அப்பொழுது அது விபரீதமாகத் தோன்றவில்லை. இன்று நான் உன்னை விட்டுப் போய் விடுவேனோ என்றதும் உடனே புத்தி வந்து விட்டது" என்றான் ராகவன்.

"அதுவும் உண்மைதான். நான்கு பாத்திரங்களையும், மரச் சாமான்களையும், துணிமணிகளையும் ஒழுங்காக அமைத்து விட்டு, காலையில் எழுந்ததும் உங்களைப் பார்த்துச் சிரித்து உபசரித்து, சிரித்து வழியனுப்பி, பிறகு மாலை உங்களைச் சிரித்து வரவேற்றுக் கதவைத் திறப்பது தான் குடித்தனம் என்று நான் நினைத்து விட்டேன். வீடு என்பது உடலையும் உள்ளத்தையும் நிம்மதியுறச் செய்யும் உறைவிடம் என்று அறிய வில்லை" என்று கூறிச் சிரித்தாள் மல்லிகா.

அவள் குரல் உடைந்தது. உடல் நடுங்கிற்று. பயித்தியம் பிடிக்குமுன் சிலர் அர்த்தமற்றுச் சிரிப்பதாகவும், அடக்க மாட்டாமல் அழுவதாகவும் அவன் கேள்விப்பட்டிருந்தான். அப்படித்தான் ஏதோ நடக்கப் போவதாக அவன் எதிர்பார்த்தான்.

ராகவன் திரும்பினான். ஒரு விநாடி தன் மோவாயைத் தடவிக் கொண்டே நின்றான். பிறகு இரு கைகளையும் நீட்டி அவளை அருகில் அழைத்துக் கொண்டான். இலைச் சருகுபோல நடுங்கிக் கொண்டிருந்த அவளது சரீரத்தைத் தன் திண்மையான அணைப்பில் ஆசுவாசப் படுத்தினான்.

"என்னை மன்னிப்பீர்களா?" என்று கேட்டாள் மல்லிகா கம்பிய குரலில்.

"பார்ப்போம். வாயால் மன்னிப்பதில் என்ன இருக்கிறது" என்றான் ராகவன்.

"உண்மையாகச் சொல்கிறேன். நீங்கள் உங்கள் வீட்டில் எப்படிச் சுகமோ அப்படி இருங்கள். இந்த அலங்கார அமைப்பெல்லாம் எத்தனை நாட்களுக்கு? ஒரு குழந்தை இருந்தால் அது எவ்வளவு சேஷ்டை செய்யும்? உங்களை வேண்டுமானால் அடக்கி விட்டேன். அப்பொழுது என்னசெய்வேன்?" என்று லஜ்ஜையுடன் அரைக் கண்ணால் நிமிர்ந்து பார்த்தாள் மல்லிகா.

ராகவன் சிரிக்கவில்லை. அவளைத் தன் பிடியினின்று விட்டு விட்டான். அவன் மார்பினின்று ஒரு பெருமூச்சு வந்தது.

"உனக்குத்தான் அந்த விஷயமே பிடிக்காதே? அதுதான் சாபம் என்று கருதுவாயே?" என்றான் அவன்.

அன்று அத்தை கூறியதையும் அவள் பதிலையும் அவன் கேட்டுக் கொண்டிருந்தான். அத்துடன் நிற்காமல் அத்தை ஊருக்குப் போன பிறகு தான் கூறியது இப்பொழுது மல்லிகாவுக்கு நினைவு வந்து துன்பப் படுத்தியது.

"போதுமே. இந்த ஒரு மாத வாழ்வே உயிர் போய் விட்டது. இனியும் இதேபோல் பதினாறும் பெற்று நான் தவிக்க வேண்டுமாம். செ, செ, செ!" என்று அன்றுதான் கூறியது இன்று அவள் காதிலேயே நாராசம் போல ஒலித்தது. அவள் மெள்ளச் சமாளித்துக் கொண்டாள்.

"அது முன்பு. இன்று முதல் நான் புதிய மல்லிகாவாகி விட்டேன்" என்றாள்.

ராகவன் அவளைப் பார்த்தான். சிறிது யோசித்தான். இவ்வளவு மனம் நெகிழ்ந்து பேசுபவளைத் தொந்தரை செய்யக் கூடாது என்று அவன் எண்ணினானோ என்னவோ? பேசாமல் படுக்கையில் போய்ப் படுத்தான்.

**ம**றுநாள் காலை ராகவன் கூடத்தில் உட்கார்ந்து கொண்டு குடை ஒன்றைச் சரி

## பைல் பீன்ஸ் உங்களுக்கு ஆனந்தத்தை மீண்டும் அளிக்கும்

டாக்டர்கள் அங்கீகரித்துள்ள பைல்பீன்ஸ் என்னும் டானிக் மலசுத்தி மருந்து உங்களை யௌவனமாகவும் ஒல்லியாகவும், ஆரோக்கியமாகவும், சுறுசுறுப்பாகவும் இருக்கச் செய்ய வல்லது. பைல் பீன்ஸ் உங்களை வசீகரத் தோற்றத்தோடும் வனப்போடும் தென்படச் செய்யும். பைல் பீன்ஸ் மலச்சிக்கலை அகற்றுகிறது. சரும கோளாறு, சிர அயர்ச்சி, மற்றும் உங்கள் சந்தோஷத்தை கெடுக்கும் பல பிணிகளை போக்கடிக்கிறது. டாக்டர்கள் அங்கீகரித்துள்ள பைல்பீன்ஸை இன்றே உட்கொள்ளத் தொடங்குங்கள்.

டாக்டர்கள் அங்கீகாரம் பெற்ற பைல்பீன்ஸை உட்கொண்டு வாழ்க்கை இன்பத்தைப் பரிபூரணமாகப் பெறுங்கள்.

BILE BEANS

# பைல் பீன்ஸ்

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

---

Aryan

Regd.

## இந்தியாவிலேயே சிறந்த டூத் பிரஷ்

பிளாஸ்டிக் குழாய்களில் இப்பொழுது கிடைக்கும்.

---

# விச்ராந்தியாக இருங்கள்...

# டன்லப்பில்லோ

[illegible] நுரை மெத்தைகள், தலையணைகள், திண்டுகள் குளுமை, சௌகரியம், சுகாதாரம், நாற்றமின்மை முதலிய குணங்களுடன் அசாதி உழைப்பும் கூடியவை.

இங்கிலாந்து இந்தியாவில் தயாரிக்கப்படுகிறது.

டன்லப் ரப்பர் கம்பெனி (இந்தியா) லிமிடெட்.

57/B, பீ ஸ்டிரீட் தெரு, கல்கத்தா-16.

[illegible], பம்பாய் 7.

[illegible], டில்லி

4/29, [illegible] ரோடு, சென்னை-2.

[illegible], கல்கத்தா.

சிரீ [illegible] 8-45 மணிக்கு [illegible] 25 நிமிடங்கள் [illegible] டன்லப்பில்லோ [illegible]

DPX HA TM

பார்த்துக் கொண்டிருந்தான். மல்லிகா தன் சரத்தலையை ஆற்றியவாறே அங்கே வந்தாள்.

"இன்றைக்குக் கந்த ஷஷ்டி" என்றான்.

"கோவிலில் வேல் வாங்குகிற உற்சவமோ அல்லது சூர சம்ஹாரமோ போய்ப் பார்க்க வேண்டுமாக்கும். போய்விட்டு வாயேன்."

மல்லிகாவுக்குச் சிறிது ஏமாற்றம்தான். ஆயினும் சிரித்துச் சமாளித்தாள். "நான் விரதம் இருக்கப் போகிறேன்" என்றாள்.

"எதற்கோ?" என்று கேட்டான் ராகவன் அவள் முகத்தை ஆராய்ந்தபடி.

"எதற்கோ! இன்னும் சில மாதமானால் தெரியும்..." என்று பதிலளித்தாள் மல்லிகா.

இருவரும் தெளிவுடன் சிரித்தனர்.

"சுமங்கலிப் பிரார்த்தனை ஒன்று செய்து, சாரதா அக்காவுக்கு ஒரு பட்டுப் புடவை வாங்கித் தரவேண்டும்" என்றாள் மல்லிகா.

"அவள் என்ன உயர்த்தி?" என்றான்.

"இதே ஊரில் இருக்கிறாள். வீட்டில் பிறந்த பெண். எனக்கு அவளை மிகவும் பிடிக்கும்" என்றாள் மல்லிகா.

"அப்படியே செய்வோம். எனக்கும் அவளை மிகவும் பிடிக்கும்" என்று பதிலுரைத்தான் ராகவன்.

தன் வாழ்வைத் துலங்க வைத்த சாரதாவை மல்லிகா தெய்வமெனப் போற்றினாள்.

# பாரிஸ் நகரத்து மாணவர்கள்

ஆகஸ்டு 23-ம் தேதிய கல்கி இதழில் வெளியாகியிருக்கும் "கவர்னரின் மகன் கூலி வேலை செய்கிறான்" என்ற கட்டுரையைப் படித்தேன்.

இதே அதிசயம் இன்னொரு நாட்டிலும் இருக்கிறது. நான்கு வல்லரசு நாடுகளில் ஒன்றான பிரான்சு பல துறைகளிலும் அதியற்புதமாக முன்னேறியிருக்கிறது. மேற்கு நாகரிகத்தின் உற்பத்திச் சாலை என்று சொல்லப்படும் பாரிஸ் நகரில் மாணவர்கள் பரிதவிக்கிறார்கள். எதற்காக கல்லூரிப் படிப்புக்குச் சம்பளம் கொடுக்க! அதைக் கூலி வேலை செய்து சம்பாதிக்க!

"மிரர்" (Mirror) என்ற பிரபல பிரிட்டிஷ் மாதப் பத்திரிகையின் 14-வது நம்பர் இதழில் "மாணவ வாழ்க்கையின் கஷ்டம்" என்ற கட்டுரையைச் சமீபத்தில் படித்தேன். அந்தக் கட்டுரையை எழுதியவர் (Jean Mauduit) ஜீன் மாவ்டட் என்பவர். பாரிஸ் கல்லூரி மாணவர்களின் சம்பள, செலவுக் கஷ்டங்களைப் பொதுவாக விவரித்து விட்டு, தமது கல்லூரி நண்பன் ஒருவனது கஷ்டத்தை யெடுத்து எழுதியிருக்கிறார். தமது நண்பனைக் குறித்து அவர் சொல்வதைச் சற்றுக் கேளுங்கள்:

"என்னுடைய நண்பர் ஜேகஸ் பாரியர், மாகாண நிதி இலாகா குமாஸ்தா ஒருவரின் மகன். அவன் சரித்திரத் துறையில் பட்டம் பெறுவதற்கான பரீட்சை எழுத வெகு தூரத்திலுள்ள தனது மாகாணத்திலிருந்து வந்திருக்கிறான்."

ஜேகஸ் பாரியருக்கு ஒவ்வொரு மாதமும் படிப்புக்காக ஆகும் செலவை விவரித்துவிட்டு ஜீன் மாவ்டட் மேலும் சொல்லுகிறார்:

"ஒரு மாணவனுக்குச் சராசரி படிப்புக்காக மாதம் ஒன்றுக்கு 7500 பிராங்குகள் ஆகின்றன. இதில் மற்றச் சில்லறைச் செலவுகள், சேராது! இதன்படி ஜேகஸும், அவனைப் போன்ற மற்ற மாணவர்களும் மாதாமாதம் 9000 பிராங்குகள் செலவழிக்கின்றனர். அநாவசியச் செலவு செய்யாமல் இருந்தால்தான் இவ்வளவாவது ஆகும்."

கல்லூரி மாணவர்களின் செலவுக் கஷ்டத்தைப் புள்ளி விவரத்தோடு விளக்கிவிட்டு ஜீன் மாவ்டட் கட்டுரையை மேலே தொடர்கிறார்:

"ஜேகஸின் தந்தை மாதம் 16,472 பிராங்குகள் சம்பாதிக்கிறார். எல்லாச் செலவுகளும் இதிலேயே தான். இதனால் ஜேகஸ் வெளியே போய் வேலை செய்ய வேண்டியிருக்கிறது. ஒவ்வொரு சமயம், வறுமையில் அல்லல்படும் மாணவர்கள், பணக்காரக் குடும்பங்களில் உள்ள இளைஞர்களுக்கு 'டியூஷன்' சொல்லிக் கொடுத்து அதன் மூலம் வரும் வருவாயைக் கொண்டு செலவைச் சரிக்கட்டிக் கொள்வார்கள். ஆனால், தற்சமயம் நிலவும் கஷ்ட தசையில் இந்த வசதியும் இப்போது மாணவர்களுக்குக் கிடைப்பதில்லை. இதனால் மாணவர்கள் இதே போன்று வேறு பல அலுவல்களைக் கவனிக்கின்றனர். செய்திப் பத்திரிகைகளை விற்பது, புத்தகக் கடைகளில் வேலை செய்வது போன்ற பல தொழில்களைச் செய்கின்றனர். ஆன்ட்ரு என்ற 20 வயது சட்டக் கல்லூரி மாணவன் ஒரு இரவு விடுதியில் பாத்திரங்களைக் கழுவுகிறான். ஜேகஸ் என்ற 19 வயது மாணவன், பழ மார்க்கெட்டில் லாரிகளிலிருந்து காய்கறிகளை இறக்குகிறான். என்னுடைய நண்பன் ஜேகஸுக்கு அதிர்ஷ்டவசமாக ஒரு அரசாங்க மேற்பார்வையிடும் வேலை கிடைத்தது.

"சில சமயம், மாணவர்கள் கொஞ்ச நேரம் குழந்தைகளைப் பார்த்துக் கொள்ளும் வேலையும் மேற்கொள்வார்கள். அதாவது ஒரு குடும்பத்தில் கணவனும்-மனைவியும் மாலை நேரம் சினிமாவுக்கோ மற்றக் கேளிக்கைகளுக்குப் பார்க்கப் போகவேண்டும், அந்த வேளையில் குழந்தைகளைப் பார்த்துக் கொள்பவர்கள் யாராவது இருக்க மாட்டார்களா என்று ஏங்குவார்கள். அந்தப் பொறுப்பை சிறுதொகைக்கு மேற்கொள்வார்கள்!

"மாணவர்களில் 70 சத விகிதம் பேர் தங்கள் வாழ்க்கைக்குப் போதிய ஊதியம் சம்பாதித்துக் கொள்ள, மேற்கண்ட வகைகளில் ஏதாகிலும் வேலை செய்ய வேண்டியதாகத்தா னிருக்கிறது."

ஜீன் மாவ்டட் எழுதியுள்ள கட்டுரையில் நாம் காணவேண்டிய முக்கிய அம்சங்கள் இதுதான்.

வெறும் ஏட்டுப் படிப்பைப் பல வருடம் தண்டச் செலவு செய்து படித்து விடும் மாணவன், உடலுழைப்பை உதாசீனம் செய்து, சர்க்கார் காரியாலய குமாஸ்தா இயந்திரமாக மாறி விடுவதையே தனது லட்சியமாகக் கொண்டிருக்கிறான். மாணவர்களின் மனப்பான்மை இப்படியாவதற்குக் காரணம் மெக்காலே துரை அமைத்த குமாஸ்தாக் கல்வி முறையாகும்.

எதிர்கால உலகில் அடி யெடுத்து வைக்கப் போகும் இன்றைய சின்னஞ் சிறு குழந்தைகள், இனி வரும் காலத்திலாவது உடலுழைப்பைக் கௌரவித்து அதைத் தொழிலாகக் கொள்ள வேண்டும் என்ற சீரிய நல் நோக்கம் ராஜாஜியின் புதிய கல்வித் திட்டத்தில் கட்டுண்டிருக்கிறது. உடலுழைப்பின் மதிப்பே இத் திட்டத்தின் உன்னத நிலைக்குச் சான்று. —எ. அ. அனந்தகிருஷ்ணன்.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras

